# நூல் விபரம்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | மள்ளர் சமூக வரலாறு |
| ஆசிரியர் | : | தே. ஞானசேகரன் |
| வெளியீடு | : | தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம்<br>8சி ஆசாரிமார் குறுக்குத்தெரு<br>சோழவந்தான் 625 214.<br>மதுரை மாவட்டம். |
| வெளியீடு எண் | : | 1 |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| பொருள் | : | சமூகப் பண்பாட்டு வரலாறு |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பாண்டு | : | டிசம்பர் 2001 |
| நூல் அளவு | : | 1 x 8 |
| அச்சு அளவு | : | 10 புள்ளி |
| பக்கங்கள் | : | 111 + ix |
| விலை | : | ரு.40.00 |
| கணிப்பொறி வடிவம் | : | கொ.செ.ஐயப்பன்<br>உமா டிடிபி சென்டர், கல்வீரம்பாளையம்<br>கோவை (தொலைபேசி 426666) |
| அச்சகம் | : | மணி ஆப்செட்<br>112 பெல்ஸ் ரோடு<br>சென்னை 600 005<br>(தொலைபேசி :8555249; 8588186) |
| அட்டை ஓவியம் | : | ச. முத்துவேல் |

# அணிந்துரை

**மா. கிருஷ்ணசாமி,** I.R.S.,
இணை ஆணையர்,
வருமான வரித்துறை
சென்னை.

தமிழகத்தின் சமூக வரலாறு (Social History) முறையாக எழுதப்படவில்லை. குறிப்பாக மள்ளர்களின் வரலாறு முறையாக எழுதப்படவில்லை என்ற மனக்குறை எங்களைப் போன்றோருக்கு உண்டு. இதனை நிவர்த்தி செய்யும் பணியினை **தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம்** ஏற்றுக் கொண்டு *'மள்ளர் சமூக வரலாறு'* எனும் **முனைவர் தே. ஞானசேகரன்** எழுதிய இந்நூலை வெளியிட்டுள்ளது பாராட்டுக்குரியது. இவர் இதற்கு முன்பே மள்ளர்கள் குறித்த பல நூல்களை எழுதியுள்ளவர். இந்த நூலும் அவ்வரிசையில் சிறப்புடன் அமைந்துள்ளது. இந்நூலில் இடம் பெற்றுள்ள 12 கட்டுரைகளையும் படிக்கும்போது தமிழகத்தின் சமூக வரலாற்றோடு மள்ளர்களின் வரலாறு எவ்வகையில் பின்னிப்பிணைந்து காணப்படுகின்றன என்பதை அறிய முடியும். மள்ளர்களின் வரலாற்றைத் தொகுப்பது தமிழ்ச் சமூகத்தின் அதாவது தமிழகத்தின் வரலாற்றைத் தொகுப்பதாக அமைகின்றது என்பதை இந்நூலைப் படிப்போர் உணர்வர்.

சங்க காலத்தில் மள்ளர், உழவர், களமர், கடைசியர் என்று பெயர் பெறும் இம்மக்கள் இன்று தேவேந்திர குல வேளாளர் என்று பெயர் பெறுவது ஏன் என்ற பலரின் கேள்விக்கு இந்நூலின் முதற்கட்டுரையான **"தேவேந்திர குல வேளாளர் பெயர்க் காரணம்"** எனும் கட்டுரை பதிலளிக்கின்றது. நெல் வேளாண்மை குறித்த இவர்களின் வேளாண் பண்பாடு பல தொன்மக் கதைகளில் திரும்பத் திரும்பச் சொல்லப்படுவதை **"தேவேந்திர குல வேளாளர் தோற்றக் கதைகள்"** என்னும் இரண்டாம் கட்டுரை ஆராய்கின்றது. கொங்கு நாட்டில் தேவேந்திரர்கள் பட்டக்காரர் பட்டமுடன் ஒரு தனித்த சமூக ஆட்சி முறையை இன்னும் செய்து வருவதை ஒரு கட்டுரை பேசுகின்றது.

தமிழகத்தில் தென் மாவட்டங்களில் அடிக்கடி ஏற்படும் சாதிய மோதல்களுக்கான காரணங்களை மிக விரிவாக ஆய்வு செய்து அதனைத் தீர்ப்பதற்கான காரணங்களைக் கண்டறிந்து **'தென் மாவட்ட சாதி மோதல்கள்: காரணங்களும் தீர்வுகளும்"** என்ற கட்டுரையில் சொல்லியுள்ளார் இந்நூலாசிரியர்.

நாட்டுப்புற வழக்காறுகளில் உழைக்கும் மக்களின் உன்னத வரலாறு ஆவணமாகப் பொதிந்து கிடப்பதை "**நாட்டுப்புற வழக்காறுகளில் மக்கள் வரலாறு**" எனும் கட்டுரை கோடிட்டுக் காட்டியுள்ளது.

மள்ளர்களின் வழிபாட்டு மரபுகளை மூன்று கட்டுரைகள் பேசுகின்றன. வழிபாட்டு மரபுகளில் இம்மக்களின் வேளாண் பண்பாடு எவ்வகையில் இடம் பெற்றுள்ளது என்பதை இக்கட்டுரைகள் படம்பிடித்துக் காட்டியுள்ளன என்றால் மிகையாகாது.

"**ஏர்மங்கலமும் உழத்திப் பாட்டும்**" எனும் கட்டுரை இம்மக்களிடம் பண்டைய காலத்தில் வழங்கிய உழத்திப் பாட்டு எனும் இலக்கிய வகையை மீட்டுருவாக்கம் செய்து தருகின்றது. இந்த உழத்திப் பாட்டு இன்று இல்லை. அதற்குப் பதில் இதனடியாகத் தோன்றிய பள்ளு நூல்கள் ஏன் ஏசல் இலக்கியமாக வழங்கி வருகின்றன என்பதை மிக விரிவாக ஆய்வு செய்துள்ளார் **தே. ஞானசேகரன்.**

"**நெல் சார்ந்த கலைப் பொருட்கள்**" எனும் கட்டுரையில் நெற்கதிரைக் கொண்டு செய்யப்படும் '**அலகு கதிர்**' எவ்வகையில் எல்லாம் இம்மக்களின் பண்பாட்டோடு இணைந்து காணப்படுகின்றது என்பதை விளக்குகின்றது. "**நாட்டுப்புறவியலும் வேளாண்மை அறிவியலும்**" எனும் கட்டுரை இம்மக்களின் வேளாண் அறிவியலை விளக்கும் கட்டுரையாகும்.

இவ்வகையில் இந்நூலில் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு கட்டுரையும் சிறந்த நெல் மணிகளால் கோர்க்கப்பட்ட அழகிய மாலை போன்று அமைந்து நெல்லின் மக்களான மள்ளர்களின் சமூகப் பண்பாட்டு வரலாற்றைச் சொல்கின்றன. இந்நூலாசிரியர் இது போன்ற பல நூல்களை எழுதித் தமிழ்ச் சமூகத்திற்குத் தொண்டாற்றிட வாழ்த்துகின்றேன்.

நட்புடன்

**(மா. கிருஷ்ணசாமி)**

# பதிப்புரை

**இரா. முத்துமணிதேவேந்திரர் M.Sc. B.L.**
தலைவர், தமிழ் பண்பாட்டு ஆய்வு நிறுவனம்
8சி ஆசாரிமார் குறுக்குத்தெரு
சோழவந்தான், மதுரை மாவட்டம் - 625 214

ஒரு நாட்டின் வரலாறு என்பது இதுவரை இந்த நாட்டை யார் யாரெல்லாம் ஆட்சி செய்தார்கள். அவர்கள் எத்தனை போர்களை நிகழ்த்தினார்கள் அவர்கள் மேற்கொண்ட ஆட்சி நிர்வாக முறை என்னென்ன என்று பட்டியலிடுவதாகவே இருந்து வந்துள்ளது. ஆனால், இந்த ஆட்சியின் கீழ் வாழ்ந்த மக்கள் யார்? அவர்கள் பண்பாடு என்ன? அவர்கள் வாழ்க்கை முறை என்ன? அவர்கள் இந்த ஆட்சியை எவ்வாறு எதிர்கொண்டார்கள்? இந்த நாட்டின் நலனிற்காக அவர்கள் செய்த தியாகங்கள், உழைப்புக்கள் என்னென்ன? என்பனவெல்லாம் வரலாற்று ஆசிரியர்களரல் உதாசீனம் செய்யப்பட்டு, புறக்கணிக்கப்பட்டுள்ளதை தமிழக வரலாற்றைப் படிப்போர் உணர்வர். இந்த நாட்டில் ஏற்படும் பல பிரச்சினைகளுக்கு இந்த நாட்டின் மேன்மைக்காக உழைக்கும் மக்கள் புறக்கணிக்கப்படுவதும் ஒரு காரணமாகும்.

பல காலங்களாக உழைக்கும் மக்களை இன அடிப்படையில் தனித்தனியே பிரித்து அவர்களுக்குள் ஓர் உள்முரணை ஆட்சியாளர்கள் ஏற்படுத்தி வைத்துள்ளனர். இவையெல்லாம் களையப்பட்டு, உழைக்கும் தமிழ் மக்களெல்லாம் நாம் ஒரு தாய் மக்கள் . இந்த நாடு எங்களுடையது, இந்த மொழி எங்களுடையது, இந்த நாட்டின் வளமும் வாழ்வும் எங்களுடையது என்று உணர்வுகளால் ஒன்றுசேரும் நாள் மிக விரைவில் வரவேண்டும். இந்த நல்ல நாளுக்காக ஏங்கி அதனை அடையும் முயற்சியில் ஒன்றாகவே "மள்ளர் சமூக வரலாறு" எனும் இந்த நூலை "தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம்" வெளியிடுகிறது. இந்த நூலைப் படிப்போர் இந்த நாட்டின் வளத்தோடும் வாழ்வோடும், வரலாற்றோடும் உழைக்கும் மக்களான மள்ளர்கள் எவ்வாறெல்லாம் உறவுடையவர்களாய் காணப்படுகின்றனர் என்பதை அறிவர். இந்த நூலை "தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம்" தனது முதல் வெளியீடாக வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சியடைகின்றது. இந்த நூலை உருவாக்கித் தந்துள்ள சகோதரர் முனைவர் தே. ஞானசேகரனைப் பாராட்டு கின்றேன்.

அன்புடன்
இரா முத்துமணிதேவேந்திரர்

**(இரா. முத்துமணிதேவேந்திரர்)**

# முன்னுரை

**முனைவர் தே. ஞானசேகரன்**
தமிழ் இணைப் பேராசிரியர்
பாரதியார் பல்கலைக்கழகம்
கோவை - 641 046.

என் பல்கலைக்கழக ஆசிரியப் பணியூடே என் ஆய்வுப் பணியாக **"மள்ளர்களின் சமூகப் பண்பாட்டு வரலாற்றை"** ஆய்வு செய்வது என்று 1995க்குப் பின்னர் ஆகிப்போனது. இது எப்படி என்னுள் வந்தது என்பதை விட நான் இப்போது இந்த ஆய்வுப் பொருளாகவே ஆகிப்போனேன். பல பல்கலைக்கழகங்களில், ஆய்வு மன்றங்களில் கருத்தரங்கிற்காக நான் அழைக்கப்படும் பொழுதெல்லாம் நான் தொடர்ந்து சிந்திக்கும் இந்த மள்ளர்களின் பண்பாடு குறித்தே பேசினேன், எழுதினேன். பல விமர்சனங்கள், சாடை மாடையாய் இருந்தாலும் என்னை பல அறிஞர்கள் இந்தச் சமூகவியல் ஆய்வில் தொடர்ந்து ஈடுபட ஊக்குவித்தனர். அவர்களுக்கெல்லாம் நான் நன்றியுடையவன் ஆவேன். அவ்வகையில் பல்வேறு கருத்தரங்களில் நான் எழுதி, வாசித்த கட்டுரைகளின் தொகுப்பாகவே இந்நூல் அமைந்துள்ளது.

இவ்வகையில் தனித்தனி கட்டுரைகளாக இந்நூல் அமைவதால் சில மேற்கோள்கள், சில கருத்துக்கள் திரும்பத்திரும்ப வருவது போன்று அமைவது தவிர்க்க முடியாதது ஆகிவிட்டது. ஆனால் இந்நூலில் இடம் பெற்றுள்ள 12 கட்டுரைகளும் இம்மக்களின் பல்வேறு பண்பாட்டுக் கூறுகளை பல நிலைகளில் நிரல்பட எடுத்தியம்பியுள்ளன என்ற நம்பிக்கை எனக்கு இருக்கின்றது. இதனை இந்நூலைப் படிக்கும் நீங்களும் உணர்வீர்கள், இந்த நூல் உழைக்கும் மக்களின் உன்னத வரலாறு பேசும் நூல் என்று பாராட்டி அணிந்துரை வழங்கியுள்ள என் இனிய சகோதரர், சமூகச் சிந்தனையாளர் மா. கிருஷ்ணசாமி I.R.S அவர்களுக்கு என் நன்றிகள் என்றும் உரியதாகும். இந்த நூலை வெளியிடும் பொறுப்பினை ஏற்றுக் கொண்டு சிறப்புடன் வெளியிட்டுள்ள தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனத்தின் தலைவர் அன்புச் சகோதரர் வழக்கறிஞர் இரா. முத்துமணிதேவேந்திரர் M.Sc. B.L. முனைவர் ஆ. முத்தையா மற்றும் தமிழ்ப்பண்பாட்டு ஆய்வு நிறுவனத்தின் பொறுப்பாளர்கள் அனைவருக்கும் என் நன்றிகள். இந்நூலினை கணினி அச்சுக்கோர்த்து உதவிய நண்பர் கொ.செ. ஐயப்பன் அவர்களை நன்றியுடன் இங்கே நினைக்கின்றேன்.

இந்த நூலை தமிழ்கூறும் நல்லுலகம் திறனாய்ந்து ஏற்றுக்கொள்ளுமென்று நம்புகின்றேன்.

இப்படிக்கு

**(தே. ஞானசேகரன்)**

தமிழக வரலாறும் பண்பாடும் மக்கள் வரலாறாக
முறையாக எழுதப்பட வேண்டும் என்பதில்
தீராத தாகமுடைய
சமூகச் சிந்தனையாளர்



மா. கிருஷ்ணசாமி IRS அவர்களுக்கு
அன்புக் காணிக்கை

# பொருளடக்கம்

# 1. தேவேந்திரகுல வேளாளர் பெயர்க்காரணம்

சங்க காலத்தில் மள்ளர் என்றும் பிற்காலத்தில் பள்ளர், தேவேந்திர குல வேளாளர் என்றும் அறியப்படும் இம்மக்கள் இம் மண்ணின் அசல் மைந்தர்கள் ஆவர், தமிழகத்தில் வாழும் பல்வேறு பூர்வீகக் குடிகளில் *அட்டவணைச் சாதியினர்* (Scheduled Castes) பிரிவில் சேர்க்கப்பட்டுள்ள இம்மக்களின் தாய்மொழி தமிழ் ஆகும். இவர்களின் முதன்மைத் தொழில் வேளாண்மை ஆகும். சங்க இலக்கியங்களில் மள்ளர் என்று அறியப்படும் இவர்கள் தமிழில் மகரம், பகரமாக ஒலி மாற்றம் பெறும் என்பதற்கேற்ப பிற்காலக் கல்வெட்டுக்களிலும், பள்ளு நூல்களிலும் பள்ளர் என்ற பெயரில் குறிக்கப்பட்டுள்ளனர். இன்று இவர்கள் தங்களைத் "தேவேந்தில குல வேளாளர்" என்று அழைத்துக் கொள்கின்றனர். இப் பெயர் இம்மக்களுக்கு ஏற்பட்ட விதம் குறித்து இக்கட்டுரை விளக்க முயல்கின்றது.

### *மள்ளர்-பள்ளர்*

"சங்க இலக்கியத்தில் வரும் வீர இனத்திற்குப் பேர்போன மள்ளர் பள்ளரின் மூதாதையர் ஆவர்" என்று வரலாற்றறிஞர் கே.ஆர். அனுமந்தன் குறிப்பிடுவார். டாக்டர் ஜி. ஒப்பர்ட் மள்ளர் பள்ளர் ஆனது உச்சரிப்பு வேறுபாடே ஆகும் என்பார். மொழி ஞாயிறு தேவ நேயப் பாவாணர் பள்ளர் என்பது மள்ளர் மருத நிலத்தில் வாழும் உழவர் என்பார். மேற்கண்ட அறிஞர்களின் கருத்துக்களிலிருந்து இன்று பள்ளர் என்று குறிக்கப்படும் இனத்தவரே சங்க காலத்தில் மள்ளர் என்று குறிக்கப் பட்டனர் என்று கருத இடமுண்டு. இக்கருத்தை வலியுறுத்துவதாகவே நிகண்டுகள், பள்ளு நூல்களின் கருத்துக்களும் அமைகின்றன.

### *திவாகர நிகண்டு*

அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந் தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர்

### *பிங்கல நிகண்டு*

செருமலை வீரரும் திண்ணியோரும்
மருத நில மக்களும் மள்ளர் என்ப

என்றவாறு நிகண்டுகள் மள்ளரைப் போர் வீரரென்றும் உழவரென்றும் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது.

### *மருத நிலமும் மள்ளரும்*

மள்ளர் என்போரை வீரராக, உழவராகக் காட்டும் சங்க இலக்கியம் மருத நில வாழ்க்கையை உழவர் வாழ்க்கையாகக் காட்டத் தவறவில்லை. சங்க இலக்கியத்தில் குறிக்கப்படும் மருத நில மக்கள் மள்ளர், உழவர், உழத்தியர், கடைசியர், ஆற்றுக்காலாட்டியர் என்று குறிக்கப்படுகின்றனர். இன்று தேவேந்திர குல வேளாளர் என்று அறியப்படும் இனத்தவர்களின் தொழில் வேளாண்மை ஆகும். இவர்கள் இன்றும் தங்களின் கடவுள் தேவேந்திரன் (வேந்தன்) என்று வணங்கி வருவதும் இவர்கள் சங்க கால மருத நில மக்களின் வழித் தோன்றல்கள் என்பதை வலியுறுத்தும்.

### *தேவேந்திரகுல வேளாளர் பெயர்க்காரணம்*

வட இந்தியாவின் பண்பாட்டு வரலாறு (Social History of North India) என்பது வட மொழியில் புனையப்பட்ட வேதகால இலக்கியங்கள், இதிகாசங்கள் புராணங்களிலிருந்து தொடங்குவது ஆகும். தமிழ்நாட்டின் பண்பாட்டு வரலாறு (Social History of Tamil Nadu) தமிழில் எழுதப்பட்ட தொல்காப்பியம், சங்க கால இலக்கியங்களிலிருந்து தொடங்குவது ஆகும். தமிழகத்தில் வட மொழியாளர்களின் ஆதிக்கம் ஏற்படும் முன்னரே இங்கு நாகரீகமும், அரசியலும் மேலோங்கி இருந்தது. இது குறித்து டாக்டர் க. கைலாசபதி வருமாறான கருத்தைச் சொல்வார்.

"சிறு சிறு குலங்களாகவும், குடிகளாகவும் குலங்களின் இணைப்புக் களாகவும் சிதறிக் கிடந்த தமிழகத்து மக்கள் ஓயாத போரில் ஈடுபட்டிருந்தனர். ஓயாத போர், படையெடுப்பு, ஊர் அழிவு, அரசுரிமைச் சண்டை ஆகியவற்றின் அடிப்படையிலேயே சங்ககாலத் தமிழகத்திலே மெல்ல மெல்ல அரசுகள் தோன்றலாயின. சங்க காலத்தில் அரசு செலுத்திய பேரரசரும் தொடக்கத்தில் சிறு கூட்டத்தினருக்குத் தலைவராக இருந்திருத்தல் வேண்டும். சங்க காலத்தில் நடுப்பகுதியில் அவர் அரசரான நிலையை அடைந்தனரென அக்கால நூல்கள் வாயிலாக அறிகின்றோம். ஈற்றில் பொருளாதாரத்திலும் தொகையிலும் சிறந்த உழவர் (மருத நிலத்) தலைவனே தமிழ் நாட்டு அரசியலில் வலிமை

சிறந்து விளங்கினான். இந்தச் சூழலில்தான் வட மொழியாளர்களின் ஆதிக்கம் தமிழகத்தில் தோன்றியது" (பண்டைத் தமிழர் வாழ்வும், வழிபாடும் ப.96) இக்கருத்தின்படி வட மொழியாளர்களின் செல்வாக்கு தமிழகத்தில் ஏற்படும் முன்னரே மருத நில உழவர் குடியினர் அரசியலில் வலிமை பெற்று விளங்கினர் என்பதும் மருத நிலத் தலைவன் வேந்தன் (தேவேந்திரன்) என்று சுட்டப்பட்டான் என்பதையும் மனதில் கொள்ள வேண்டும்.

பண்டைத் தமிழ்ச் சான்றோர் நிலத்தை நால்வகையாகப் பாகுபாடு செய்தனர். மலையும் மலை சார்ந்த பகுதியைக் குறிஞ்சி என்றும், காடு சார்ந்த பகுதியை முல்லை என்றும், வயலும் வயல் சார்ந்த பகுதியை மருதம் என்றும், கடலும் கடல் சார்ந்த பகுதியை நெய்தல் என்றும் பிரித்துக் கண்டனர். அதனடிப்படையில் கடவுளர்களையும் பிரித்துக் கண்டனர். இதனைத் தொல்காப்பியம்

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெரு மணல் உலகமும்
முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

என்று குறிப்பிடும். இங்கு குறிக்கப்படும் வேந்தனே (வயலும் வயல் சார்ந்த) மருத நிலத்தின் கடவுள் ஆவான், தொல்காப்பியரின் இலக்கணப்படி மருத நிலத்தின் கடவுள் வேந்தன் என்றே அறிகின்றோம். அப்புறம் ஏன் உரையாசிரியர்கள் மருதநிலக் கடவுளை வேந்தன் என்று குறிக்காமல் இந்திரன் என்றே குறிக்கின்றனர் என்பதற்கு மறைமலையடிகள் வருமாறு விளக்கம் தருவார்.

"ஆரியர்களின் இந்திரன், இடி, மின்னல், மழை முதலியவற்றிற்குரிய தெய்வமாதலோடு, அவர்தம் பகைவரோடு போராடுங்கால் அவர்க்கு உதவி புரிந்து வெற்றியைத் தருபவனாகவும், அவர்களும் சோமபானம் (மது) விலங்கின் இறைச்சி போன்றவற்றை நிறைய உட்கொண்டு அவர் வேண்டிய நலங்களையெல்லாம் அவர்க்கு விளைவிப்பவனாகவும் சொல்லப்படுகின்றான், தமிழர் வணங்கிய இந்திரனோ (வேந்தன்) வயலும் வயல் சார்ந்த இடமுமாகிய மருத நிலத்தில் உள்ள உழவர்களால் மழையின் பொருட்டு மட்டும் வேண்டி வணங்கப்பட்ட மழைக்கடவுள் ஆவான். மழையின் பொருட்டாகவேயன்றி வேறெந்த நன்மைப் பேற்றின் பொருட்டாகவேனுந் தமிழர்களால் அவன் வணங்கப்பட்டவன்

அல்லன். இருக்கு வேதத்திலுள்ள பாட்டுக்களில் மூன்றில் ஒரு கூறு இந்திரன் மேற் செய்யப்பட்டிருத்தல் போல, தமிழ்நூல்களில் எங்கும் ஒரு பாட்டேனும் இந்திரன் மேற்செய்யப்படவில்லை. தொல்காப்பியம் முதலான மிகப் பழைய தமிழ்நூல்களில் "இந்திரன்" என்னுஞ் சொல்லே காணப்பட வில்லை. மருத நிலத்து மக்களால் கொண்டாடப்பட்ட தெய்வம் வேந்தன் என்று சொல்லப்படுகின்றது. தமிழர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் ஆரியர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் மழைக்கடவுளாதல் பற்றிப் பிற்காலத்தவரால் இவ்விருவரும் ஒருவராகக் கொள்ளப்படுவராயினர்.அவ்வாறு கொள்ளப்படினும் தமிழர்க்குரிய வேந்தனுக்கும் இருக்கு வேத ஆரியர்க்குரிய இந்திரனுக்கும் ஏதோர் இயைபும் இல்லையென்பது நன்கு விளங்கும். உற்று ஆராயுங்கால் தமிழர்க்குரிய"வேந்தன்" என்போன் தமிழர்க்குள் முதன் முதற் தலைவனாய் தோன்றி மழை பெய்யுங்காலமும் அம்மழையினுதவியாற் பயிர் செய்தற்கேற்ற வளவிய நிலமும் அந்நிலத்தைத் திருத்திச் செவ்வனே பயிர் விளைவிக்கும் வகைகளும் நன்குணர்ந்து உழவுத் தொழிலைக் கற்பித்துத் தமிழ் மக்களை மேல் நிலைக்குக் கொணர்ந்தவன் ஆதல் வேண்டுமென்பது புலப்படும். நன்றி செய்த முன்னோரை நினைத்து அவர்களைப் பரவுதல் (வழிபடுதல்) தமிழர்க்கு இயற்கையாதலால் அவர்களின் வழியில் வந்த மருதநிலத்து உழவர் முதல் வேந்தனான அவனது ஆவியை வேண்டி வணங்குவரானார் என்பர்". (வேளாளர் நாகரீகம். ப.20)

பழனிப்பட்டயம், பள்ளு இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், நாட்டுப் புறக் கதைப்பாடல்கள், புராணங்கள், முதலியனவும் தேவேந்திர குல வேளாளரை இந்திரன் மரபினர் என்றே கூறுகின்றன. தேவேந்திரர்களை, இந்திரனுடன் தொடர்புபடுத்தியும், நஞ்சை வேளாண்மையைக் குறிப்பாக நெல்லை இவர்கள் தான் முதன்முதலில் உண்டு பண்ணினர் என்றவாறும் பல புராணக் கதைகள் வழங்குகின்றன. வேளாண் வாழ்க்கையை முழுவதுமாகச் சித்தரிக்கும் பள்ளுப் பாடல்களில் இம் மக்களே கதை மாந்தர்களாக விளங்குதைப் பார்க்கின்றோம். இதிலிருந்து மருத நில மக்களான மள்ளர் வழியினரே இன்றைய தேவேந்திரர்கள் என்ற கருத்தைப் பெற முடியும். இங்கு மருத நில மக்கள் மழை வேண்டி அவனது ஆவியை வழிபட்டதனால் பிற்காலத்தில் மழை வேண்டி வழிபட்ட ஆரியர்களின் தெய்வமான இந்திரனும் ஒன்றெனக் கருதப் படலாயினர்.

தமிழர்களின் கடவுள் கோட்பாடு முன்னோர்களின் வழிபாடு **(Ancestoral Worship)** என்பதை நாம் நினைய வேண்டும். தமிழர்கள் நில அடிப்படையில் நால்வகை நிலத்துத் தெய்வங்களை வணங்கினர். "இந்த நால்வகை நிலத்துத் தெய்வங்களும் அந்தந்த நிலத்து மக்களுக்குத் துணை செய்த வீரர்களின் தலைவராக இருக்கலாம்"என்று சாமி சிதம்பரனார் குறிப்பிடுவதும் (பழந்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.31) இங்கு கருதத்தக்கது. இக்கருத்துக்கள் தமிழர்கள் நில அடிப்படையில் தெய்வங்களைப் பிரித்து வழிபட்டமையைப் புரிய உதவும். இங்கு நாம் கருத வேண்டியது மருத நிலத்துக் கடவுளான வேந்தன் ஆரியக் கலப்பு ஏற்பட்ட பின்னர் புராணத்துடன் தொடர்புடைய இந்திரனுடன் சேர்த்துப் பேசப்பட்டான். பின்னர் வேந்தன், இந்திரனாகி, பின்பு தேவேந்திரனாகி மருத நிலத்து மக்களான தேவேந்திர குல வேளாளர்க்கு முழுமுதற் கடவுளாக விளங்கியிருக்க வேண்டும். ஆக தேவேந்திரகுல வேளாளர்களுடன் பண்பாட்டு அடிப்படையில் தொடர்புடையவன் மருதநிலக் கடவுளான வேந்தன் (இந்திரன்) தானே தவிர புராணத்துடன் தொடர்புடைய கடவுள் இல்லை. ஆக ஆரியர்களின் கடவுள் இந்திரன் வேறு; மருத நிலக்கடவுள் இந்திரன் வேறு என்பதே இக்கட்டுரை எழுதப்பட்டதன் நோக்கமாகும். இருப்பினும் இந்தியப் பண்பாட்டில் எல்லாச் சமுதாயத்தின் வரலாறும் கட்டுக்கதைகளோடு சம்மந்தப்பட்டு வழக்கிலிருப்பது போலவே சில கதைகள் இவர்களிடமும் வழக்கிலிருக்கின்றது. ஆனால் தமிழகத்தில் வேளாண்மையை உண்டு செய்து அரசியல் அமைத்து, நாகரிகத்தை உண்டாக்கிய உழவர் பெருங்குடி மக்களான தேவேந்திர குல வேளாளரின் பண்பாட்டு வரலாறு வேளாண்மையோடு தொடர்புடைய மருத நிலக்கடவுளான வேந்தனிட மிருந்தே தொடங்குகின்றது என்பதை இங்கு நினைய வேண்டும்.

( இக்கட்டுரை இந்தியப் பல்கலைக் கழகம் தமிழாசிரியர் மன்றம் 28ம் கருத்தரங்கில் மே, 1997ல் படித்தளிக்கப்பட்டது ).

OOO

# 2. தேவேந்திரகுல வேளாளர் தோற்றக் கதைகள்

இக்கட்டுரை தேவேந்திரகுல வேளாளரிடம் வழக்கிலுள்ள அம்மக்களின் தோற்றம் குறித்துச் சொல்லப்படும் தோற்றக் கதைகள் (Origin Myth) குறித்து விளக்க முற்படுகின்றது. இதுவரை இம்மக்கள் தோற்றம் குறித்துக் கிடைத்துள்ள தொன்மங்கள் 12 ஆகும். இக்கதைகளின் சுருக்கம் வருமாறு.

### *கதை 1*

தேவேந்திரனுக்கும் நீர்நிலையில் உள்ள தாமரையில் உரையும் திருமகளுக்கும் பிறந்த குழந்தையின் வழியினரே தேவேந்திரர்கள் ஆவர்.

### *கதை 2*

வேறொரு புராணக் கதைப்படி ஒரு காலத்தில் இந்திரனின் வியர்வை தண்ணீரில் வளர்ந்திருந்த செடியில் விழுந்ததாகவும் அதிலிருந்து ஒரு குழந்தை தோன்றியதாகவும் அக்குழந்தையே தேவேந்திரர்களுக்கு மூதாதை என்றும் சொல்லப்படுகின்றது.

### *கதை 3*

இந்திராணிக்கும் இந்திரனுக்கும் பிறந்த தேவேந்திரனைப் பள்ளிக்குப் படிக்க அனுப்ப அவன் படிக்காமல் குழிதோண்டித் தண்ணீர் பாய்ச்சி, உழவுசெய்து விளையாடினானாம். இதைக் கேள்விப்பட்ட இந்திரன் அவனைப் பூலோகத்திற்கே அனுப்பி வேளாண்மை செய்து வாழும்படி வேண்டினாராம்.

### *கதை 4*

இந்திரனுக்கும் இந்திராணிக்கும் பிறந்த தேவேந்திரன் இந்திரன் துப்பிய எச்சிலில் வயல் செய்து நெல் நட்டதாகவும் பின்பு அந்த நெல்லைப் பூமிக்குப் கொண்டுவந்து வேளாண்மை செய்ததாகவும் இவனே தேவேந்திர குல வேளாளர்களின் மூதாதை என்றும் சொல்லப் படுகின்றது.

### *கதை 5*

செங்கோட்டுப்பள்ளு தேவேந்திரகுல முதல்வன் மூவேந்தர் வேண்டுகோளின்படி மேலோகம் சென்று நெற்பயிரைக் கொண்டு வந்து பூமியில் நடவு செய்ததாகக் கூறுகிறது.

### *கதை 6*

ஒருகாலத்தில் கடவுளுக்கு அரசனான தேவேந்திரன் நீரில் வளர்ந்திருந்த வல்லக்கொடியில் விழுந்து விட்டதாகவும் உடனே அதிலிருந்து ஒரு குழந்தை உற்பத்தியானதாகவும் அக்குழந்தையே தேவேந்திரகுல வேளாளர்களின் ஆதிமுதற் குழந்தை என்றும் ஒரு கதை சொல்கிறது.

### *கதை 7*

பார்வதியும் பரமசிவனும் உலகைச் சுற்றிப் பார்க்கின்ற பொழுது பார்வதிக்கு வியர்க்கிறது. வியர்வையைத் துடைத்துப் பார்வதி கீழே எறிகிறாள். அவ்வியர்வை குளத்திலுள்ள வல்லக் கொடியில் விழுந்துவிட அங்கு ஒரு குழந்தை தோன்றுகிறது. அதைப் பார்வதியும் பரமசிவனும் எடுத்துக் கழியன் என்று பெயர் சூட்டி வளர்க்கின்றனர். இவன் மேலோகத்தில் வயல் செய்து முதன் முதலில் நெல்லைக் கண்டுபிடித்துப் பயிர் செய்கின்றான். இந்த நெல்லின் அரிசியால் செய்த சாப்பாட்டைச் சிவனுக்குப் பார்வதி பரிமாறுகிறார். சிவனும் சாப்பிட்டுவிட்டுப் பாராட்டுகிறார். சிவன் இதை எங்கே கண்டுபிடித்தாய் என்று கேட்க கழியன் தான் காடு கொண்டு வயலாக்கிய ஆயிரம் ஆயிரம் வயல்களைக் காண்பிக்கப் பரமசிவனும் வயல்களில் நெல் விளைந்திருப்பதைப் பார்த்து அதிசயப்பட்டு நீ ஒருவனாகவா இதைச் செய்தாய் என்று கேட்கின்றார். பின்பு சிவனின் ஆணைப்படி தேவலோகத்தில் இரு கன்னிகளை அழைத்துக் கொண்டு பூலோகத்தில் வந்து நெல் பயிரிட்டு இங்கேயே தங்கிவிடுகின்றான். இவனின் மக்களே இன்றைய தேவேந்திரர்கள் ஆவர்.

### *கதை 8*

பார்வதிக்கும் சிவனுக்கும் பிறந்த வல்லவன் எனும் குழந்தையை இந்திரனுக்கும் இந்திராணிக்கும் வளர்ப்பு மகனாகத்தாரை வார்த்தனர் பார்வதியும் சிவனும். அப்பொழுது சிவன் நீ நெல்லை உற்பத்தி செய்து பூலோகத்தில் பயிர் செய்து மக்களைக் காப்பாற்று. நீ வேண்டும்பொழுது பார்வதி கங்கை நீரைப் பொழிவாள். நீ இருக்கும் இடம் என்றென்றும் பசுமையாகவும் நீர் நிறைந்தும் இருக்குமென்று ஆசி கூறினார். இதன் பின்பு இந்திரனால் வளர்க்கப்பட்ட வல்லபன் பெரியவன் ஆனதும் தனது தந்தையிடம் வெள்ளை யானையையும், பார்வதியிடம் நீர்வள வரத்தையும், எமனிடம் எருமைகளையும், பலராமனிடம் கலப்பையை

யும் பெற்றுப் பூமிக்கு வந்து நெல் பயிரிட்டான். சேர, சோழ, பாண்டிய நாடுகள் அனைத்திற்கும் சென்று நெல் பயிரிட்டு உலகைக் காத்தான். தாம் பயிரிட்ட ஒவ்வொரு நாட்டிலும் அந்த ராசாக்களின் மகளைத் திருமணம் செய்து பல குழந்தைகளுக்குத் தந்தையானான். சோழ மகளுக்கு நான்கு குழந்தைகளும் சேர மகளுக்கு நான்கு குழந்தைகளும் பிறந்தன. இவர்களே இன்றைய தேவேந்திரகுல வேளாளர்கள்.

## *கதை 9*

ஈஸ்வரனும், ஈஸ்வரியும் ஏழை மக்களுக்குப் படியளந்து கொண்டிருந்தபோது உலக மக்கள் எல்லாம் ஈஸ்வரன் காலில் விழுந்து வரம் கேட்டனராம். காலில் விழுந்தவரெல்லாம் வரமாகச் செல்வம், பணம், தங்கம் என்று கேட்டனராம். தேவேந்திரக் குடும்பம் மட்டும் செந்நெல், மண்வெட்டி, உழுவதற்கு வயலும், நீர் நிறைந்த குளங்களும், ஆறுகளும் வேண்டுமென வரம் கேட்டதாம். ஈஸ்வரன் சந்தோசப்பட்டு அனைத்து வரத்தையும் கொடுத்தாராம். அப்போதிருந்தே தேவேந்திரர்கள் நெல் விவசாயம் செய்து வாழ்ந்து வருகின்றனர்.

## *கதை 10*

இந்திரனின் மகனான கழியன் பூலோகம் வந்து நெல் வேளாண்மை செய்து வாழ்கின்றான். அப்போது தமிழகம் நீரால் அழிந்தது. அச்சமயம் கழியனின் மகனும் அவனுடைய மருமகளும் சுரைக்குடுக்கையில் நுழைந்து தண்ணீரில் மிதந்து தப்பி வாழ்கின்றனர். இவர்களின் வழிவந்தோரே இன்றைய தேவேந்திரர்கள்.

## *கதை 11*

ஈஸ்வரன், கிருஷ்ணன், நாரதன் ஆகியோர் மனிதகுலத்தை உருவாக்கியபோது, ஒரு ஆணையும் பெண்ணையும் உருவாக்கு கின்றனர். இவர்களுக்காக ஒரு நந்தவனம் உருவாக்கப்படுகின்றது. ஆனால் ஒரு தோப்புக்கு மட்டும் போகக்கூடாது என்கின்றனர். மேலும் அங்குள்ள கனியை உண்ணக்கூடாது என்கின்றனர். இருப்பினும் ஆண் அந்தக் கனியை உண்ணும்போது கிருஷ்ணர் தொண்டையைப் பிடித்துவிட அது முடிச்சாக ஆகிவிடுகிறது. ஆனால் பெண் அதற்குள் உண்டு விடுகின்றாள். பின்பு ஆடையுடுத்தி ஆணும்பெண்ணும் இணைந்து பிள்ளைப்பெறப் பள்ளு போன்ற பலசாதிகள் தோன்றின.

### கதை 12

பார்வதி, பரமசிவன், மகன், பார்வதி குளித்துவிட்ட நீரில் விவசாயம் செய்து விளையாடிக் கொண்டிருந்தபோது, ஒரு அன்னப்பச்சி வயலில் வந்து நெல்லைக் கக்கிவிட அந்நெல் முளைத்துப் பயிராகிறது. இதனை எடுத்துவந்து பூலோகத்தில் நட்டு வேளாண்மை உண்டாக்கியதாக ஒரு கதை சொல்லப்படுகிறது.

மேற்கண்ட கதைகளில் 7, 8, 9, 12 ஆகியன பார்வதி பரமசிவனுடன் இணைத்து தேவேந்திரனின் பிறப்புச் சொல்லப்படுகின்றது. இதே கதை வடிவம் பழனி செப்புப்பட்டயத்திலும் தேவேந்திரர் தோற்றமாகச் சொல்லப்படுகின்றது இக்கதை அல்லாத 1, 2, 3, 4, 7, 10 கதைகளில் தேவேந்திரனுக்கும் இந்திராணிக்கும் பிறந்த குழந்தையே தேவேந்திரகுல வேளாளரின் முதல் மகன் என்றும் இவனே நெல்லை முதன்முதலில் பூமியில் பயிரிட்டதாகவும் சொல்லப் படுகின்றது. கதை 11ல் இந்த உலகம் தோன்றியதே தேவேந்திரர் மூலம் என்று பைபிள் கதை போன்று சொல்லப்பட்டிருக்கின்றது.

மருதநில மக்களான இம்மக்கள் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வருவதை மிகைப்படுத்தி உரைக்கும் இத்தோற்றக் கதைகளில் சில கற்பனை மிகுதிகளை நீக்கிவிட்டுப் பார்த்தால் ஓர் அடிப்படை உண்மையைத் திரும்பத் திரும்பச் சொல்ல வருவதைப் பார்க்கலாம். அது தாங்கள்தான் நெல் வேளாண்மையை முதன்முதலில் உண்டாக்கியவர் என்பதும் இந்நாகரிகத்தின் தலைவனான வேந்தனே தேவேந்திரன் எனும் இந்திரன் இவனின் வழிவந்தோரே நாங்கள் என்பதும் ஆகும்.

இக்கதைகள் அல்லாமல் "வேந்தன் மேய தீம்புனல் உலகம்" எனும் தொல்காப்பியச் சான்றும் பல கல்வெட்டுச் சான்றுகளும், பள்ளு நூல்களும், பல சடங்குப் பாடல்களும் இம் மக்களை

> "நெல்லின் மக்கள்
> செந்நெல் முதுகுடியினர்
> ஏருடன் பிறந்தவர்கள்
> சேற்றுக்கால் செல்வர்கள்
> மருதநில மக்கள்
> கழனிக் காவலர்
> மழையின் மக்கள்"

என்றெல்லாம் இவர்களின் பண்பாட்டைச் சிறப்பித்துக் கோட்பாடாக்கிக் கூறுவதைக் காண்கின்றோம். இம்மக்களின் திருமணச் சடங்குப் பாடலில்

கூட இம்மக்களின் தோற்றம் 'தேவேந்திரர் பிறப்பு' என்பதாக வருணிக்கப்படுகிறது.

"தேவாதி தேவர்களான
தேவேந்திரச் சாதியர்
...... ......
சேத்துக்கால் செல்வரான
செந்நெல் முடிக் காவலரான
பள்ளனும் பள்ளியும்
காலினால் உழப்பிய செந்நெல்லை
தேவர்கள் பாலால் அமிர்தம் பொழிவராம்
கொட்டுடன் கோல மேழி கலப்பை
நெட்டுடன் பிரம்பு சங்கிலி
நேரான கால் கயிருடன்
மொட்டை வெள்ளானை ஏறி
தெய்வ குலத்தில் தேவரிடத்தில் (மேலுலகம்)
இஞ்சி எலுமிச்சை இனிய பலாவும்
வெள்ளரிக்கொடியும் வேனாமாமரமும்
சந்தனமும் கமுகும் சாதிலிங்கமும்
தென்னை பொன் உலக்கோலும்
பூந்தாமரையும் 4448 நெல்விதையும்
யானைவால் மயிரினால்
மூக்கனாங்கயிறு கொண்டு
கோர்த்து நூலேணி வழியாக
பூலோகம் இறங்கி
ஓடையைக் குறுக்காட்டி
ஏரிகள் போட்டு
வாகான பூமியை வயல்களாகச்
சேர்த்து உழுது விதைத்து
வேளாண்மை செய்து
...... ......

இந்தத் திருமண நலுங்குப் பாடலில் கூட நெல் வேளாண்மையைத் தாங்களே உண்டாக்கினோம் என்று கூறுவதைப் பார்க்க முடிகிறது. இவ்வாறு வேளாண் பண்பாட்டைத் தங்களின் தோற்ற வரலாறாகக் கூறும் மள்ளர் எனும் தேவேந்திரர்களின் தோற்றக் கதைகள் இன்னமும் நிறைய வழக்கிலிருப்பதை இக்கட்டுரை சுட்டிக் காட்டுகின்றது.

## *குறிப்பு*

1, 2, 3, 4, 5, 6, 7, 9, 10, 12 ஆகிய கதைகள் திருமதி டாக்டர் சி. பரமேஸ்வரியின், தேவேந்திரகுல வேளாளர் சமூக வரலாறும் பண்பாடும் எனும் டாக்டர் பட்ட ஆய்வில் இடம் பெற்றுள்ளன. கதை 8 மள்ளர்மலர், டிசம்பர் இதழில் வெளிவந்துள்ளது ஆகும். கதை 11 டாக்டர் செல்லப்பெருமாள், நாட்டார் வழக்காற்றியல் துறை, பாளையங்கோட்டை அவர்கள் தொகுத்தது ஆகும். குறிப்பு 13ல் இடம்பெறும் பழனி செப்புப்பட்டயம் கட்டுரையாளரிடம் உள்ளது. குறிப்பு 14ல் உள்ள பாடல் கொங்கு நாட்டில் அனைத்துத் தேவேந்திரகுல வேளாளர் திருமணங் களிலும் பாடப்படும் பாடலின் ஒரு பகுதி ஆகும்.

ooo

# 3. கொங்கு நாட்டுத் தேவேந்திர குல வேளாளர் - பட்டக்காரர் சமூக ஆட்சி முறை

கோவை நகரிலும் அதனைச் சுற்றிலும் உள்ள 40 கிராமங்களிலும் வாழும் தேவேந்திர குல வேளாளர்களில் நான்கு வம்சா வழியினர் காணப்படுகின்றனர். அவர்கள் கொங்குத் தேவேந்திர குல வேளாளர், சோழியத் தேவேந்திர குல வேளாளர், பாண்டியத் தேவேந்திர குலவேளாளர், கடையத் தேவேந்திர குல வேளாளர் ஆகியோர் ஆவர். இந்நான்கு பிரிவினருமே தனித்தனியே நான்கு பட்டக்காரர்கள் தலைமையில் தங்களுக்கெனத் தனியான ஒரு சமூக ஆட்சி முறையைப் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து நடத்தி வருகின்றனர். இவ் ஆட்சி முறை பட்டக்காரர் சமூக ஆட்சிமுறை என்று இம்மக்களால் அழைக்கப் படுகின்றது. இக்கட்டுரை இப்பட்டக்காரர் சமூக ஆட்சிமுறையைச் சுருக்கமாக அறிமுகம் செய்கின்றது.

### *பட்டக்காரர்*

பட்டக்காரர் என்றால் ஆட்சி செய்யும் உரிமையுடையவர் என்றும் பட்டத்திற்கு உரியவர் என்றும் பொருள்படும். பட்டக்காரர் என்பவர் இச்சமூகத்தின் அனைத்து மக்களாலும் எற்றுக் கொள்ளப்பட்ட தலைவராக விளங்குகின்றனர். இதனால் இவரின் அதிகாரங்களும் செயல்பாடுகளும் இச்சமூகத்திற்குள் மட்டுமானதாக அமைகின்றன. இவ்வகையில் பட்டக்காரர் என்பர் இச்சமூகத்தின் முதல் மனிதராக ஏன் மன்னர் போன்று கருதப்படுகின்றார் எனலாம். காரணம் இவரின் அதிகாரம் மன்னரின் அதிகாரம் போன்ற அம்மக்கள் விரும்பி ஏற்றுக் கொள்ளும் எல்லையில்லா அதிகாரங்களைக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு பட்டக்காரரின் கீழ் ஒன்று திரண்டுள்ள இச்சமூக மக்கள் தங்களது பட்டத்திற்குமேல் அதிகாரம் பெற்ற மேல் அமைப்பு எதுவும் இல்லை என்றே கருதுகின்றனர். இப்பட்டக்காரர்கள் வாரிசுப்படி நியமிக்கப்படுகின்றனர். வாரிசு இல்லாத நிலையில் அதற்கடுத்த வாரிசைத் தேர்ந்தெடுக்கும் முறையும் உள்ளது. பட்டக்காரர்கள் தனக்குக்கீழுள்ள கிராமங்களின் மத்திய நிர்வாகத்தை மட்டுமே கவனிக்கின்றனர். ஒவ்வொரு பட்டக்காரரின் கீழும் குறைந்தது 18 கிராமங்கள் ஆட்சியுரிமையில் உள்ளன. ஊர் நிர்வாகம் அந்தந்த ஊர்ப் பண்ணாடிகளிடம் பகிர்ந்தளிக்கப்படுகின்றது. இவ்வகையில்

பட்டக்காரரின் நிர்வாகமும் அவரின் கீழுள்ள ஊர் நிர்வாகமும் கீழ்வருமாறான நிர்வாகிகளைக் கொண்டுள்ளன.

*பட்டக்காரர்*

**18 ஊர்களின் தலைமை நிர்வாகம்**

**கிராமப் பண்ணாடிகள் அல்லது**

**ஊர்ப் பண்ணாடிகள்**

(ஊர் நிர்வாகம்)

**பெரிய பண்ணாடி** (தலைவர்)

**சின்னப்பண்ணாடி** (செயலர்)

**இளந்தாரிப் பண்ணாடி** (பொருளாளர்)

**ஊர்மூப்பர்** (உதவியாளர்)

**ஓடும்பிள்ளை** (செய்தியாளர்)

பண்ணாடி என்பதற்கு அதிகாரம் செலுத்துபவர் என்று பொருள் சொல்லப்படுகின்றது. மேலும் தேவேந்திர குல வேளாளர்க்குரிய சாதிப் பெயர்களில் ஒன்றாகவும் பண்ணாடி எனும் பெயர் அமைந்துள்ளது என்பது இங்கு குறிக்கத்தக்கது.

## *பட்டம் சூட்டும் விழா*

பட்டக்காரர்களாகப் பதவியேற்பவருக்கும் பண்ணாடிகளாகப் பதவி ஏற்பவர்களுக்கும் பட்டம் சூட்டும் விழா எனும் பெயரில் அதிகாரம் வழங்கும் விழா ஒவ்வொரு ஆண்டும் நடைபெறுகின்றது. இவ்விழா நான்கு பிரிவினரிடையே தனித்தனியே நடைபெறுகின்றது. பொதுவாக இவ்விழா பேரூர் பட்டீஸ்வர மள்ளர் திருக்கோவிலுள்ள இச்சமூக மடத்தில் நடைபெறுகின்றது. பேரூரிலுள்ள தேவேந்திரர் சமூக மடம் இக்கோவில் கட்டப்பட்ட சோழர் ஆட்சிக் காலத்திலேயே கட்டப்பட்டதாகும். இந்நான்கு பிரிவினருக்குமே இம்மடம் பொதுவான தாகும். ஒவ்வொரு ஆண்டும் இந்நான்கு பட்டக்காரர்களுக்கும் பட்டம் சூட்டிய பின்னர் தான் பேரூர் கோவில் வழிபாடு தொடங்கும் என்பதும்

இங்கு கவனிக்கத்தக்கது. பொதுவாகப் பட்டக்காரருக்குப் பட்டம் சூட்டும் விழா பட்டக்காரருக்கு வயது முதிர்ந்த நிலையிலோ அல்லது அவர் மரணமடைந்து விட்டாலோ அவரது வாரிசுக்குப் பட்டம் சூட்டுதல் நடைபெறும். ஆனால் பண்ணாடிகளுக்கான பட்டம் சூட்டும் விழா அடிக்கடி நடைபெறும். காரணம் ஒவ்வொரு பட்டக்காரருக்குக் கீழ் சுமார் 18 கிராமங்கள் உள்ளன. இப்பதினெட்டுக் கிராமங்களிலும் உள்ள ஊர்ப் பண்ணாடிகளில் ஏதேனும் காரணம் குறித்து மாற்றம் இருந்து கொண்டே இருப்பதால் பண்ணாடிகளுக்கான பட்டம் சூட்டும் விழா பட்டக்காரரால் அடிக்கடி நடத்தப்படுகின்றது. பட்டம் சூட்டுதல் என்பது மலர்களால் அலங்கரிக்கப்பட்ட கீரிடத்தைச் சூட்டிவிடுதல் ஆகும். இதன் பின்னர் உறுதிமொழி எடுத்தல் நிகழ்ச்சி நடைபெறுகின்றது. நான்கு வம்சா வழியினரில் கொங்குத் தேவேந்திர குலப் பண்ணாடி பொறுப்பேற்பவரின் மத்திய ஆட்சிப் பதவிப் பிரமாண நிபந்தனை வருமாறு அமைகின்றது.

கொங்குத் தேவேந்திர குல மக்களின் முன்னேற்றம், கலாச்சாரம், கல்வி, நிர்வாகம், சட்டம், சம்பரதாயம், நீதி அனைத்தும் மத்திய ஆட்சியின் அதிகாரத்திற்கு நான் கட்டுப்பட்டு கிராம தனியாட்சி நிர்வாகங்களில் ஒருவராக நிர்வாகம் செய்வேன்.

நான் மிராஸ் (பண்ணாடி) பொறுப்பேற்று சத்தியம் தர்மம் தன்னலமற்ற அறவழியில் நீதி செலுத்துவேன்.

நான் உயிருள்ளவரை நிபந்தனைகளை மீறி என் மிராஸ் (பண்ணாடி) நிர்வாகத்தைத் தவறான முறையில் நடத்தினால் எனது பதவியை மத்திய ஆட்சி ரத்து செய்ய உறுதி கூறுகின்றேன்.

இவ்விழாவில் அந்தந்தப் பட்டத்திற்குரிய 18 ஊர்களும் சிறப்பு அழைப்பின் பேரில் 40 ஊர் பொதுமக்களும் ஊர் நிர்வாகிகளும் கலந்து கொள்கின்றனர். இவ்விழாவினை ஒரு சமூக விழாவாகவே இம்மக்கள் நடத்துகின்றனர். இப்பொழுதுள்ள நான்கு வம்சப் பட்டக்காரர்கள் வருமாறு.

1 வெள்ளலூர் கிருஷ்ணப் பட்டக்காரர் கொங்குத் தேவேந்திரப் பட்டக்காரர்.
2 செல்வபுரம் பி.கே. நடராசப் பட்டக்காரர் சோழியத் தேவேந்திரப் பட்டக்காரர்.
3 இருகூர் டி. நடராசப் பட்டக்காரர் பாண்டியத் தேவேந்திரப் பட்டக்காரர்.
4 கோதவாடி மணிவாசகப் பட்டக்காரர் - கடையத் தேவேந்திரப் பட்டக்காரர்.

இவர்களின் ஒவ்வொருவரின் தலைமையின் கீழும் 18 ஊர்களுக்குக் குறையாமல் மத்திய ஆட்சிக்கு உட்பட்டு இவர்கள் தங்களை இனங்காட்டிக் கொண்டாலும் இன்று தேவேந்திர குல வேளாளர் எனும் ஒரே சமூகச் சிந்தனை வளர்ந்தெடுக்கப்பட்டுள்ளது இவர்களுக்குக்குள் திருமண உறவுகளும் தற்சமயம் பெரிதும் வலுப்பெற்று வருகின்றன.

## *பட்டக்காரர்களின் மத்திய நிர்வாகப் பணிகள்*

ஒவ்வொரு பட்டக்காரர்களும் தங்களுக்கான இவ்வமைப்பை அரசிடம் முறைப்படி பதிவு செய்துள்ளனர். பிரிட்டிஸ் ஆட்சிக் காலத்தில் அதாவது 1942ல் பதிவு செய்யப்பட்ட பதிவேடுகளும் இவர்களிடம் காணப்படுகின்றன. கொங்கு தேவேந்திர குல வேளாளர் பட்டம் பதினான்கு பதிவுப்படி மாசிமை தங்கிய பிரிட்டிஸ் ஆட்சியுடன் இப்பட்டம் ஒத்துழைக்கும் என்று பதிவு நிபந்தனை தொடங்குகின்றது. 1942ல் பதியப்பட்ட பதிவுப்படி பட்டம் 14 என்றும் இன்றுள்ளபடி பட்டம் 16 என்றும் அறிய முடிகின்றது. இதன்படி பார்த்தால் 40 ஆண்டுகள் பதவி வகித்திருந்தாலும் சுமார் 650 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இப்பட்டக்காரர் ஆட்சி முறை இவர்களிடம் இருந்திருக்கின்றது என்று தெரிய முடியும்.

பட்டத்திற்கு உட்பட்ட கிராமங்களின் அனைத்துச் சமூகச் செயல்பாடுகளிலும் பட்டக்காரர்கள் கலந்து கொண்டு சமூகப் பணியாற்று கின்றனர். பட்டக்காரரின் அதிகாரம் மத்திய நிர்வாகம் அதிகாரம் என்று அழைக்கப்படுகின்றது. அவற்றில் சில வருமாறு.

1 கோவில்கள் பராமரிப்பும் நிர்வாகமும்
2 பஞ்சாயத்து நடத்துதல்
3 கிராம நிர்வாகங்களை மேற்பார்வையிடுவது.
4 திருமணங்களுக்குத் தலைமை ஏற்பது.
5 சமுதாய முன்னேற்றத்திற்காக கல்வி, அரசு உதவி பெறுதல் போன்றவற்றில் ஈடுபடுதல்.
6 பட்டத்திற்கு உட்பட்ட கிராமங்களை மூன்று மாதத்திற்கு ஒரு முறை கூட்டுதல்.
7 பண்ணாடிகளுக்குப் பட்டம் சூட்டும் அதிகாரம்.
8 அண்மைக் காலம் வரை சாதிச் சான்றிதழ் வழங்கும் அதிகாரம் பெற்றிருந்தமை குறிப்பிடத்தக்கது.

## *பண்ணாடிகளின் ஊர் நிர்வாகம்*

ஒரு பட்டத்திற்கு உட்பட்ட அனைத்துத் கிராமங்களும் தனித்தனியே

அந்தந்த ஊர் பண்ணாடியின் தலைமையின் கீழ் கிராம நிர்வாகத்தை நிர்வகிக்கின்றது. ஊர்ப் பண்ணாடி பெரிய பண்ணாடி எனப்படுகின்றார். இவருக்குக் கீழ் சின்னப்பண்ணாடி செயலராகவும் இவர்கள் இருவருக்கும் உதவியாக இளந்தாரிப் பண்ணாடி, ஊர்மூப்பர், ஓடும் பிள்ளை போன்றவர்களும் செயலாற்றுகின்றனர். இவர்களின் கிராம நிர்வாகப் பணிகள் வருமாறு அமைகின்றன.

1 ஊர்க் கோவிலை நிர்வகிப்பது விழாக்கள் நடத்துவது அதற்காக வரி வசூல் செய்யும் உரிமை.
2 திருமணம் மற்றும் இறப்புச் சடங்குகளை முன்னின்று நடத்தும் அதிகாரம். ஒவ்வொரு திருமணத்திற்கும் மாங்கல்யப் பணமாக ரூ. 100 வசூலித்துப் பட்டக்காரருக்கு அனுப்பும் அதிகாரம். முன்பு இப்பணம் ரூ. 1.25 பைசாவாக இருந்தது.
3 ஒருவர் இறந்துவிட்டால் பண்ணாடி பார்வையிட்டப் பின்பு தான் குளிப்பாட்டுதல் போன்ற சடங்கைச் செய்கின்றனர். இதனைப் பண்ணாடி தடம் அனுப்புதல் என்கின்றனர். அதாவது மரணத்தை உறுதி செய்தல் என்பதே தடம் அனுப்புதல் என்று சொல்லப்படுகின்றது.
4 ஊர்ப் பஞ்சாயத்தை நடத்தும் அதிகாரம்.
5 திருமணம் உறுதிப் படுத்தும் சடங்கு ஊர்ப் பண்ணாடி முன்னிலையில் தான் நடைபெற வேண்டும்.

### *பட்டக்காரரின் சிறப்பு அதிகாரங்கள்*

1 மேல் பஞ்சாயத்து என்பது பட்டத்திற்கு மேல் இல்லை. ஒரு பட்டக்காரரின் தீர்ப்பில் குறைகண்டால் நான்கு பட்டக்காரர் பெஞ்சுக்கு வேண்டுமானால் கொண்டு செல்லலாம்.
2 ஊர்ப்பண்ணாடிகள் பட்டக்காரர்களுக்கு இசைந்து போகாவிடின் அந்தப் பண்ணாடியையும் அந்த ஊரையுமே பட்டத்திலிருந்து விலக்கி வைக்கும் அதிகாரம் பட்டத்திற்கு உண்டு.
3 திருமண விவாகரத்து வழக்கில் அதனை உறுதி செய்து தீர்ப்பு வழங்குபவர் பட்டக்காரர் மட்டுமே ஆவார்.

### *பட்டக்காரர் ஆட்சியின் பஞ்சாயத்து முறைகளும் நாட்டுத்தடையும்*

தவறு செய்தவரை ஊரைவிட்டு விலக்கி வைத்தல் இன்றும் நடைமுறையில் உள்ளது. இதனை நாட்டுத்தடை என்கின்றனர். ஒரு பட்டக்காரரின் ஆட்சிக்கு உட்பட்ட அனைத்து ஊர்களிலிருந்தும் ஒருவரைத் தள்ளிவைக்கும் தண்டனைக்கு நாட்டுத்தடை என்கின்றனர்.

நாட்டுத்தடை ஆணை பட்டக்காரர் மட்டுமே பிறப்பிக்கமுடியும். இவ் ஆணையை ஒவ்வொரு ஊரிலும் உள்ள ஊர்ப் பண்ணாடிகள் செயல்படுத்துகின்றனர். பொதுவாக நாட்டுத்தடை விதிக்கப்பட்டவர் தவறை உணர்ந்து பட்டக்காரரிடம் மன்னிப்பு வேண்டினால் ரூ. 101 அபராதம் செலுத்தி நாட்டுத்தடையை நீக்கும்படி பட்டக்காரர் ஆணையிடுவார்.

18 பண்ணாடிகள் தங்களது பட்டக்காரரின் தலைமையில் கூடுவது நாட்டுக் கூட்டம் என்று பெயர் பெறும். இக்கூட்டத்திற்கு 18 ஊரிலிருந்து 100க்கும் குறையாத ஊர் நிர்வாகிகள் கலந்து கொண்டிருப்பதை 1942க்கு முற்பட்ட பதிவேடுகள் காட்டுகின்றன. இந்நாட்டுக் கூட்டத்தை நாட்டுப் பண்ணாடி பதவி வகிப்பவர் கூட்டுவார். இவரே கூட்டத்திற்கு தலைமை ஏற்கின்றார். 18 ஊர் பண்ணாடிகளையும் ஒன்றிணைத்து பட்டக்காரரின் ஆலோசகர் என்றும் மத்திய ஆட்சி மன்றத்தில் பட்டக்காரருக்கு அடுத்த நிலை வகிப்பவர் என்றும் நாட்டுப் பண்ணாடியைக் கூறலாம்.

## *அட்டம் விழுதல்*

கிராமப் பஞ்சாயத்தில் நாட்டுத்தடைக்கு அடுத்து ஒருவரின் குற்றச் செயல்களைப் பொருத்து அதிகப்பட்சத் தண்டனையாகக் கொடுக்கப்படும் தண்டனை அட்டம் விழுதல் என்று சொல்லப் படுகின்றது. அட்டம் விழுதல் என்றால் பஞ்சாயத்தாரின் காலில் விழுந்து தவறை மன்னித்துத் தண்டனையைக் குறைக்க வேண்டுவது ஆகும். ஒவ்வொரு முறை காலில் விழும் போதும் அவரின் தண்டத் தொகை குறைக்கப்பட்டு முடிவில் குறைந்த அளவு பணம் கட்டினால் போதுமென பஞ்சாயத்தார் முடிவு செய்வர். அட்டம் விழுதலை விரும்பாதவர் பஞ்சாயத்தார் குறிப்பிடும் தண்டத் தொகையை முழுவதும் கட்டியாக வேண்டும்.

## *அழிபாடு செய்தலும் தண்டனையும்*

பெண் தொடர்பான வழக்கில் குறிப்பாக ஒரு பெண்ணை மானபங்கம் செய்தலை அழிபாடு செய்தல் என்கின்றனர். இந்த அழிபாடு வழக்கில் ஆணின் குற்றம் உறுதி செய்யப்பட்டால் அவரே மணம் செய்து கொள் வேண்டுமென்பதே தீர்ப்பாகச் சொல்லப்படுகின்றது. இதனை அவர் மறுத்தால் அவரை ஊரை விட்டு விலக்கி வைத்தல் நாட்டுத் தடைக்கு உட்படுத்துதல் போன்ற தண்டனைகள் வழங்கப்படுகின்றன.

## *தொகுப்புரை*

இன்றைய மக்களாட்சி மற்றும் அரசியல் கட்சிகளின் ஆட்சி முறையால் இப்பட்டக்காரர் சமூக ஆட்சிமுறை கொஞ்சம் வலுவிழந்து காணப்பட்டாலும் பொது மக்களால் எளிதில் இன்னமும் அணுகக்கூடிய ஒரு நம்பிக்கையான சமூக ஆட்சி அமைப்பாக இவ்வமைப்பு இன்றும் விளங்கி வருகின்றது. அதே சமயத்தில் முன்பிருந்த இறுக்கமான விதிமுறைகள் இப்பொழுது காணப்படவில்லை.

OOO

( இக்கட்டுரை இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் நடத்திய 28ம் கருத்தரங்கில் வாசித்தளிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டது ஆகும்.)

# 4. தென்மாவட்டச் சாதிமோதல்கள் : காரணங்களும் தீர்வுகளும்

சாதி என்பது இந்தியச் சூழலில் ஓர் யதார்த்தம் நாம் அதை மறுத்துவிட முடியாது. உலகச் சமூக அமைப்பில் சாதி என்பது இந்து மதத்தின் தனிப்பட்ட பங்களிப்பாகக் கருதப்படுகிறது. இச்சாதியின் அடிப்படையிலேயே ஒருவனின் தகுதியும் நிர்ணயிக்கப்படுகின்றது. உலகின் எந்தப் பகுதியில் பிறக்கும் எவனொருவன் மீதும் மதம், ஏழை, பணக்காரன் என்ற முத்திரைகள் மட்டுமே பதிக்கப்படுகின்றன. ஆனால் இந்தியாவில் பிறக்கின்ற ஒருவன் மேற்கண்ட முத்திரைகளுடன் சாதி முத்திரையையும் தரித்துக் கொண்டு தான் இந்திய மண்ணில் கால்பதிக்க வேண்டியிருக்கிறது. பண்டை நாளில் குலக்குழுக்குள்ளே இருந்த தொழிற்பாகுபாடுகள் பின்னர்த் தனித்தனிச் சாதிகளாக மாறியுள்ளன என்றும் பொருளாதாரத்தில் தாழ்ந்தவர்கள் சமுதாய அந்தஸ்திலும் தாழ்ந்த சாதியாகின்றனர் என்றும் டி.டி. கோசாம்பி குறிப்பிடுவார். இப்படியாக இந்தியாவுக்கு மட்டுமே உரித்தானதும், தனித்தன்மை வாய்ந்ததுமான சாதியமைப்பை **"சாதியென்பது பிறர் புக முடியாத வர்க்கம்" (Clossed Class)** என்பார் அம்பேத்கார்.

தமிழகத்தில் தென் மாவட்டங்களில் அண்மையில் தொடர்ந்து நடைபெற்று வரும் சாதி மோதல்களில் ஈடுபட்டுள்ளவர்கள் தமிழ் மண்ணின் மூத்த குடி மக்களான மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களும் மறவர்களும் ஆவர். இவ்விருவர் குறித்த வரலாறு சங்க காலத்திலிருந்தே தொடங்குகின்றது. பாலை நிலத்து மக்களாக மறவர்களும் மருத நிலத்து மக்களாக மள்ளர்களும் குறிக்கப்படுகின்றனர். இவர்கள் இருவருமே இப்பொழுது மள்ளர், மறவர் என்றவாறு அடிக்கடி மோதிக் கொள்கின்றனர். இவர்கள் இருவர் குறித்தும் தேவ நேயப் பாவாணர் **"பாலை நிலத்து மறவர் படைஞராகுமுன் மருதநிலத்து உழவரே (மள்ளர்) போர்த் தொழில் செய்து வந்தனர். அதன்பின்பும் உழவர் போர்த் தொழிலை விட்டு விடவில்லை"** [1] என்று குறிப்பிடுவது இங்கு நினைக்கத்தக்கது.

சங்க இலக்கியங்களில் மள்ளர் என்றும் நாயக்கர் ஆட்சிக் காலத்திலும் அதன் பின்னர் தோன்றிய பள்ளு இலக்கியங்களில் பள்ளர் என்றும் அறியப்படும் தேவேந்திர குல வேளாளர் இந்த மண்ணின் மூத்த

குடிமக்கள் ஆவர். வேளாண்மையே இவர்களின் முதன்மைத் தொழில். தமிழ் இவர்களின் தாய்மொழி ஆகும். இவர்கள் போன்றே தேவர் என்று பெயர் பெறும் மறவர், கள்ளர், அகமுடையார் மூவரும் இம்மண்ணின் மைந்தர்களே ஆவர். இவர்களின் தாய்மொழி தமிழே ஆகும். இவர்களும் தற்போது வேளாண்மையுடைய மக்களே ஆவர். இவ்விரு இனங்களும் பெரும்பான்மையாக வாழும் தென் மாவட்டங்களில் மட்டும் அடிக்கடி சாதி மோதல்கள் நடைபெறக் காரணங்கள் என்ன, அதற்கான தீர்வுகள் என்ன என்பதை இக்கட்டுரை சொல்ல முயல்கின்றது.

## காரணங்கள்

### *1.இனக்குழுப்பகை*

1957-ல் நடைபெற்ற முதுகுளத்தூர் கலவரம் தொடங்கி போடி, நெல்லை, கொடியங்குளம், இராஜபாளையம், சிவகாசி அண்மையில் நடைபெற்ற இராமநாதபுரம் கலவரம் என்றவாறு 1998 வரை தொடர்ந்து நடைபெற்று வரும் கலவரங்கள் தேவேந்திரர் - தேவர் இன மோதல் களாகவே நடைபெற்று வருகின்றன. இதற்குக் காரணம் காரணமின்றி அடக்கியாள நினைப்பவர்களுக்கு அடங்கிப் போகாத தேவேந்திரர் களின் வீர மனோபாவமே (Fortitude) ஆகும். இவர்களின் வீர மரபு கருதியே **"பள்ளனையும் இரும்பையும் பதம் பார்த்து அடிக்கணும்"** என்றும் **"பள்ளனை விட்டுக் கள்ளனை அடி கள்ளனை விட்டுப் பள்ளனை அடி"** என்றும் **"பள்ளர்கள் பழகியவர்களுக்கு உயிரைக் கொடுப்பார்கள் பகை வந்தால் உயிரை எடுப்பார்கள்"** என்றும் பல பழமொழிகள் தென் மாவட்டங்களில் வழக்கிலிருப்பதைக் காணமுடியும்.

இவ்விரண்டு சமூகத்தவரையும் உயர்வு தாழ்வு எனும் நோக்கில் பார்ப்பதை விடுத்து ஆயுதக் கலாச்சாரத்தையுடைய இரண்டு இனக் குழுக்கள் எனும் நோக்கில் பார்க்க வேண்டும். போரிடுதல், உயிர்களைக் கொல்லுதல் போன்றவை இனக்குழு வாழ்க்கையில் அதிகாரத்தின் பொருட்டுத் தொடங்கியது ஆகும். இது போன்ற மோதல்களைச் சாதியென்பதை விடவும் அரசதிகாரம் என்பதை மையப்படுத்தி ஆய்வுகள் செய்யப்பட வேண்டும் என்று வற்புறுத்துகிற விமர்சனங் களும் இருக்கின்றன. ஜார்ஜ் எம். ஹார்ட் கூட இத்தகைய முறையிலேயே இந்தியச் சாதியமைப்பை பார்க்க வேண்டுமென்று கூறியிருப்பது நினைக்கத்தக்கது[2].

இனப்பகை காரணமாகத் தேவேந்திரர்கள் மீது மட்டும் குறிவைத்துத் தாக்கும் குழுக்களுக்கு எதிராக எதிர்த்தாக்குதலை நிகழ்த்தும்

இச்சமூகத்தினரின் போர்த்திறன் சங்க கால மள்ளர் மரபிலிருந்து மரபு வழியாக வந்து சேர்ந்ததாகும். ஏதோ உயர்வு தாழ்வு குறித்து இவர்கள் போராடவில்லை. காலங்காலமாய் இருந்து வரும் இனக்குழுப் பகை இங்கு சாதி மோதல்களாக நடந்தேறுகின்றன. இப்பகையை இவர்கள் மனத்திலிருந்து துடைத் தெறியும் வரை இம்மோதல்கள் நடந்து கொண்டு தான் இருக்கும்.

## 2 சாதி ஆதிக்கம் பண்பாட்டு ஒடுக்குமுறை

தேவேந்திரர்களைத் தொடர்ந்து ஒடுக்குவதில் ஈடுபடும் மறவர்களின் செயல்பாடுகள் தமிழகத்தின் நாயக்கர் ஆட்சிக்காலத்திலிருந்து தொடங்கியதாகத் தெரிகின்றது. நாயக்கர் ஆட்சிக்காலத்தில் ஏற்படுத்தப் பட்ட பாளையக்காரர்களின் ஆட்சிமுறை கூட தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக ஏற்படுத்தப்பட்டதாக வரலாற்றறிஞர் கே.ஆர். அனுமந்தன் குறிப்பிடுவார்[3] . இவ்வாட்சியின்கீழ் பாளையக்காரர்களான மறவர்கள் தேவேந்திரர்களின் நிலங்களைப் பிடுங்கி ஒடுக்க முனைந்த காலத்திலிருந்து தேவேந்திரர்களின் மீதான சாதி ஆதிக்கம் இன்று வரை தொடர்வதாகத் தெரிகின்றது. இதன் உச்சக்கட்டமாக 1930 ஆம் ஆண்டு டிசம்பரில் இராமநாதபுரம் மறவர்களால் ஆதிதிராவிடர் (பறையர்) மீது எட்டுக் கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டன. அவர்களின் தானியங்கள் மற்றும் சொத்துக்கள் அழிக்கப்பட்டன. கால்நடைகள் கொள்ளையிடப் பட்டன. இக்கட்டளைகளை மீறியவர்களின் குடிசைகள் தீயிடப்பட்டன. இதே எட்டுக் கட்டளைகளை 1931 சூன் மாதத்தில் ஆதிதிராவிடருடன் சேர்த்து தேவேந்திரர்களுக்காக 11 கட்டளைகளாக மாற்றிச் செயல்படுத்த முனைந்தனர். இவற்றைத் தேவேந்திரர்கள் செயல்படுத்தாததால் வன்முறைகள் விளைந்தன என்று ஜே.எச். ஹட்டன் (J.H.Hutton) குறிப்பிடுவார்[4]. அவைகளில் சில வருமாறு :

- செருப்பு அணியக்கூடாது.
- முழங்காலுக்குக் கீழே வேட்டி கூடாது.
- பெண்கள் இரவிக்கை அணியக்கூடாது. நிலம் வைத்துக் கொள்ளக் கூடாது. விவசாயம் செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் கொள்ளையடித்துக் கொள்ளலாம்.
- நிலங்களைக் குறைந்த விலைக்கு மிராசுகளுக்கு விற்று விட வேண்டும்.

என்பதான பதினோரு கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டன இதைச் செயல்படுத்தாதவர்கள் மீது தாககுதல்கள் நடந்தன. இதனை எதிர்த்து

**"அன்று முதல் இன்று வரை ரத்தத்திற்கு ரத்தம், கண்ணுக்குக் கண், உயிருக்கு உயிர் என்று ஈடுகொடுத்துப் போராடி வருபவர்கள் தேவேந்திரர்கள்"** ஆவர்[5]. இவ்வாறான சமூகத் தடைகளை இன்றும் மறவர்கள் செயல்படுத்த முனைகையில் மோதல்கள் உருவாகின்றன. *காட்டாக, கயத்தாறு ஒன்றிய அலுவலகத்திற்குள் அத்தொகுதி எம்.எல்..ஏ* டாக்டர் கிருஷ்ணசாமி நுழையக் கூடாது என்று தடை விதித்ததையும் அதனைத் தொடர்ந்து நடந்த மோதல்களையும் சொல்லலாம். இதே போன்று வீரன் சுந்தரலிங்கம் போக்குவரத்துக் கழகப் பேருந்து தங்களது ஊருக்குள் நுழையக் கூடாது என்று தடை விதித்ததையும் அதனைத் தொடர்ந்து நடந்த மோதல்களையும் இங்கே நினையலாம். இவர்களின் வன்முறை மற்றும் சாதி ஆதிக்க அரசியலுக்குச் சான்றாக மேலவளவு பஞ்சாயத்துத் தலைவர் முருகேசன் (பறையர்) கொலையையும் மதுரை மாநகராட்சி உறுப்பினர் லீலாவதி (சௌராஸ்டிரா) கொலையையும் சிதம்பரம் ம.தி.மு.க. பிரமுகர் பழனிவேலு (வன்னியர்) கொலையையும் 1998 அக்டோபரில் கொலை செய்யப்பட்ட தேவகோட்டை தி.மு.க இளைஞரணி செயலர் ரூசோ (உடையார்) கொலையையும் சொல்லலாம். இங்கு சொல்லப்பட்ட கொலைச் சம்பவங்களுக்கு நேர் எதிரான திருப்பித் தாக்குதல் இல்லை. ஆனால் தேவேந்திரர்களுடன் இவர்கள் மோதும் போது ஒன்று நடந்தால் இரண்டு என திருப்பித் தாக்குதல் நடப்பதை முதுகுளத்தூர் முதல் 1998 நடைபெற்ற இராமநாதபுரம் கலவரம் வரை காணமுடியும்.

தேவேந்திரர்களுக்கு எதிரான தாக்குதல்களில் தேவரினத்திற்கு லாபம் இருப்பதாக ஒரு கருத்து அவர்களிடம் இருக்கின்றது. இது அண்மைக் கால தேவேந்திரர்களின் திருப்பித் தாக்குதல் முறையில் கொஞ்சம் குறைந்திருக்கின்றது. அண்மையில் கூட மறைந்து போயிருக்கும் தனி குவளை (டம்ளர்) டீ முறையைச் சிவகாசிப் பகுதியில் நடைமுறைப்படுத்த முனைவதாக தென் மாவட்டக் கலவரப்பகுதிக்குச் சென்று வந்த எழுத்தாளர் மற்றும் அறிஞர்கள் குழு தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது[6].

பலராலும் பொதுவில் சொல்லப்படுவது போன்ற ஏதோ சில விஷமிகளின் தூண்டுதலால் நடைபெறும் மோதல்கள் இல்லை. கடுமையான சமூக ஒடுக்குமுறை சாதி ஆதிக்கம் அதற்கெதிரான ஒடுக்கப்பட்ட மக்களின் குறிப்பாகத் தேவேந்திரர்களின் எழுச்சி இத்தகைய மோதலுக்கான காரணமாகும்.

## 3. அரசியல் மற்றும் சமூக எழுச்சி

அம்பேத்கார் தமிழகத்தில் ஜஸ்டிஸ் கட்சியின் வரவேற்பு விழா ஏற்புரையில் பேசும் போது பிராமணரல்லாத சமூகத்தின் பெயரால் ஆட்சிக்கு வந்த ஜஸ்டிஸ் கட்சியினர் செட்யூல்டு இன மக்களை மறந்து விட்டனர் என்று குற்றம் சாட்டினார். பிராமண ஆதிக்கத்தை எதிர்க்கும் போது இச்சாதியினருக்கு செட்யூல்டு மக்களின் ஆதரவு தேவைப் படுகிறது. ஆனால் இந்திய அரசியலில் வலுப்பெற்று வரும் இவ்வகுப்பினர் செட்யூல்டு இனத்தவர் தலைமைக்கும் அதிகாரத்திற்கும் வருவதை ஒருபோதும் ஏற்பதில்லை[7] அதாவது பிற்படுத்தப்பட்டோர் செட்யூல்டு இனத்தவரின் அரசியல் சமூக எழுச்சியை ஒரு போதும் ஏற்பதில்லை என்பதே அம்பேத்கார் கூறிய குற்றச்சாட்டு. இந்நிலை இன்றும் தொடர்கின்றது. இந்தியா சுதந்திரம் பெற்று 50 ஆண்டுகள் ஆகியும் தங்களுக்கான தனியான அரசியல் அமைப்பைத் தொடங்க வேண்டுமென்று முடிவு செய்து கடந்த மூன்று ஆண்டுகளாக டாக்டர் கிருஷ்ணசாமி அவர்களின் தலைமையின் கீழ் இப்பகுதியில் தேவேந்திர குலத்தைச் சேர்ந்தவர்கள் இறுக்கமான அமைப்பாகத் திரண்டுள்ளனர். பல கிராமங்களில் கட்சிச் கொடிகள் இறக்கப்பட்டுள்ளன. இவ்வாறு தேவேந்திரர்கள் அமைப்பாவது தேவேந்திரர் அடையாளத்தில் ஒன்றிணைவது. தலைமையின் கட்டளைகளை ஏற்றுப் போராட்டங் களில் ஈடுபடுவது என்பன இங்குள்ள ஆதிக்கச் சாதியினர் மற்றும் ரெவின்யூ காவல் துறை அதிகாரிகள் மத்தியில் வெறுப்பை ஏற்படுத்தியுள்ளன. இதே போன்று மறவர்களும் முன்னாள் காவல் துறை அதிகாரி பொன். பரமகுரு, I.A.S. அதிகாரி மலைச்சாமி, சண்முகையா பாண்டியன் ஆகியோர் தலைமையில் அமைப்பாகத் திரண்டுள்ளதும்[8] இங்கு கவனிக்கத்தக்கது.

மறவர்கள் அமைப்பாவது தேவேந்திரரை ஒடுக்குவதற்கும் தேவேந்திரர்கள் அமைப்பாவது இத்தகைய ஒடுக்கு முறைக்கு எதிரான எழுச்சியாகவும் தற்காப்புப் போராகவும் உள்ளது. தேவேந்திரர் அமைப்பாவதை மேல் சாதியினர் அனைவரும் அடாவடித்தனமாகவே பார்க்கும் நிலை உள்ளது[9]. இதல்லாமல் டாக்டர் குருசாமி சித்தரின் தலைமையிலான தமிழக முன்னேற்றக் கழகமும் தளபதி ஜான் பாண்டியனின் அகில இந்திய தேவேந்திர குல வேளாளர் முன்னேற்ற சங்கம் ஆகிய அமைப்புகளும் தேவேந்திரர்களை அரசியல் ரீதியாகவும், சமூக ரீதியாகவும் தனித்துச் சிந்திக்க வைத்துள்ளன. மேலும் 1998

பிப்ரவரியில் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் டாக்டர் கிருஷ்ணசாமியின் "புதிய தமிழகம்" என உருமாற்றம் பெற்றுள்ள தேவேந்திர குல வேளாளர் கூட்டமைப்பு சில தொகுதிகளில் வெற்றி வாய்ப்பைத் தீர்மானிக்கும் சக்தியாக உருவெடுத்துள்ளதும் இங்கு கவனத்தில் கொள்ள வேண்டும்.

அரசியல் களத்தில் வெற்றி தோல்விகளை நிர்ணயிக்கும் 1½ கோடி மக்கள் தொகை கொண்ட தேவேந்திரர்கள் தனித்து அமைப்பாக உருவாவது பல முன்னணி அரசியல் கட்சியிலுள்ள ஆதிக்கச் சாதியினருக்கு அச்சத்தை மூட்டியுள்ளது. அதனால் எளிதில் உணர்ச்சிவசப்படும் இவர்களின் சமூகக் கொடிகளை வெட்டியும், அரசியல் கட்சிகளின் கொடிகளை வெட்டியும் ஆத்திரமூட்டிக் கலவரத்திற்குத் தூண்டி விடுவதாகச் சொல்லப்படுகின்றது. இதே நிலையில் மறவர்களும் தூண்டிவிடப்படுவதால் அரசியல் காரணங் களுக்காக மோதிக் கொள்ளும் நிலையும் உருவாக்கப்படுகின்றது.

## *4. ஆதிக்க சாதி அரசியலும் அரசு நிர்வாகமும்*

1997 மே 22ந் தேதி டாக்டர் கிருஷ்ணசாமி கூட்டிய அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் கவிஞர் இன்குலாப் சாதி மோதல்கள் உருவாவதற்கு அடிப்படைக் காரணம் மனிதனை மனிதன் மதிக்காமல் இருப்பதுதான். சமத்துவம் இல்லாத இடத்தில் நல்லிணக்கம் ஏற்படாது. இதுவரை இருந்த அரசுகள் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு ஆதரவாக இருந்தது என்ற வரலாறே கிடையாது. ஆதிக்க ஜாதிகளுக்கு ஆதரவாகவே அரசுகள் செயல்பட்டு வருகின்றன [10] என்று கூறியிருப்பது ஏற்புடையதே ஆகும். தமிழகத்தில் காங்கிரசுக்குப் பின்வந்த திராவிட கட்சிகள் பிற்படுத்தப் பட்டோரின் நலன் காக்கும் அரசாகவே செயல்பட்டு வருகின்றன. திராவிடக் கட்சிகளின் மாவட்டச் செயலாளராக ஆதிக்கச் சாதியைச் சேர்ந்தவர்களே இருக்கின்றார்கள். இவர்களே மந்திரியாகவும் இருக்கின்றார்கள். இவர்களின் விருப்பப்படி தான் தமிழக அரசு நிர்வாகமும், மாவட்ட நிர்வாகமும் நடைபெறுகின்றன. இவர்களுக்கு வேண்டியவர்களுக்கே அரசின் பணம் கொழிக்கும் பதவிகளான பால்வளத் தலைவர், வங்கித் தலைவர், வாரியத் தலைவர் என்றவாறு பதவிகளும் காண்ட்ராக்ட்டுகளும், வங்கிக் கடன்களும், பொதுச் சொத்து ஏலம்மென்று அனைத்துப் பொருளாதார வசதிகளும் சென்று சேருகின்றன. அதனால் தமிழகத்தில் பொருளாதார வளம் அரசியல் செல்வாக்குப் பெற்ற ஆதிக்க சாதிகளிடமே சென்று சேரும் நிலை. அதே

வேளையில் ஒடுக்கப்பட்ட மக்கள் என்ற நிலையிலும் முன்னேறி விடாதபடி ஒடுக்குதலையும் இவ்ஆதிக்கச் சாதிகள் தொடர்ந்து செய்து வருகின்றன. இன்றைய திராவிடக் கட்சிகள் சாதியொழிப்பு, சமத்துவம், சுயமரியாதை, பகுத்தறிவு என்று வாய் கிழியப் பேசினாலும் சில்லறைச் சலுகைகளைக் காட்டி ஒடுக்கப்பட்ட மக்களின் வாக்குகளைக் கவர்வதும், விழிப்புக் கொண்ட சாதிகளுக்கு ஆட்சியில் பங்கு கொடுப்பதும் ஓட்டு ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு தமிழக வரலாற்றைச் சந்தர்ப்ப வசமாய்ப் பேசுவதும் ஆட்சியைத் தக்க வைக்க அல்லது ஆளுங்கட்சியைத் தூக்கி எறியச் சாதியச் சண்டைகளைக் கிளறி விடுவதும் ஊழலையும் போக்கிரித்தனங்களையும் ஊக்குவித்தவர் களுக்கு என்று சொல்லிப் பட்டியலின இட ஒதுக்கீடு வேலைவாய்ப்பை 4,5 சதவீதத்துக்கு மேல் போகாமல் பார்த்துக் கொண்டவர்கள் எனத் திராவிட அரசியல் கட்சிகளைக் குணா குற்றம் சாட்டுவதை டாக்டர் அருணா, விடுதலை இதழில் எடுத்துக் காட்டியிருப்பது உண்மையே[11].

பொருளாதார வளர்ச்சியில் மட்டும் அல்லாது இட ஒதுக்கீட்டில் கூட இந்த ஆதிக்கச் சாதி அரசியல்வாதிகளின் விருப்பப்படியே அரசு செயல் படுகின்றது. தமிழகத்தில் பிற்படுத்தப்பட்டவரின் இட ஒதுக்கீட்டை 50 சதவீதத்திற்கு மேலாகக் (BC 30%,MBC 20%) குறியீட்டை அடைந்துள்ள அரசு நிர்வாகம் அட்டவணை சாதிகளுக்கான (SC,ST) இட ஒதுக்கீட்டை 4 சதவீதம் கூட பூர்த்தியடையாமல் பார்த்து கொண்டது இங்கு நினைக்கத்தக்கது. இதே போன்று தீண்டாமை தடுப்புச் சட்டமும் எந்த மாவட்ட நிர்வாகத்தாலும் காவல்துறை நிர்வாகத்தாலும் சட்டப்படி செயல்படுத்தப்படவில்லை. தென் மாவட்ட கலவரம் குறித்து நீதிபதி மோகன் தனது அறிக்கையில் குடிமைப் பாதுகாப்புச் சட்டம், வன் கொடுமைச் சட்டம் ஆகியவற்றுக்கு அதிகாரிகள் முக்கியத்துவம் கொடுப்பதில்லை[12] என்று கூறியிருப்பதும் 1997ல் நடந்த தென் மாவட்ட கலவரத்தின்போது அரசின் குழுவில் இடம்பெற்ற கிறிஸ்துதாஸ் காந்தி I.A.S. அதிகாரி மாவட்ட நிர்வாகமும் போலீசும் சட்ட ரீதியான நடவடிக்கைகளை எடுத்தால் தீண்டாமை உடனடியாக ஒழித்துவிட முடியும். தாழ்த்தப்பட்டோர் உரிமை மறுக்கப்படும்போது அதைச் சட்டம் ஒழுங்குப் பிரச்சினையாகவே மாவட்ட நிர்வாகமும் போலீசும் அணுகுகின்றன[13] என்ற கருத்துக்களிலிருந்து தீண்டாமையை குற்றம் என்று நடவடிக்கை எடுக்காத அரசு நிர்வாகத்தையே பார்க்க முடிகின்றது. ஆனால் இச்சட்டத்தை நீக்க வேண்டுமென்று தேவர் கூட்டமைப்பின்

சார்பில் சண்முகையா பாண்டியனும் கொங்கு வேளாளர் சங்கம் சார்பில் கோவை செழியனும் கோரி வருவது கவலைக்குரியது. சாதி வேற்றுமை பாராட்டாதவர்கள் இச்சட்டம் குறித்து ஏன் கவலைப்படவேண்டும் . இவர்களின் இக்கோரிக்கைகூட இவர்களின் சாதி ஆதிக்கப் போக்கையே காட்டக் கூடியதே ஆகும். இவ்வாறான அரசியல் மற்றும் அரசு நிர்வாகம் குறித்த ஒப்புதல் வாக்குமூலம் போன்று தமிழக முதல்வர் மு.கருணாநிதி திராவிட இயக்கம் எங்கே எதற்கு ஆரம்பித்ததோ அதன் நோக்கம் தோல்வி கண்டு விடுமோ என்று பெருமூச்சுவிடக் கூடிய நிலை ஏற்பட்டுள்ளது. ஆதிதிராவிடர் முன்னேற்றக்கழகம் என்று தி.மு.க.வின் பெயரை மாற்றி சாதி உணர்வைப் போக்கித் தமிழர்களை ஒன்றுபடுத்த வேண்டும்[14] என்று கூறியிருப்பது இங்கே கவனிக்கத்தக்கது ஆகும்.

## *5. வறுமை மற்றும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள்*

அண்மையில் நடந்த கலவரப்பகுதிகளுக்குச் சென்று வந்த தமிழ் மாநில காங்கிரசின் தலைவர் ஜி.கே.மூப்பனார் கலவரம் நடந்த பகுதிகளில் நான் சென்று பார்த்த போது இரண்டு சமூகத்தைச் சேர்ந்தவர்களும் பொருளாதார ரீதியாக ஒரே நிலையில் தான் உள்ளனர்[15] என்று அடிக்கடி மேடைகளில் பேசுவது இங்கு நினைக்கத்தக்கது. விவசாயக் கூலித் தொழிலாளர்கள் இருதரப்பிலும் பெருமளவில் உள்ளனர். ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ வேண்டிய நிலையில் தான் இரு தரப்பினரும் உள்ளனர். ஆனால் பிற்பட்ட வகுப்பினரின் சாதி இறுமாப்பு, வீண் கௌரவம் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு எதிராகச் செயல் படச் செய்கிறது. மோதலில் ஈடுபடுபவர்கள் தமிழர்கள் என்ற கருத்து தென் மாவட்டக் கிராமங்களின் காதுகளில் விழும் நிலை இல்லை[16] என்று தி. சிகாமணி குறிப்பிடும் கருத்தும் மனங்கொள்ளத்தக்கது. இவ்விரு இனத்தவருமே அதிகம் வானம் பார்த்த பூமியை நம்பி வாழும் வேளாண் மக்கள், அண்மையில் இப்பகுதி அடிக்கடி வறட்சியின் பிடியில் சிக்கித் தவிப்பதும் இதுபோன்ற மோதல்களுக்குக் காரணமாய் அமைந்து விடுகின்றன. மேலும் படித்துவிட்டு வேலையின்றி இருக்கும் இளைஞர்கள் அதிகம் பெருகிவிட்டதும் ஒரு காரணமாகும்.

இதல்லாமல் ஆதிக்கச்சாதிகளிடம் பெருகிவரும் கள்ளச்சாராயம், கஞ்சா, கந்து வட்டித் தொழிலும் நில ஆக்கிரமிப்புப் போன்றனவும் இது போன்ற மோதல்களுக்குக் காரணமாகின்றன என்றும் சொல்லப்படு கின்றன[17].

இதல்லாமல் தேவேந்திரர்கள் சமூகம் மற்றும் பொருளாதார ரீதியாக முன்னேறுவதை ஆதிக்கச் சாதியினர் விரும்பாமல் அவர்களை ஒடுக்க நினைப்பதும் கலவரத்திற்கான காரணங்களில் ஒன்றாகச் சொல்லப் படுகின்றது. இதற்குக் காட்டாக தேவேந்திரர்களின் பொருளாதார வலிமைமிக்க கொடியங்குளம் கிராமம் முழுவதும் அடித்து நொறுக்கப்பட்டுச் சூரையாடப்பட்டதைச் சொல்லலாம்.

## *6. தலைவர் சிலைகள், சுவரொட்டிகள்*

இவ்விரு இனத்தவர்களும் கலவரக் காலங்களில் மாறி மாறி உணர்ச்சியைத் தூண்டும் சுவரொட்டிகளை ஒட்டுவதும் கலவரத்தை மேலும் தூண்டி விடும் காரணங்களில் ஒன்றாகச் சொல்லப்படுகின்றது. 1996 மே மாதம் நெல்லையில் நடைபெற்ற கலவரத்திற்கு தேவர் பேரவையினர் ஒட்டிய அரிசன நாய்களே எனும் சுவரொட்டியும் அதற்குப் பதிலாகத் தேவேந்திரர்கள் ஒட்டிய சுவரொட்டியும் கலவரச் சூழலை மிகுதியாக்கியதாக அறிய முடிகின்றது. தேவேந்திரர்கள் விரும்பாத அரிசன் என்ற சொல்லை அவர்கள் மீது திணிப்பது அவர்களின் பண்பாட்டை இழிவுபடுத்துவதாகக் கருகின்றனர். இவர்கள் தங்களை மள்ளர் மரபினர் என்றும் தேவேந்திர குலவேளாளர் என்றுமே தனித்து அடையாளப்படுத்த விரும்புகின்றனர். ஏன் இப்பொழுது பிரசித்தி பெற்றுவரும் தலித் எனும் சொல்லையும் இவர்கள் ஏற்பதில்லை.

அண்மையில் நடந்த இராமநாதபுரம் கலவரத்திற்குக் காரணம் தேவர் பேரவையினரின் சுவர் விளம்பரமே என்று சொல்லப்படுகிறது. அரிவாள், துப்பாக்கி, வாள், வெடிகுண்டு, கதாயுதம் போன்ற ஆயுதங்களை வரைந்து வாளில் ரத்தம் சொட்ட கீழே ஓர் அரிந்த தலையை ஒரு கை தாங்கிப்பிடித்தபடி அதற்குக் கீழே சண்முகையா பாண்டியன் அழைக்கிறார் என்று எழுதப்பட்டிருந்ததும் இங்கு நினைக்கத்தக்கது.

இதெல்லாமல் தலைவர்களின் சிலைகள் அவமதிக்கப்படுவதும் கலவரங்களைத் தூண்டும் ஒரு காரணமாக அமைகின்றது. 1998 செப்டம்பரில் நடந்த விருதுநகர் கலவரம் அங்குள்ள தேவர் சிலை உடைக்கப்பட்டதால் ஏற்பட்டது ஆகும். ஆனால் இச்சிலையை அரசியல் காரணமாக சிலைக்கு உரியவர்களே உடைத்துவிட்டு தேவேந்திரர்களைத் தாக்கி கலகம் செய்ததாக இப்பகுதி மக்கள் சொல்கின்றனர். இச்சிலையுடைப்பு கலவரயுத்தி இன்னும் நிறைய கலவரத்தை உண்டு பண்ணும்.

## *தீர்வுகள்*

1 தென்மாவட்டச் சாதி மோதல்களின் மூல காரணம் சாதி ஆதிக்க மனோபாவமும் பொருளாதார மற்றும் பண்பாட்டு ஒடுக்குமுறையுமே ஆகும். இதனைத் தீர்க்காத வரை கலவரங்களும் சாவுகளும் தொடரும் என்பதே உண்மை.

2 இன்றுள்ள திராவிட அரசியல் கட்சிகள் பிறபட்டோரின் நலன் காக்கும் கட்சிகளாக மாறிவிட்டதால் ஒடுக்கப்பட்ட மக்கள் தங்களின் சமூக மற்றும் பொருளாதார விடுதலையைத் தரும் அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றியாக வேண்டும். இதற்கு இவர்கள் தனித்த அரசியல் இயக்கமாக உருமாறி ஆக வேண்டும். அல்லாதபட்சத்தில் இவர்கள் மேலும் ஒடுக்கப்படவே செய்வர்.

3 ஊர்ப் பொது இடங்களிலுள்ள சாதித் தலைவர்களின் சிலைகளை அகற்றிவிடலாம். இதற்கு இம்மக்களின் சம்மதம் பெற்று நடவடிக்கை தொடரப்படவேண்டும். இல்லையேல் உயிரற்ற சிலைகளுக்காக உயிருள்ள பல உன்னத மனிதர்களை நாம் இழக்க நேரிடும்.

4 கலவரங்கள் தொடர்ந்து நடக்கும் பகுதிகளில் சிறிய எண்ணிக்கையில் வாழும் மக்களை அம்மக்கள் அடர்த்தியாக வாழும் பகுதிகளுக்கு மாற்றி தனி இருப்பிட அமைப்பு (Seperate Settlement) ஏற்படுத்தலாம். இது அண்ணல் அம்பேத்கார் சொன்ன முக்கியத் திட்டங்களில் ஒன்று.

5 தீண்டாமைக் கொடுமைச் சட்டங்களைச் செயல்படுத்தத் தனிக் காவல் படையும், தனி நீதி மன்றமும் உடனே அமைக்கப்பட வேண்டும். இச்சட்டச் செயலாக்கம் கடுமையாக்கப்பட வேண்டும்.

6 தமிழ்நாட்டில் சாதி வாரியாக மக்கள் தொகைக் கணக்கெடுப்பு நடத்தப்பட்டு அதன் அடிப்படையில் தனித்தனியே அரசு சலுகைகளும் இட ஒதுக்கீடும், வேலை வாய்ப்புக்களும் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும். இவ்வாறு செய்வதனால் சில சாதியினர் மட்டுமே ஆதிக்க சக்தியாக மாறுவது தவிர்க்கப் படும். இப்படியான முறையில் எல்லாச் சாதிகளுமே மேல்நிலைக்கு வந்து சமநிலை ஏற்பட்ட பின்னர் சாதிகளே இல்லையென்று சமூக விடுதலை பிரகடனம் செய்யப்பட வேண்டும்.

7 சுடுகாடு, இடுகாடு ஆகியன நாட்டுடமையாக்கப்பட வேண்டும். அதுபோலவே நீர்க்கிணறுகளும், ஊர்ப் பொதுவாய் இருக்க வேண்டும்.

8 எல்லா அரசியல் கட்சிகளும் சாதியடிப்படையில் வேட்பாளரை நிறுத்தும் வழக்கத்தைக் கைவிட வேண்டும். மேலும் ஓட்டுக்காகச் சாதியைத் தூக்கிப் பிடிக்கும் முறை ஒழிய வேண்டும்.

9 ஒடுக்கப்பட்ட மக்கள் தங்களின் சமூக விடுதலைக்காகப் போராடுவதைத் தீவிரவாதக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் அரசின் பார்வையும் இதனை ஒடுக்க நினைப்பதும் மேலும் போராட்டத்தையும் மோதல்களையுமே உண்டாக்கும். இவர்களின் போராட்ட நியாயங்களை அரசு செயலாக்கிட நடவடிக்கை எடுக்க வேண்டும்.

10 அடக்க நினைப்போரையும் இதுவரை அடங்கி வாழ்ந்தோரையும் ஒரே தட்டில் வைத்துப் பார்க்கும் அரசின் பார்வை மாற வேண்டும். ஒடுக்கப்பட்ட மக்களை மனிதர்களாக சுயமரியாதையுடன் தலைநிமிர்ந்து வாழச் செய்ய உடனடி நடவடிக்கையில் அரசு ஈடுபட வேண்டும்.

11 பெருகி வரும் வேலை வாய்ப்பின்மையைப் போக்க பல தொழிற்சாலைகளை அமைத்து இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பை உண்டாக்க வேண்டும். மேலும் கள்ளச்சாராயம், கஞ்சா பயிரிடுதல், கந்து வட்டி, நாட்டு வெடிகுண்டு தயாரித்தல், நிலங்களை ஆக்கிரமித்தல் போன்ற சமூக விரோதச் செயல்களை அரசு உடனே களைய வேண்டும்.

12 தமிழக வரலாறு திருத்திய எழுதப்படவேண்டும். வேளாண் உழைக்கும் மக்களான மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளரின் வரலாறு மறைக்கப்பட்டுள்ளது. மூவேந்தர் மரபைத் தோற்றுவித்த மள்ளர் மரபினரை அரிசன், தலித், தாழ்த்தப்பட்டவன் என்று பொத்தாம் பொதுவாக்கி எழுதிச் செல்லும் வரலாறுகள் இனியும் தொடரக் கூடாது. அரிசன், தலித், தாழ்த்தப்பட்டவன், தீண்டத்தகாதவன் போன்ற இழிவுச் சொற்களுக்குத் தடை விதிக்க வேண்டும். அட்டவணை சாதியினரை அவரவர் பெயராலேயே தேவேந்திர குல வேளாளர் என்றும், ஆதிதிராவிடர் (பறையர்) என்றும், அருந்ததியர் (சக்கிலியர்) என்றும் அரசாலும் பிறராலும் அழைக்கும் வழக்கம் ஏற்படவேண்டும்.

13 தமிழ்ச் சினிமாப் படங்களில் ஒரு சில சாதிகளின் பண்பாட்டு மேன்மையை மட்டும் தூக்கிப் பிடிக்கும் திரைமறைவு வேலைகளுக்குத் தடை விதிக்க வேண்டும்.

14 அண்மையில் நடைபெற்று ஓய்ந்தது போல் தோன்றும் சாதீய வன்முறைத் தீயின் நாக்கு அடக்கப்பட்டு விட்டாலும் கூட்டுச்

சிந்தனையால் ஒருமித்த கருத்து ஓரளவு உருவானாலும் ஓர் உளமாற்றம் ஏற்பட்டாலொழிய நிரந்தரமான தீர்வு காண முடியாது என்பது சமூக விஞ்ஞானிகளின் கணிப்பு[19].

15 உரிமை கோருபவரும் அதனை மறுப்பவரும் மனம்மாறி ஒன்றுகூடி மனித மாண்புகளை மதிக்கும் பண்புகளை வளர்த்துக் கொள்ளும் நிலையினை அடைய சம்பந்தப்பட்ட இன மக்களின் தலைவர்களும் தொண்டு நிறுவனங்களும் அரசின் பல்வேறு அமைப்புக்களும் உளமாற முயற்சிக்க வேண்டும். இந்த உத்தி கடினமானதுதான். ஆனால் முழு மனதுடன் களத்தில் இறங்கி பணியைத் தொடங்கினால் தமிழ்நாட்டை உருமாறச் செய்யும் வகுப்பு வாதமும் சாதீய ஆதிக்கமும் மறையும். இன்று இல்லாவிட்டாலும் நாளை அடையாளம் இழந்து மறைந்து போகும்[20].

இதையெல்லாம்விடக் குறைந்தபட்சம் மனிதன் என்ற மனித நேயம் இருவருக்குள்ளும் ஏற்பட வேண்டும். ஒரு சமுதாயத்தின் எழுச்சியை விடுதலையை இன்னொரு சமுதாயம் கலகம் செய்தும் ஆதிக்கம் காட்டியும் ஒடுக்கிவிட முடியாது என்பதை இரண்டு தரப்பினரும் உணரும் போது மட்டுமே இதுபோன்ற கலவரங்கள் தொடராது.

## *குறிப்புக்கள்*

1 தேவநேயன், ஞா., ஒப்பியன் மொழிநூல் (முதல் பாகம்), ப.201.

2 ரவிக்குமார், தலித் கலை இலக்கியம் அரசியல், ப.10.

3 அனுமந்தன், கே.ஆர்., தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப்பட்ட நாயக்கர் ஆட்சியின் பாளையப்பட்டு முறை, தமிழில், பேராசிரியர் பெ. தங்கராஜ், பாட்டாளி முழக்கம், ஜூலை 1993.

4 டாக்டர் பூவிழி மைந்தன், தேவேந்திர குல வேளாளர்கள் - ஆதிதிராவிடர்கள் உரிமை பறித்த கள்ளர்கள் சட்டங்கள். மொழியாக்க மூலம் Caste in India - Its nature function and origin by Hutton J.H., pp.204-206.

5 மள்ளர், ஏ.வி.கே., மள்ளரும் சமூக விடுதலையும், ப.6.

6 தென்மாவட்டப் போராட்டங்கள் அறிக்கை, சமூக அக்கறையுள்ள எழுத்தாளர் - அறிஞர் குழு அறிக்கை, மள்ளர் மலர், ஜூலை 1997.

7 நாகராஜ், டாக்டர், காலச்சுவடு, ப.31, ஜூலை 1996.

8 தென்மாவட்டப் போராட்டங்கள் அறிக்கை, முற்காட்டிய படி.

9 மேலது

10 தினமணி, மே 21, 1997.
11 டாக்டர் அருணா அரசுகோ. மள்ளர் விடுதலையும் தந்தை பெரியாரும், விடுதலை, 6.11.97, ப.2.
12 தினமணி, 1.12.98, ப.4, கோவைப் பதிப்பு
13 தினமணி, 26.10.98, கோவைப்பதிப்பு.
14 தினமணி, 30.11.98, கோவைப்பதிப்பு.
15 தினமணி, 26.7.97, கோவைப்பதிப்பு.
16 தினமணி, 2.10.98, கோவைப்பதிப்பு.
17 தினமணி, 2.10.98, கோவைப்பதிப்பு.
18 தமிழன் எக்ஸ்பிரஸ், பிப்ரவரி 1997.
19 பரஞ்ஜோதி, காந்திஜி வழியில் சமத்துவம், தினமணி, 2.10.97.
20 மேலது.

 OOO

(கோவை ஆய்வு மையம் சார்பில் ஆர்.வி.எஸ். கல்லூரி டிசம்பர் 5,6 - 1999ல் நடைபெற்ற "சாதி மதங்களைப் பாரோம்" எனும் கருத்தரங்களில் வாசித்தளிக்கப்பட்ட கட்டுரை).

# 5. நாட்டுப்புற வழக்காறுகளில் மக்கள் வரலாறு

கல்வெட்டுக்கள், செப்பேடுகள், பட்டயங்கள், புதை பொருட்கள் மற்றும் இலக்கியங்கள் முதலியன மக்களின் வரலாற்றை அறிந்து கொள்ளத் துணை புரிகின்றன. எழுத்துருப் பெறாத மொழி பேசும் மக்களின் வரலாற்றையும் எழுத்தறிவற்ற பெரும்பான்மை எளிய மக்களின் வரலாற்றையும் அறிந்து கொள்வதற்கு நாட்டுப்புற வழக்காறுகள் பெரிதும் துணைபுரிகின்றன. கல்வெட்டுக்கள் முதலானவற்றில் காணப்படுவது போன்றே நாட்டுப்புற வழக்காறுகளிலும் சார்புத்தன்மை, மிகைப்படுத்தல் முதலான தன்மைகள் காணப்படுவது இயல்பு. மேலும் நாட்டுப்புற வழக்காறுகள் காலங்காலமாக வாய்மொழியாகக் கூறப்பட்டு வருவதால் அவற்றுள் புதியன இணைத்தலும் உண்டு. இவற்றை மனதில் கொண்டு கவனமாக, ஆராய்ந்தால் சமூக வரலாற்றை ஓரளவு சரியாக அறிந்து கொள்ள நாட்டுப்புற வழக்காறுகள் துணைபுரியும் எனும் டாக்டர். ஆறு. இராமநாதனின்[1] கூற்றுகிணங்க இக்கட்டுரை மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களின் வழக்காறுகளில் அம்மக்களின் வரலாறு எழுதப்பட்டுக்கிடப்பதைச் சுருக்கமாக அறிமுகம் செய்கின்றது.

## *மள்ளர்களின் வீழ்ச்சி*

சங்க இலக்கியத்தில் மள்ளர் என்று அறியப்படும் இம்மக்களே மருத நிலத்தில் நெல்லைப் பயிரிட்டு நெல் நாகரீகத்திற்கு வித்திட்டவர்கள் ஆவர். இந்த நெல் நாகரீகப் பண்பாடு பிற்காலப் பள்ளு நூல்கள் வரை வரலாறாய் நமக்கு மள்ளர்களிடம் இருப்பதைக் காட்டும். இம்மக்களின் முன்னோன் ஆன வேந்தனே நெல்லை முதன் முதலில் தமிழகத்தில் பயிரிட்டான் என்பதைக் குறிக்கும் பல தொன்மக்கதைகள் வழக்கிலிருக்கின்றன. இம்மக்களிடமிருந்தே அதாவது பண்டைய மருத நிலத்திலிருந்தே மூவேந்தர் மரபு தோன்றியது என்பதைக் குறிக்கும். பல இலக்கியச் சான்றுகளும் வரலாற்றுச் சான்றுகளும் இருப்பது போன்றே நாட்டுப்புற வழக்காறுகளும் வழக்கிலிருக்கின்றன. இவ்வாறு மருத நிலத்தில் அரசை தோற்றுவித்த மள்ளர் இனம் பிற்காலத்தில் அதாவது

நாயக்கர் ஆட்சிக்காலத்தில் தோற்கடிக்கப்பட்டு பள்ளர் ஆகவும் வேளாண்மைக் கூலிகளாகவும் ஆக்கப்பட்டனர் என்பது வரலாறு. இந்த வரலாற்றுச் சான்றை உறுதி செய்யும் பல வழக்காறுகள் தமிழகம் முழுவதும் வழக்கிலிருக்கின்றன. இக்கட்டுரை பழனி வட்டாரத்தில் வழக்கிலிருக்கிற ஒரு சில வழக்காறுகளை அறிமுகம் செய்து அவ்வழக்காறுகள் வரலாற்று ஆவணமாகத் திகழ்வதைச் சுட்டிக்காட்ட முயல்கின்றது.

## *வரலாறு பேசும் வழக்காறுகள்*

"வந்தவுக வலுக்கனும்
இருந்தவுக இல்லாம போகனும்"
"பொம்பளக்கு புருஷன் இல்லாமப் போகனும்
ஆம்பளக்கி பெண்டாட்டி இல்லாமப் போகனும்"

என்ற இரண்டு வழக்காறுகள் பழனி வட்டாரத்தில் குறிப்பாகத் தேவேந்திர குல வேளாளர்களிடம் வழக்கிலுள்ள வழக்காறு ஆகும். இந்த வழக்காறு பழனி அருகிலுள்ள சிந்தலாடம் பட்டியில் ஒரு பெண் தகவலாளி சொல்லியது ஆகும். இந்த வழக்காறு குறித்து மனதில் பதிவு செய்து கொண்டு இதற்கான விளக்கத்தை பின்னொரு நாள் அதே சிந்தலாடம் பட்டியில் வாழும் வைத்தியர் தங்கவேலு அவர்களிடம் கேட்டேன். அவர் சொன்ன வரலாறு வருமாறு அப்படியே இடம் பெறுகிறது.

"பழனி வட்டாரத்தில் உள்ள ஓர் ஊரின் பெயர் மஞ்சநாயக்கன்பட்டி. இந்த ஊரின் பழைய பெயர் பழையூர் என்பதாகும். இந்த ஊர்ல மஞ்சம்மாள் எனும் மள்ளர் குலப் பெண்ணின் வம்சா வழியினர் பிரசித்தி பெற்று வாழ்ந்ததால் பழையூர் என்பது மறைந்து மஞ்சப்பட்டி என்றாகியது. இதன் பின்னர் நாயக்கர் ஆட்சியில் எல்லா ஊரின் பெயரும் மாறியது போன்று இந்த ஊரின் பெயரும் மாற்றம் பெற்று மஞ்ச நாயக்கன் பட்டி ஆனது. மள்ளர்களும், கவுண்டர்களும் குடியிருந்த மஞ்சப் பட்டியில் கம்பளத்து நாயக்கரும் குடியேறினர். இந்தக் காலக்கட்டத்தில் மள்ளர்களுக்கும் நாயக்கர்களுக்கும் பல சமூக மோதல்கள் நடந்தன. இந்தச் சமயத்தில் கம்பளத்து நாயக்கர் இனப்பெண் கொடுத்த சாபமே மேற்சொன்ன வழக்காறு வந்தவுக வலுக்கனும் என்றால் 16ம் நூற்றாண்டில் குடியேறிய நாயக்கமார் வாழனும் என்றும் இருந்தவுக இல்லாமப் போகனும் என்றால் மள்ளரும் கவுண்டரும் பூர்வீகமாக இந்த ஊரில் இருப்பவர்கள் இவர்கள் இல்லாமல் போகனும் என்றும் பொருளாகும். கம்பளத்து நாயக்கமார் மந்திரம் மாயமென்று செய்து ஆண்களுக்கு

மனைவியும் பெண்களுக்கு கணவனும் இல்லாது செய்து மனித இருப்பையே வேரறுத்தார்கள். இதனால் மஞ்ச நாயக்கன்பட்டியில் வாழ்ந்த மள்ளரும் கவுண்டரும் இடம் பெயர்ந்து சிந்தலாடம் பட்டி வந்து சேர்ந்தனர்.'' என்று மூச்சுவிடாமல் சொன்னார். இவ்வாறு இவர் சொல்லியதை உறுதி செய்யும் வகையில் மஞ்ச நாயக்கன்பட்டியில் இன்று நாயக்கர் இனம் மட்டுமே வாழ்கின்றது. ஆனால் இந்த ஊரிலுள்ள காளியம்மன்கோயில் தேவேந்திரர்களுக்குச் சொந்தமானதாக இருப்பதும் அண்மைக்காலம் வரை இவர்களுக்கே முதல் மரியாதை கொடுக்கப்பட்டு வருவதும் முற்காலத்தில் தேவேந்திரர்கள் இங்கு வாழ்ந்ததை உறுதி செய்கிறது. இதல்லாமல் மஞ்ச நாயக்கன்பட்டியின் மையப்பகுதி (நடுத்தெரு) பள்ளன் படைக்கால் என்று அழைக்கப் படுகிறது. இங்குள்ள மஞ்சம்மாள் வழியினரின் தோட்டம் இன்றும் "குடும்பன் தோட்டம்'' என்றே அழைக்கப்படுகிறது மேலும் மஞ்ச நாயக்கன் பட்டிக்கு அருகிலுள்ள காளிபட்டி எனும் ஊரிலுள்ள நாயக்கருக்கு உரிமையான நிலம் முழுவதும் "பசுவைக்குடும்பன்'' என்பரின் வாரிசுகளின் நிலமாக இருந்ததைப் பத்திரப் பதிவுகள் சுட்டுகின்றன. இங்குள்ள 180 ஏக்கர் அளவுள்ள செங்குளம் கண்மாயில் பசிவக்குடும்பன் வகையறாக்களின் முன்னோர் நால்வர் சிலை உள்ளது. இதன் அருகே ஒரு செல்லாண்டியம்மன் கோயில் உள்ளது. இந்த இரண்டு கோயிலையும் பராமரிக்க 20 ஏக்கர் நிலம் பசிவக்குடும்பன் வகையறா எழுதி வைத்துள்ளனர். ஆனால் இந்த நிலம் இப்போது கோயிலுக்கு உரிமையானதாக இல்லை. பழனிச்சாமி நாயக்கர் என்பவருக்கு அனுபவச் சொத்தாக இருக்கின்றது[2]. இப்படியாக பலவரலாறுகள் மக்களின் வரலாறாகக் காணக்கிடக்கின்றன. இந்தத் தகவலை கட்டுரையாளரிடம் சொல்லிக் கொண்டிருந்த தகவலாளி திடீரென வேறொரு தகவலைச் சொன்னார். அது வருமாறு.

"ஒட்டன் சத்திரம் அருகில் இடும்பக் குடும்பன் பட்டி எனும் ஊர் இருக்கின்றது. இங்குள்ள செல்லாண்டியம்மன் கோயிலைக் கந்தக் குடும்பன் என்பவரும் இடும்பக் குடும்பன் என்பவரும் ஏற்படுத்தினர். ஆனால் நாயக்கர் ஆட்சியில் தொட்டிய நாயக்கர் நாங்கள் தான் முதல் பொங்கல் வைப்போம் என்று பொங்கல் வைக்க முயல அம்மன் அதற்கு அனுமதிக்கவில்லை. மறுபடியும் தேவேந்திரர்களே முதல் பொங்கல் வைத்தனர். ஆனால் தேவேந்திரர்கள் ஏற்படுத்திய இக்கோயிலில் நாயக்கருக்கும் கவுண்டருக்கும் உரிமை ஏதோ ஒரு காலத்தில் மாறிப்

போனது'' என்று முடித்தார்[3]. இதனைத் தகவலாளி சொல்லிக் கொண்டிருக்கும் போதே இன்னொரு தகவலாளி உடுமலை வட்டம் தினைக் குளத்தில் வழிபடப்படும் வீரமாத்தி வெங்கலமடையாள் எனும் தெய்வத்தின் கதையை வருமாறு சொல்லத் தொடங்கினார்.

"அந்த நாயக்க ஜமீன் காலத்தில் செங்குளம் கண்மாயை நீராணிக்கம் செய்தவர் ஆவுடையாக் குடும்பன் இவர் மனைவி பெயர் வெங்கலம்மாள். ஆவுடையாக் குடும்பன் தினந்தோறும் நாயக்க ஜமீனுக்கு மீன் பிடித்துக் கொடுத்து அனுப்பவேண்டும். ஒரு நாள் மீன் பிடிபடல. ஒரு மீன்தான் கிடைச்சது. அதை ஜமீனிடம் கொண்டு போனா நல்லா இல்ல என்று நினைத்து நிறை மாதக் கருவுற்றிருக்கும் தன் மனைவி வெங்கலம்மாள் ஆசைப்பட்டாள் என்று கொடுத்துவிட, ஜமீன் மீன் கேட்டு வர, மீன் கிடைக்காததை ஆவுடையாக் குடும்பன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, வெங்கலம்மாள் அந்த ஒரு மீனை குழம்பு வைத்து தனது கணவனுக்கு சாப்பாடு கொண்டு வர. இதை அறிந்த ஜமீன், தன்னை ஏமாற்றியதாகச் சொல்லி ஆவுடையாக் குடும்பனை வாளால் வெட்டிச் சாய்க்கின்றான். கணவன் இறந்த பின் வெகுண்டெழுந்த வெங்கலம்மாள்

"பெருமீன் அருக
அரண்மனை அழிய"

என்று சாபமிட்டுவிட்டு கணவன் சிதையுடன் தானும் இறங்கி தெய்வமாகிவிட்டாள். இவளின் நினைவாக இங்குள்ள தேவேந்திரர்கள் வழிபடும்தெய்வமே வீரமாத்தி வெங்கலமடையாள் என்று முடித்தார். கணவன் இறந்ததும் அவன் சாவுக்குக் காரணமான ஜமீனுக்கு சாபமிட்டுவிட்டு கணவனுடன் எரியுண்ட அவள் வீரம் கருதியே "வீரமாத்தி வெங்கலமடையாள்" என்று அழைக்கப்படுவதாக இம்மக்கள் நம்புகின்றனர். மடையாள் என்பதற்கு கண்மாயின் மதகு காக்கும் காவல் தெய்வமே அத்தெய்வம் என்றும் சொல்கின்றனர். இப்படி பல வரலாறுகள் மக்களின் தொன்மை வழக்காறுகளில் காணப்படுகின்றன.

இதல்லாமல் நாட்டுப்புறப் பாடல்களிலும் நாயக்கர் ஜமீன் ஆட்சிக் காலம் குறித்த செய்திகள் இடம் பெறுவதைப் பார்க்க முடிகின்றன.

"கந்தனே திருச்சடை வேல் முருகா
பாலசமுத்திரம் வையா புரிக் குளமும்
வந்தவர் தானம் செய்ய..." [3]

என்ற பாடலடிகள் உடுமலை வட்டம் சோமங்கலம் எனும் கிராமத்தைச் சார்ந்த சாந்தாமணி எனும் நாயுடு இனத்தைச் சேர்ந்தவர் பாடிய கும்மிப் பாடலடிகள் ஆகும். இதே போன்று

"காக்காயன் தோப்பு வழி
மேஞ்சு வரும் காட்டு மிருக சாதி
அம்மைய நாயக்கன் போல
பழனி முருகன் வந்தாராம்
.............................................."[4]

என்ற கும்மிப் பாடலடிகள் உடுமலை வட்டம் குமரலிங்கம் எனும் ஊரைச் சேர்ந்த தேவேந்திர குல வேளாளர் வள்ளி நாயகம் பாடியது ஆகும். இந்த இரண்டு கும்மிப் பாடல்களில் இரு சமூகத்தின் குரல்களும் அதோடு அன்றைய வரலாறும் பதிவு செய்யப்பட்டிருப்பதனைக் காணமுடியும். பழனி முருகன் கோயிலுக்கு அடிவாரத்தில் உள்ளது பாலசமுத்திரம் எனும் ஊரும் வையாபுரி குளமும் ஆகும். இந்த இரண்டும் தேவேந்திரர்களுக்கு உரியது. இதனை நாயக்க மன்னன் பழனி கோயிலுக்குத் தானமாகக் கொடுத்ததை மகிழ்வாகப் பாடுபவர் நாயக்கர் சமூகத்தவர் ஆவார். ஆனால் தானம் கொடுத்த அம்மைய நாயக்கன் காட்டு மிருக சாதி என்று எதிர்க்குரலில் பாடியிருப்பவர் தேவேந்திர குல வேளாளர் ஆவார். இப்படியான வழக்காறுகள் வழக்கிலிருக்கும் சமூகத்தைச் சார்ந்த வழக்காறுகளில் சொல்லப்படும் செய்திகள் வேறுபடுவதனையும் அதில் ஓர் உண்மை ஒளிந்திருப்பதனையும் காணமுடிகிறது. நாயக்கர் ஆட்சியில் பல கிராமங்கள் கோயிலுக்கும் ஜமீனுக்கும் எந்த நிபந்தனையுமின்றி தானமாக வழங்கப்பட்ட வரலாறு இங்கு நினையப்பட வேண்டும்.

பழனி முருகன் கோயிலில் பல வழிபாட்டு உரிமைகளைப் பெற்றிருப்பவர்கள் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் ஆவர். இதனைப் 16ம்நூற்றாண்டுக்கால பழனிச் செப்புப் பட்டயம் காட்டுகின்றது[5] இந்தச் செப்புப் பட்டயத்தின் அடிப்படையில் 1997 முதல் தைப் பூசத் திருவிழாவில் தேவேந்திரர் மடத்திற்கு முதலில் முருகன் எழுந்தருளும் உரிமை வழங்கப்பட்டிருக்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது. பழனி கோயில் அடிவாரத்தில் 'பண்டாரப் பள்ளர்' எனும் ஒருவகை தேவேந்திர இனப் பிரிவினர் 500 குடும்பத்திற்கும் மேலாக வாழ்ந்து வருகின்றனர். இந்தப் பண்டாரப் பள்ளரிடமிருந்தே இராமப்பய்யன் அந்தணருக்கு பூசாரி உரிமையை மாற்றிக் கொடுத்தான் என்றும் ஒரு மரபு வழி வழக்காறு இருக்கிறது. பழனி தைப்பூசத்

திருவிழாவின் தொடக்கம் பழனி ஆயக்குடியிலுள்ள இடும்பன் கோயிலில் இருந்தே தொடங்குகின்றது இந்த இடும்பன் கோயில் பண்டைக்காலம் தொட்டு இன்றுவரை தேவேந்திரர்களின் உரிமையுடையதாகவே விளங்கி வருகின்றது. பழனி முருகன் கோயிலுக்கு எடுத்து வரும் காவடியில் ஆயக்குடியிலிருந்து வரும் தேவேந்திரர்களின் நெல் காவடிக்கே இன்றும்முதல் மரியாதை வழங்கப்படுகின்றது. மார்கழி மாதம் முழுவதும் பழனி முருகனை நீராட்டப் பயன்படுத்தும் ஒரு குடம் இளநீர் ஒரு குடம் பால் ஆகியவற்றை பழனியில் வாழும் தேவேந்திரர்களே காலங்காலமாகக் கொடுத்து விடுகின்றனர். பழனி கோயிலைச் சுற்றி வாழும் மள்ளர்களின் வாழ்வியலோடு பழனி முருகன் கோயில் பல வகையில் உறவுடையதாக இருக்கின்றது. பழனி வட்டாரத்தில் பெரும் எண்ணிக்கையில் வாழ்பவரும் இவர்களே ஆவர். பழனி மாரியம்மன் தேரோட்டம் குறித்துப் பாடப்படும் பாடல்

"யாரு தொட்டாலும்
தேர் ஓடாது
எவரு தொட்டாலும்
தேர் ஓடாது
தேருக்கு உகந்தவன்
தேவேந்திரன் தொட்டால்
தேர் ஓடும்"

எனும் கும்மிப்பாடல் இப்பகுதியில் பிரசித்தி பெற்றுள்ளது. பழனி மாரியம்மன் கோயிலில் பல வழிபாட்டு உரிமைகளை இம்மக்கள் பெற்றிருக்கின்றனர். இந்தக் கோயிலில் "கரியாக் குடும்பன்" எனும் தேவேந்திரன் சிலையும் ஒரு தெய்வமாக வணங்கப்படுகின்றது.

பழனி பழைய ஆயக்குடி தேவேந்திரகுல மக்கள் வழிபடும் குல தெய்வ வழிபாட்டில் கம்பளத்துத் தெய்வம் எனும் பெயரில் ஒரு வழிபாடு இடம் பெற்றுள்ளது. தமது தெய்வ வழிபாட்டை மேளமடித்து வழிபடும் இம்மக்கள் கம்பள தெய்வத்தை வழிபடும் போது உருமிமேளம் அடித்து வழிபடுகின்றனர்[6]. இந்த மேளம் அடிக்கும் போது ஜக்கம்மாள் தெய்வமேறி ஒரு மள்ளர் குலப்பெண் சாமி வந்து ஆடுகிறார். இந்த ஜக்கம்மாள் வழிபாடு நாயக்கர் காலத்தில் தமிழகம் வந்தது ஆகும். இவ்வழிபாடு தமிழர்களின் வழிபாட்டில் வலுக்கட்டாயமாகத் திணிக்கப் பட்டிருப்பதையும் இச்சான்று எடுத்துக் காட்டுகின்றது.

## *தொகுப்புரை*

மள்ளர்குல மக்களின் வழக்காறுகளில் அவர்களின் சமூக வரலாறும் (Social History) பின்னிப்பிணைந்தே இடம் பெற்றிருப்பதை இக்கட்டுரை சுட்டிக் காட்டியுள்ளது. குறிப்பாகப் பழனி வட்டாரத்தில் நாயக்க ஜமீன்களால் மள்ளர்களுக்கு ஏற்பட்ட இன ஒடுக்குமுறை குறித்த வரலாறு சொல்லும் பல வழக்காறுகள் வழக்கிலிருப்பதை இக்கட்டுரை சுருக்கமாகப் பதிவு செய்துள்ளது.

## *குறிப்புகள்*

1 ஆறு. இராமநாதன், "நாட்டுப்புறவியல் ஆய்வுகள்", தொகுதி. 2, ப 100.
2 மா. கிருஷ்ணசாமி, பழனி வட்டாரம் பழையூர் மஞ்சநாயக்கன்பட்டி பூர்வீக வரலாறு, (கட்டுரை) குருசாமிசித்தர், தே. ஞானசேகரன் (ப.ஆ.) தமிழர் பண்பாட்டு வரலாறு - 2000, ப. 175 - 178.
3 சு. சுப்பிரமணியன், "உடுமலை வட்டார நாட்டுப் புறப்பாடல்கள் - ஓர் ஆய்வு", பாரதியார் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப் பட்ட பிஎச்.டி. பட்ட ஆய்வேடு, பக். 200 - 2001.
4 மேலது
5 பழனி செப்புப் பட்டயம், குருசாமி சித்தர், தே. ஞானசேகரன் "தமிழர் பண்பாட்டு வரலாறு", ப. 325.,
6 செ. சுப்பிரமணியன், "தேவேந்திர குல வழிபாட்டு மரபுகள் (பழனி வட்டாரம்)", ப. 20.

ooo

(இக்கட்டுரை தஞ்சை, தமிழ்ப்பல்கலைக்கழகம், நாட்டுப்புறவியல் துறையின் சார்பில் 5,6 2001ல் நடைபெற்ற "தேவை நாட்டுப்புறவியல் ஆய்வு" எனும் கருத்தரங்கில் வாசித்தளிக்கப்பட்டது.)

# 6. பழன மக்களும் பழனி முருகனும்

தமிழர்களின் முழுமுதற்கடவுளான முருகனின் தொன்மைக் கூறுகள் பண்டைய தமிழிலக்கியங்களிலிருந்து அறியக் கிடக்கின்றன. தமிழரின் கடவுள் கோட்பாடு மனிதனை அதாவது குல முன்னோரை வழிபடுவதே ஆகும். தமிழரின் திணை நிலக்கடவுளான மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகியோர் அந்தந்த நிலத்தின் தலைவர்களே ஆவர். இவ்வழிபாட்டு முறை பிற்காலத்தில் வடவரின் வருகையால் மால் திருமாலாகவும் விஷ்ணுவாகவும், முருகன் கந்தனாகவும் சுப்பிரமணியனாகவும், வேந்தன் தேவேந்திரனாகவும் இந்திரனாகவும் மாற்றப்பட்டு புனைந்துரைக்கப்பட்டனர். இந்நால்வருமே தமிழ் நானிலத்தில் உருவாகிய தமிழர் தெய்வங்கள் ஆவர். இவர்கள் குறித்த ஆய்வில் புராண மரபைத் தள்ளி வைத்துவிட்டுத் தமிழரின் பண்டைய வாழ்வியலோடும், இலக்கண இலக்கிய மரபோடும் நாம் ஆய்வு செய்ய வேண்டும் அப்பொழுதுதான் இம்மண்ணின் மக்களுக்கும் இம்மண்ணில் தோன்றிய கடவுளர்களுக்கும் உள்ள உண்மையான சமூகப் பண்பாட்டுத் தொடர்புகள் விளங்கவரும். இக்கட்டுரை பழனிமலை முருகனுக்கும் பழன மக்களாகப் பண்டை காலத்திலிருந்து இன்று வரை மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர்களுக்கும் உள்ள சமூகப் பண்பாட்டுத் தொடர்புகளையும் வழிபடு உரிமையையும் கோடிட்டுக் காட்ட முயல்கின்றது. இக்கட்டுரையின் முதன்மைச் சான்றுகளாகப் பழனி செப்புப் பட்டயம், வையாபுரிப்பள்ளு, பேரூர்ப் புராணம் பள்ளுப்படலம் ஆகியன அமைகின்றன. துணைமைச் சான்றுகளாக இம்மக்களிடம் காணப்படும் முருக வழிபாட்டு முறைகளும் இலக்கியச் சான்றுகளும் அமைகின்றன.

## *பழன மக்களும் பழனி முருகனும்*

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் மருதநில மக்களாகப் குறிக்கப்படும் மள்ளர் என்போரே இன்று மள்ளர் (பள்ளர்) தேவேந்திர குல வேளாளர் என்று பெயர் பெறுகின்றனர். இம் மருதநிலம் கழனி, வயல், பண்ணை, பழனம் என்று பெயர் பெறும். நெல் பயிரிடும் நிலம் சிறப்பாகப் பழனம் என்று அழைக்கப்பட்டதாகச் சங்கப் பாடல்களும்

பள்ளு நூல்களும் தெரிவிக்கின்றன. இவ்வாறான நெல்விளையும் பழனத்தால் சூழப்பட்ட மருதநிலத்தின் ஊடே உள்ள மலையில் உறைந்துள்ள கடவுள் பழனிமலை முருகன் என்று பெயர் பெற்றது. அதாவது பழனத்தால் சூழப்பட்ட ஊர் என்பதாகும். பழம் நீ என்று சொல்லும் புராணக்கதை எல்லாம் பின்பு புனைந்துரையாகச் சேர்க்கப்பட்டதாகும். மேலும் நிலக்கடவுள் எனும் வகையில் முருகனை குறிஞ்சிக்கிழோனாக்கி மலையுடன் தொடர்புபடுத்திப் பேசுவதே தமிழர் மரபு. இப்பழனி முருகன் கோயிலைச்சுற்றி இருக்கும் ஊர்களில் பெரிதும் வாழ்ந்த நெல் வேளாண்மையை உயிர் மூச்சாகக் கொண்டு வாழும் மள்ளர் போற்றி வழிபடும் தெய்வம் பழனி முருகன் என்றால் மிகையாகாது.

நாயக்கர் ஆட்சிக் காலத்திற்குப் முன்பு வரை தமிழரிடமே இருந்த இக்கோயில் பின்பு ஆட்சி மாற்றத்தால் தமிழர் பூசாரி இல்லாது பார்த்துக் கொள்ளப்பட்டதை "திருமலை நாயக்கனின் படைத்தளபதியான தளவாய் இராமப்பையா என்னும் தெலுங்குப் பிராமணன் பழனி ஆண்டவர் கோயிலில் பண்டாரங்களிடம் இருந்த உரிமையைப் பறித்து அந்தணர்களுக்கு அளித்தான்"[1] என்ற வரலாற்று நிகழ்வு காட்டும். இதே காலக்கட்டத்தில் கி.பி. 1528ல் மறுபடியும் எழுதப்பட்ட பழனிச் செப்புப் பட்டயம் பழனி முருகனுக்கும் மள்ளர்களுக்கும் இருக்கும் வழிபாட்டு உரிமைகள் பற்றிப் பேசுவதை நாம் பார்க்க முடியும். இப்பட்டயம் இம்முருகன் கோயிலுக்குக் கீழேயுள்ள பாலசமுத்திரம் எனும் ஊரிலிருந்து மதுரை அருங்காட்சியகத்தாரால் கையகப்படுத்தப் பட்டுள்ளது. இப்பட்டயத்தில் பழனி முருகனை வழிபடும் உரிமை பெற்றவர்கள் என்ற பட்டியலில் கோவை, திண்டுக்கல், மதுரை, தஞ்சாவூர், சேலம் இராமநாதபுரம், திருநெல்வேலி போன்ற ஊர்களின் பெயர்களும் ஊர்த்தலைவர் (அனைவரும் தேவேந்திர குல வேளாளர்கள்) பெயர்களும் இடம் பெற்றுள்ளன. இதில் பாலசமுத்திரம் எனும் ஊரிலுள்ள நாச்சிக் குடும்பனார், குமாரக் குடும்பனார் பெயர்களும், இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. மேலும் பழனிக்குக் கிழக்கேயுள்ள ஆயக்குடியில் வாழும் மள்ளர்களிடம் இக்கோவிலின் வழிபாட்டு உரிமைகள் தொடர்பான ஆவணங்கள் இருப்பதுவும் இங்கு நினைக்கத்தக்கது. இவையெல்லாம் பழனி முருகன் கோயிலில் மள்ளர் சமூகத்திற்கு உள்ள சொந்தத்தையும் வழிபாட்டு உரிமையும் காட்டும் சான்றாகும்.

பழனி முருகனைப் பாட்டுடைத் தலவனாகக் கொண்டு எழுதப் பட்டுள்ள வையாபுரிப்பள்ளு பழனி முருகனின் அன்பர்களாக மள்ளர்கள் விளங்குவதைக் காட்டும். இன்றும் இப்பகுதியிலுள்ள மள்ளர்களின் குல தெய்வக் கோயில்களிலும் பழனி மாரியம்மன் கோவில்களிலும் பள்ளு நாடகங்கள் நடிக்கப்பட்டு முருகன் பெருமை பேசப்படுவதும் குறிப்பிடத்தக்கது. அதுகுறித்து பேராசிரியர் டாக்டர் சுப்பிரமணியன் வருமாறு குறிப்பிடுவது இங்கு நினைக்கத்தக்து.

“பழனி நகரில் மாரியம்மன் கோவிலுக்கு எதிரே வாழும் பள்ளர் இன மக்கள் தங்கள் குல தெய்வ விழாவின் போது 'பள்ளு நாடகத்தைப்' பாவனையால் நடித்துக் காட்டியதைக் கள ஆய்வின் போது காணமுடிந்தது. கோயிலுக்கு முன் கதிர் அறுத்தல், கதிருக்குக் காவலிருத்தல், தாம்படித்தல், மீன்பிடித்தல் முதலிய செயல்களைப் பாவனையால் செய்கிறார்கள். கோவிலின் முன் ஒரு சிறிய வைக்கோல் போர், நெற்கதிர் இவற்றைக் குவித்து வைத்திருந்தனர். குளம் ஒன்றை அமைத்து அதில் தண்ணீர் நிறுத்தி வைத்திருந்தனர்... ஆண்டுதோறும் குல தெய்வ விழாவின் போது இந்நாடகத்தை நடித்துக் காட்டுவோம் என்று பெண்கள் பலர் ஆய்வாளரிடம் தெரிவித்தனர்”[2].

இக்கருத்து பழன வயலின் அதாவது நெல்லின் மக்கள் இவர்கள்தான் என்று காட்டும் மிகப்பெரிய மானுடவியல் (Anthroplogy) சான்றாகும். இதனை அரண்சேர்க்கும் வகையில் பழனிச் செப்புப் பட்டயமும் பல தொன்மைக் கதைகளும் பல கல்வெட்டுச் சான்றுகளும் இலக்கியச் சான்றுகளும் இம்மக்களின் முன்னோரே நெல்லைக் கண்டுபிடித்துப் பயிர் செய்ததாகக் குறிப்பிடும்.

செங்கோட்டுப் பள்ளு நூல் தேவேந்திர குல முதல்வன் மூவேந்தர் வேண்டுகோளின்படி தேவலோகம் சென்று நெல் பயிரைக் கொண்டுவந்து பூமியில் பயிர் செய்ததாகக் குறிப்பிடும். இடைக்காலத்தைச் சேர்ந்த கரிவலம் வந்த நல்லூர்க் கல்வெட்டில் இம்மரபினர் பாண்டியன் உக்கிரப் பெருவழுதியால் தேவலோகத்தி லிருந்து சென்னெல், கன்னெல், கதலி, பனை முதலிய விதைகளுடனும் காளையுடனும் பூமிக்கு அழைத்து வரப்பட்டதாகவும் அவர்கள் ஒரே நாளில் பன்னீராயிரம் கிணறுகளைத் தோண்டி வேளாண்மை கண்டு நாட்டைச் செழிப்பித்தாகக் கூறப்பட்டுள்ளது[3].

வரலாற்றறிஞர் கே.ஆர். அனுமந்தன் ஈராயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக நெல் விவசாயத்தை விடாமல் செய்துவரும் ஒரே சமூகம்

உண்டென்றால் அது பள்ளர்கள் தான் என்று கூறுவார்[4].

நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது எனும் பழமொழியும் நெல் வேளாண்மையைப் போற்றும் பள்ளு நூலைச் சிறப்பிக்க எழுந்த பழமொழியாகும். மேலும் நெல் வேளாண்மை இலக்கியமான பள்ளு நூலின் தலைமாந்தர்களாக இவர்களே இருப்பதும் நெல் வேளாண்மைக்கும் உரியவர்கள் இவர்களே என்பதையும் பழனத்தால் (நெல் வயல்) சூழப்பட்ட பழனக் கடவுளான முருகனுக்கும் இம்மக்களுக்கும் மிக நெருங்கிய உறவுகள் இருப்பதைப் பார்க்க முடியும். சிவன் மள்ளராகவும், பார்வதி பள்ளியாகவும் உருவெடுத்து வயலில் நெல் நடவு செய்ததும், விநாயகரும், முருகனும் மள்ளச் சிறார்களாக வயலில் நாற்று முடி எடுத்துப் போட்டுச் சிறப்புச் செய்து நிகழ்த்திய புராணக் கதையும் இங்கு நினைக்கத்தக்கது.

## *மள்ளர் சிறுவனாக முருகன்*

கோவை பேரூரிலுள்ள பட்டீஸ்வர மள்ளர் திருக்கோயிலில் இம்மக்கள், சிவன் மள்ளராக மாறி நெல் வேளாண்மை செய்ததை ஆண்டுதோறும் நாற்று நடவுத் திருவிழா எனும் பெயரில் கொண்டாடுவதை இங்கு நினையலாம். இத்திருவிழா தொடங்கிய பின்னர்தான் இங்குள்ள பிற விவசாயிகள் நெல் நடவைத் தொடங்குகின்றனர். இவ்விழாவில் மள்ளரினப் பட்டக்காரர்கள் சிவனாகவும், பெண்கள் பார்வதியாகவும் பாவித்து நடவு செய்கின்றனர். சிறுவர்கள் முருகனாகவும், விநாயகராகவும் வேடமிட்டு நெல் வயலில் வேலை செய்வதையும் காணலாம். பெரும்பாலான ஆண்களும், சிறுவர்களும் முருகன் வேடமிட்டே வருவதை நோக்குகையில் இம்மக்களுக்கும் முருக வழிபாட்டிற்கும் உள்ள தொடர்பை அறிய முடியும். இதனால்தான் என்னவோ தங்களின் குலத்தில் தோன்றிய விநாயகருக்கு ஆசியாவிலேயே மிக உயரமான 19 அடி 10 அங்குல உயரமும் 190 டன் எடையும் கொண்ட சிலையை ஒரே கல்லில் அமைத்து இம்மக்கள் சிறப்புச் செய்துள்ளனர் என்று கருதலாம். 25.01.98 அன்று கோவை புலியகுளத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்ட அருள் மிகு முந்தி விநாயகர் சிலை இம்மக்களின் இருபதாண்டு முயற்சியால் செய்யப்பட்ட ஆன்மீக வரலாற்றுச் சாதனையாகும்.

இம்மக்கள் பழனியைச் சுற்றியுள்ள வயல்வெளிகளில் வாழ்வது போன்றே பேரூர்க் கோயில் உள்ள நொய்யலாற்றுப் பழன வயல்களைச்

சுற்றிலும் 40 ஊர்களுக்கு மேல் வாழும் இம்மக்களின் மருத நிலத்து வாழ்க்கையும் இங்கு நினையத்தக்கது. இங்குள்ள மள்ளர்கள் பண்ணாடிகள் என்று பெயர் பெறுகின்றனர். பண்ணை என்றால் மருதநிலம். பண்ணாடி என்றால் மருதநிலத்தை ஆள்பவன் என்றும் சொல்லப்படுகின்றது. இப்பண்ணாடி மக்கள் குறித்தும் பழனிச் செப்புப் பட்டயமும் சொல்லுகின்றது. கோவைப் பகுதி பண்ணாடிகளுக்குள்ள வழிபாட்டுரிமையும் தெளிவாகச் சொல்லப் பட்டிருப்பதைக் காண முடியும். இது அல்லாமல் வேளாண்மை என்னும் அடிச் சொல்லாகிய வேள் என்னும் சொல்லுக்கு முருகக் கடவுள்[5] என்ற விளக்கம் சொல்லப்படுவதால் வேளாண் மக்களுடன் முருகன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தான் என்பதையும் திருமுருகாற்றுப்படையில் முருகன் பெருவிறல் மள்ளர் என்று அழைக்கப்படுவதும் இங்கு கருதத்தக்கது. இவ்வகையில்,

“அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தகைத்தாகும் மள்ளர் என்னும் பெயர்”

– திவாகர நிகண்டு

“செருமலை வீரரும் திண்ணியோரும்
மருதநில மக்களும் மள்ளர் என்ப”

– பிங்கல நிகண்டு

என்பதற்கேற்ப உழவராம் மள்ளர்களுக்கும் மள்ளச் சிறானாய் மாறி வயலில் வேலை செய்து பழனம் சூழ் மலையில் உறைந்துள்ள முருகனுக்கும் பல்வேறு உறவுகள் நிலத்தின் அடிப்படையில் காணப்படுவதை இங்கே அறிய முடியும்.

## *வேந்தனும் முருகனும்*

முருகனுக்கும் மள்ளர் குலத்திற்கும் உள்ள உறவு குறித்துப் பேராசிரியர் சிற்பி பாலசுப்பிரமணியம் வருமாறு குறிப்பிடுவார்.

“மருத நிலக் கடவுளான தேவேந்திரனின் மகள் தெய்வயானையை முருகன் மணந்து கொண்டதால் அவ்வேந்தனின் வழிவந்த தேவேந்திரகுல மக்களுக்கும் முருகனுக்கு உள்ள உறவு பெண் கொடுத்த செல்லமான மருமகன் உறவாகும்”[6] என்பார்.

இவர் கருத்துப்படி மருதநிலத் தலைவனும் குறிஞ்சி நிலத் தலைவனும் மாமன் மருமகன் உறவாவதோடு மேலும் மள்ளர் குலத்திற்கு முருகன் உரிமையுடைய தெய்வமாகி விடுகின்றான் என்பதையே காட்டுகின்றது. மருதநிலக் கடவுளான வேந்தன் ஆரியக் கலப்பால் தேவேந்திரர் ஆன

பின்னர் அந்நில வேந்தர் குல மக்கள் தேவேந்திர குல வேளாளர் எனப்பட்டனர். இப்பெயர் மாற்றம் பழனி செப்புப்பட்டயத்திலும் இடம் பெறுகின்றது. மேலும் முருகனுக்கு இரு மனைவிகள் என்பதைப் பள்ளு நூலின் தலைவன் அதாவது மருதநிலத் தலைவனுக்கு இரு மனைவிகள் என்பதையும் இங்கே போகிற போக்கில் பண்பாட்டு அடிப்படையில் தொடர்புபடுத்திப் பார்க்க முடியும். மருத நிலத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்ட பின்னரே முருகன் வள்ளியை மணந்தார் என்பதையும் இங்கே நினையலாம்.

## *பழனிப் பட்டயம் தரும் செய்திகள்*

1 இப்பட்டயத்தின்படி பழனிமலை மேல் மகாபூசை கொண்டருளிய பாலசுப்பிரமணிய சுவாமியார் திருவலப் புறமாக எழுந்தருளி வருகிற தெற்கு வீதியில் தென்மேல் மூலையில் தெய்வேந்திர சாதி அறமட ஆலயமும், தெய்வேந்திர விநாயகனும் உண்டு தருமம் செய்து வந்ததைச் சாசனம் உறுதி கூறுகின்றது. மேலும் இம்மடத்தினர் தான் மலை மேலுள்ள முருகன் கோயிலை நிர்வகித்து வந்தனர் என்ற செய்தியையும் தருகிறது.

2 மள்ளர் எனும் தேவேந்திர குல முதல்வனே நெல்லைக் கண்டு பிடித்து பயிர் செய்தான் என்ற செய்தியைத் தருகின்றது.

3 தமிழகத்தில் பரந்து வாழும் தேவேந்திர குல வேளாளர் அனைவருக்குமே இக்கோவிலில் நிர்வாக உரிமை, வழிபாட்டுரிமை இருந்தது என்பதை உறுதிப்படுத்துகின்றது.

4 மள்ளர் குலத்தவருக்கு வழங்கும் தேவேந்திர குல வேளாளர், காலாடி, பண்ணாடி, பலகனார், மூப்பனார், முதலிய உட்பிரிவுகளைக் கூறுகின்றது.

5 இதெல்லாத்தையும் விட நெல்லின் வகை, மாட்டு வகை, நெல் நடவு செய்தல் என்றவாறு பழன வாழ்க்கையைக் குறிப்பிடும் வேளாண் சமூகப் பண்பாட்டு ஆவணமாகத் திகழ்ந்து பழன மக்களையும் பழனி முருகனையும் இணைக்கும் அரிய ஆவணமாகவும் திகழ்கின்றது.

## *நாட்டுப்புற முருக வழிபாட்டு மரபுகள்*

தமிழகம் முழுமையையும் இம்மக்கள் வழிபடும் நாட்டுப் புறத்தெய்வக் கோயில்களில் முருகனுக்கென்று தனியான ஒரு கோயில் இருப்பதைக் காண முடியும். தனியாகக் கோயில் இல்லாத இடங்களில் வேல் மட்டுமாவது முருகனை அடையாளப்படுத்த வைக்கப்

பட்டிருக்கும். இதே போன்று சிவன், விநாயகன், பார்வதிக் கென்றும் கோயில்கள் இருப்பதைக் காண முடியும். இம்மக்கள் வழிபடும் எல்லாக் குல தெய்வக் கோயில்களிலுமே சிவனை கல்லில், லிங்கம் என்றவாறு பிரதிஷ்டை செய்து வழிபட்டு வருகின்றனர். புகழ்பெற்ற திருச்செந்தூர் முருகன் கோயிலில் இம்மக்களுக்கெனத் தனியான ஒன்பது மடங்களும் வழிபாட்டு உரிமையும் இருப்பதைக் காணமுடியும். பல சிவ ஆலயங்களில் இம்மக்களுக்கு முதல் மரியாதையும் வழிபாட்டு உரிமையும் கொடுக்கப்பட்டிருப்பதை இங்கு நினையலாம். அவினாசியிலுள்ள அவினாசியப்பர் கோவிலின் விழா இம்மக்களின் தெரு முனையிலிருந்துதான் தொடங்குகின்றது. பேரூர்க் கோயிலில் இம்மக்களுக்குப் பட்டம் கட்டிய பின்னரே வழிபாடு தொடங்குகின்றது. இப்படியே தமிழகம் முழுவதும் சைவத் திருக் கோயில்களில் இம்மக்களுக்குச் சிறப்பான வழிபாட்டு உரிமைகள் இருப்பதைக் காண முடியும்.

இம்மக்களின் மக்கட் பெயர்களில் முதன்மையாக விளங்குவது சைவக் கடவுளர்களின் பெயர்களே. அதிலும் முருகனின் பெயர்களே பெரிதும் காணப்படுவதாக இம்மக்களின் மக்கட் பெயர்கள் குறித்து ஆய்வு செய்த பேராசிரியர் டாக்டர் முத்தையா குறிப்பிடுகின்றார். அவர் குறிப்பிடும் பெயர்களில் சில வருமாறு.

பழனிக் குடும்பன், பழனிக்காலாடி, பழனிவேல், பழனிமுத்து, பழனிச்சாமி, பழனியப்பன், பழனி முருகன், முருகையா, முருகாயி, குமராயி, குமரம்மாள், சரவணன், வேல்முருகன், வேலன், வேலவன், கந்தன், கந்தவேல், முத்துவேல், வேல்ச்சாமி என்றவாறு முருகன் பெயர்களும். இதேபோன்று சிவன், சக்தி, வள்ளி, தெய்வானை, விநாயகர் பெயரையொட்டி மிகுதியான பெயர்கள் இம்மக்களிடம் காணப் படுவதாகக் குறிப்பிடுவார்.

இவ்வாறு முருகப் பெருமானின் பெயரிடுகையில் பழனி கோயிலுக்கு வந்து மொட்டையடித்து, பொங்கலிட்டு பெயரிடுவதையும் மரபாகக் கொண்டுள்ளதையும் காண முடிகின்றது. பெரும்பாலான மள்ளர்கள் முருகனைத் தங்களின் குல தெய்வமென்றும் இஷ்ட தெய்வமென்றும் கொண்டாடிவருவதையும் இங்கு குறிப்பிட்டாகவேண்டும்.

தைப்பூசம் போன்ற திருவிழாக்களில் கலந்து கொள்ள மாலையிட்டு, காவடியெடுத்துப் பாதை யாத்திரையாக வந்து வழிபாடு செய்வதையும் காணமுடிகின்றது. இம்மக்கள் பாடும் தாலாட்டுப் பாடல்கள், கும்மிப்

பாடல்களில் முருகனின் பெருமைகளும், இரண்டு பெண்டாட்டியால் முருகன் படும் அன்புத் தொல்லைகளும் பாடப்படுவதைக் கிராமந் தோறும் கேட்க முடியும்.

"ஓடுரா வள்ளி ஒளிஞ்சா வலந்தேடி
தேடினார் வேலவரு திருக்கண்ணும் பஞ்சடைக்க
வள்ளிக்கும் தெய்வானைக்கும் மயிறு புடிச் சண்டைகளாம்
மயிரை விடு தெய்வானை வள்ளி மேல் குத்தமில்லை.
பச்ச நிறம் வள்ளி பவள நிறம் தெய்வானை
சோதி நிறம் பழனிமலை வேலவரு
சொன்ன வரம் தருவாராம்"[9]

என்றெல்லாம் தங்களின் வேண்டுதலுக்கான கும்மிப் பாடலாக இம்மக்கள் முருகனை இலக்கிய மாக்கியுள்ளதைக் காண முடியும். மள்ளர் குல ஆண்கள் முருகன் வர்ணிப்பு என்று முருகனின் பெருமையை பல மணி நேரம் பாடுவதையும் கிராமங்களில் கேட்க முடியும். இவ்வாறாக முருகனைத் தங்களது முழுமுதற் கடவுளாக ஏற்று பல்வேறு வகையில் போற்றி வழிபாடாற்றி வருபவர்கள் இம்மக்கள் என்றால் மிகையாகாது.

## *தொகுப்புரை*

தமிழரின் தொன்மைக் கடவுளான முருகனுக்கும் தமிழ் மூத்த குடிமக்களான மள்ளர்களுக்கும் உள்ள சமூகப் பண்பாட்டு வழிபாட்டுரிமையை இக்கட்டுரை கோடிட்டுக் காட்டியுள்ளது. பழன மக்களான இம்மக்களுக்கும் பழனத்தில் குடி கொண்டிருக்கும் பழனி முருகனிடம் மிகச் சிறப்பான வழிபாட்டுரிமை இருப்பதைக் இக்கட்டுரை சுட்டிக் காட்டுகின்றது. மேலும் நாட்டுபுற வழிபாட்டு மரபில் கூட இம்மக்களிடம் முருக வழிபாடே மிகுந்து காணப்படுவதை இக்கட்டுரை எடுத்தியம்பியுள்ளது.

## *குறிப்புகள்*

1 டாக்டர். ராஜசேகரன், "திருக்கோயில்களில் தொழில் சமுதாய உறவுகள்", பக்கம். 67
2 டாக்டர். பெ. சுப்பிரமணியன், "திருவிழாக்களில் இடம் பெறும் நாட்டுப் புற ஆட்டங்கள்", பக்கம் 13.
3 தேவஆசிர்வாதம், "மூவேந்தர் யார்?" பக்கம் 117.
4 கே. ஆர். அனுமந்தன், 'தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப்பட்டதே நாயக்கர் ஆட்சியின் பாளையப்பட்டு முறை', பாட்டாளி முழக்கம், ஜீன், 1996.

5 தமிழ் லெக்சிகன், சென்னைப் பல்கலைக்கழகம், பகுதி 6, பக்கம் 38-42.
6 டாக்டர் குருசாமி சித்தர் டாக்டர் தே. ஞானசேகரன், தமிழர் பண்பாட்டு வரலாறு சிற்பியின் தேவேந்திர குலவேளாளர் ஆய்வுக்கான சில குறிப்புகள், கட்டுரை பக்கம் 64.
7 மேலது பக்கம் 275 முதல் 293
8 டாக்டர். மு. முத்தையா, "மதுரை மாவட்டம் பள்ளர் மக்கட் பெயர்கள்", பக்கம் 76-77.
9 *மாரியம்மாள் வயது 90, தேவேந்திரகுல வேளாளர், சாந்திபுரம்,* வத்தலக்குண்டு வட்டம், திண்டுக்கல் மாவட்டம்.

ooo

(1998ல், பழனி பழனியாண்டவர் பண்பாடு மற்றும் கலைக்கல்லூரியில் நடைபெற்ற "தமிழ் மரபும் முருக வழிபாடும்" எனும் கருத்தரங்கில் வாசித்தளிக்கப்பட்ட கட்டுரை.)

# 7. தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடும் நிலாப் பிள்ளை வழிபாடும்

சங்ககாலம் தொடங்கி இன்றுவரை நெல் வேளாண்மையை உயிர் மூச்சாகக் கொண்டு வாழும் நெல்லின் மக்களாகிய மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்கள் அன்று முதல் இன்றுவரை மருதநிலக் கடவுளான வேந்தனை (இந்திரன், தேவேந்திரன்) தமது குல முதல்வனாகவும் மழையின் கடவுளாகவும் கருதி வழிபட்டு வருகின்றனர். இக்கட்டுரை ஈரோடு மாவட்டத்தில் இம்மக்களால் வழிபடப்படும் தேவேந்திரப் பிள்ளையார் வழிபாட்டையும் நிலாப் பிள்ளை வழிபாட்டையும் அறிமுகம் செய்கின்றது.

## *வேந்தன் விழா (இந்திர விழா)*

"உழவுத் தொழிலிற்கு இன்றியமையாத மழை விண்ணிலிருந்தே பெய்வதால், விண்ணுலக வேந்தன் மழைக்கு அதிகாரியானான். நல்வினை செய்தவர்களின் உயிர்கள் இறந்த பின் மேலுலகத்திற்குச் செல்லுமென்றும், உலகில் (மருதநிலத்தில்) அரசனாயிருந்தவன் மறுமையில் மேலுலகத்திலும் அரசனாவான் என்றும் மருதநில மாந்தர் கருதி முதன் முதலில் இறந்த அரசனையே வேந்தன் என்று பெயரிட்டு வணங்கினார்கள். மழை மேலிருந்து பெய்வதால் மேலுலக வேந்தனாகிய தங்கள் தெய்வத்தினிடமிருந்தே வருவதாகக் கருதி, மழை வளத்திற்காகவும் அவனை வழிபட்டார்கள்" [1]. என்று தேவநேயப் பாவாணர் கூறுவார். இவரே "வேந்தன் விழா ஆண்டுதோறும் மூவேந்தர் நாட்டில் கொண்டாடப்பட்டது. அதை மூவேந்தரே நடத்தினர். சிவ மதமும் திருமால் மதமும் தோன்றிய பின், வேந்தன் விழா படிப்படியாகக் கைவிடப்பட்டது. இறுதியாக அதை நடத்தி வந்தவர் புகார்ச் சோழரே. ஆரியர் (பிராமணர்) தென்னாடு வந்தபின், வேந்தன் விழா வடநாட்டிற் போன்றே இந்திர விழா எனப்பட்டது" [2].

இந்திர விழா என்பது பழங்காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் எடுக்கப்பெற்ற ஒரு விழாவாகும். நாடு நோயின்றி வளமுற இந்திரனுக்கு விழா நிகழ்த்துமாறு அகத்திய முனிவர் ஆணையிட, அதன்படி

தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் என்னும் சோழ மன்னன் இந்திரனை வேண்டி, அவன் இசைவு பெற்று ஆண்டுதோறும் தன் தலைநகரமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் இவ்விழாவினை நடத்தி வந்தான். பின்னர் வந்த சோழ மன்னர்களும் தொடர்ந்து நடத்தி வந்தனர். நெடுமுடிக்கிள்ளி என்னும் சோழன் இவ்விழாவை நடத்தாததால் காவிரிப்பூம்பட்டினம் கடலால் கொள்ளப்பட்டது என்பர். இந்திர விழாவைப் பற்றிய செய்திகள் சிலப்பதிகாரத்தில் இந்திர விழாவூரெடுத்த காதையிலும் மணிமேகலையில் விழாவறை காதையிலும் இடம் பெற்றுள்ளன. இந்திர விழா நடைபெற்றதனை வால்மீகி, காளிதாசர் முதலியோர் தத்தம் நூல்களில் குறித்துள்ளனர். மருதநிலத் தெய்வமாகிய இந்திரனை மக்கள் விழவு செய்து அழைக்க, அவன் வெளிப்படுவான் என்று நச்சினார்க்கினியர் தம் தொல்காப்பிய உரையில் சுட்டியுள்ளார்[3].

சித்திரைத் திங்களில் சித்திரை விண்மீனொடு கூடிய முழுநிலவு நாளில் (சித்திரா பௌர்ணமி) இந்திர விழாக் கொண்டாடப்படும்[4]. சிலப்பதிகாரத்தில் இந்திரன் கோயில் "இந்திரக் கோட்டம்" என்று குறிக்கப்படும். அதே போன்று நிலவு வழிபாட்டை "நிலாக் கோட்டம்" (சிலம்பு, இந்திர விழாவூரெடுத்தகாதை பாடல்வரி 13) என்றும் குறிப்பிடும். இந்த இரண்டு வழிபாட்டையும் குறிக்கும் வழிபாடே தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடும் நிலாப் பிள்ளை வழிபாடும் ஆகும் எனலாம். இதனை வருமாறு காணலாம்.

## *தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு*

'வேந்தன் மேய தீம்புனல்' உலகம் என்று தொல்காப்பியம் குறிப்பிடும் வேந்தனே இன்று தேவேந்திரன் என்று மருத நில மக்களாகிய மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர்களால் வழிபடப்படுகின்றான். சிலப்பதிகாரம் குறிப்பிடும் இந்திரக்கோட்ட வழிபாட்டு முறையை அதே வடிவில் இன்று இம்மக்களிடம் காணமுடியாவிட்டாலும் மழைக்கும், வயலுக்கும் அதிபதியான வேந்தனை மல்லாண்டை (வளமைத் தெய்வம்) மள்ளர்சாமி (மள்ளர்கள் வழிபடும் தெய்வம்) தேவேந்திரப் பிள்ளையார், இந்திரவிழா எனும் நாற்று நடவுத் திருவிழா என்றவாறு மழையுடனும் வேளாண்மை வளமையுடனும் தொடர்புபடுத்தி இம்மக்கள் இன்றும் வழிபட்டு வருவதைக் காணமுடியும்.

'இந்திரனின் மனைவி இந்திராணி; ஊர்தி ஐராவதம் என்னும் வெள்ளை யானையாகும். இந்து என்ற (Indu) சொல்லில் இருந்தே இந்திரன் என்ற பெயர் பிறந்தது. இந்து என்றால் மழையைத் தருபவன்

என்பது பொருள். வறட்சியைப் போக்கி உயிர் இனங்களுக்கு மழையைத் தருவித்துச் செழிப்பை உண்டாக்குபவன் என்று இந்துக்கள் இந்திரனைக் கருதுகின்றனர்[5]. இதன்படி வேந்தன் வழிபாடு மறைந்து இந்திர வழிபாடு என்று சிறப்புற்று பின்னர் அதுவும் மறைந்து போயின. அதன் பின்பு தோன்றிய விநாயகர் அதாவது பிள்ளையார் வழிபாடு இந்தியாவில் பல்வேறு விதத்தில் வளர்ச்சி பெற்றது. மழை கொடுக்கும் கடவுளாகக் கருதப்பட்ட இந்திரன் இருந்த இடத்தை பின்னாளில் தோன்றிய பிள்ளையார் வழிபாடு கைப்பற்றியது. ஆற்றோரங்களிலும் குளத்துக் கரையோரங்களிலும் பிள்ளையார் இடம் பெற்றார். மழை வேண்டி பிள்ளையாருக்கு மழைக்கஞ்சி காய்ச்சி ஊற்றும் வழக்கமும் தோன்றியது. மழை இல்லாத காலங்களில் வறண்டு கிடக்கும் குளத்திற்குள் பிள்ளையார் சிலையை தூக்கிப் போட்டு பின்பு குளம் நிரம்பியதும் எடுத்துக் கொள்ளும் வழக்கமும் இந்துக்களிடம் ஏற்பட்டது. இவ்வாறான செல்வாக்கு பிள்ளையாருக்கு வந்ததும் அதனை மழை கொடுக்கும் தேவேந்திரனுடன் சேர்த்து தேவேந்திரப் பிள்ளையார் என்று வைத்து வழிபடுகின்றனர். ஆனால் இங்கு வழிபடப்படும் தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு மருதநில மக்கள் வழிபடும் வேந்தன் (இந்திரன்) வழிபாடே ஆகும். இத்தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடுகள் ஒரு சில பள்ளு நூல்களிலும் குறிக்கப்படுகின்றன.

மழை கொடுக்கும் தெய்வம் என்பதோடு மட்டுமல்லாமல் பிள்ளையார் அதாவது விநாயகர் தேவேந்திரனின் வாகனமாகிய ஐராவதம் எனும் யானை வடிவ உருவமுடையவனாகவும் இருப்பதால் மிக எளிதாக தேவேந்திரன் வழிபாட்டுடன் பிள்ளையார் வழிபாடு இணைந்திருக்க வாய்ப்புண்டு. இன்றும் கோயமுத்தூர் பேரூர் பட்டீஸ்வர மள்ளர் கோயிலில் நடைபெறும் இந்திர விழாவில் தேவேந்திரனின் வாகனமாகிய யானை தவறாது ஊர்வலத்தில் கலந்து கொள்வதைக் காணமுடிகிறது. இதல்லாமல் இம்மக்கள் வயல்களில் வழிபாடாற்றும் போது கிழக்குத் திசையிலிருந்தே வழிபாடு செய்கின்றனர். "கிழக்குத் திசைக்கு காவலன் மருதநிலக் கடவுளான இந்திரன்"[6] என்பதை இங்கு நினையலாம்.

## *தேவேந்திரப் பிள்ளையார் வழிபாட்டு முறைகள்*

நெல் நாற்றை நடும் போது மாட்டுச் சாணியில் பிள்ளையார் செய்து அதில் அருகம்புல்லைச் சொருகி வைத்து வழிபடுகின்றனர். இது ஒரு வகை வளமை வழிபாடாகும். இத்தெய்வத்தைத் தேவேந்திரப்

பிள்ளையார் என்றே இம்மக்கள் அழைக்கின்றனர். இத்தெய்வத்திற்கு வயலுக்குள்ளேயே இலை, தழைகளாலும், பசுங்குச்சிகளாலும் கோயில் அமைக்கின்றனர். இதே போன்று மள்ளர் சாமி எனும் பெயரில் பாரியூர் அம்மனுடன் தொடர்புபடுத்தப்பட்ட மள்ளர் கோயிலில் வாழை இலை, மற்றும் தென்னை ஓலை, பசிய குச்சிகளால் பந்தலிட்டு வழிபடுவதைக் காணமுடிந்தது. மேலும் இம்மக்கள் வயலில் ஒரு கல்லை எடுத்து வைத்து அதற்கு மல்லாண்டை எனும் பெயர் சூட்டி இலை, தழைகளால் பந்தலிட்டு மல்லாண்டைக்கு கோயில் அமைத்து வழிபடுவதையும் காணமுடிகின்றது. இவ்வகையில் வழிபடப்படும் தேவேந்திரப் பிள்ளையார், மள்ளர்சாமி, மல்லாண்டை ஆகியன வயலைக் காக்கும் வேந்தனின் நினைவாக வழிபடப்படும் வள வழிபாடே ஆகும். இவ்வழிபாட்டின் போது பாடப்படும் பாடலும் இதனை உறுதி செய்யும்.

"பிள்ளையார் பிள்ளையார்
தேவேந்திரப் பிள்ளையார்
ஓடு போட்டு மேஞ்சாலும்
ஒழுகுதும்பார் பிள்ளையார்
வாழைப் பூக் கொண்டு வந்து
வடபுறமா மேயலாம்
தென்னம் பூக் கொண்டு வந்து
தென்புறமா மேயலாம்"

என்றவாறும்[7]

"நாலு மாட்டுச் சாணியெடுத்து
நாலு சதுரம் வடித்து
நடுவே ஒரு பிள்ளையாரை நாயகமாய் வைத்து"

என்றும்

ஒரு முத்தின தேங்காய் உடைத்து
முன்னால் வைத்து
சீப்போட வாழைப்பழம் எடுத்து
முன்னால் வைத்து

என்றும்

"ஒரு சோட்டுப் பெண்களெல்லாம்
ஒத்த் கும்மி யடித்து"

என்றவாறும் பாடும் பாடல் வரிகள் பிள்ளையாருக்கு உருவம் சமைத்து இலை தழைகளால் பந்தல் போட்டு பெண்கள் கும்மியடித்து வழிபடுவதனைக் காட்டும்.

"ஒரு மொழசாங் கணபதியா ஒன்னாலாயிரம் - சரவிளக்காம்
சரவிளக்கத் தீண்டிவிட்டு சரணம் எங்கும் - பொழுதுமுழுகும்
பொழுதுமுழுகுங் கங்கையிலே பெண்களெல்லாம் - நீராடி
நீராடி நீர்குளிச்சு நீலோ வர்ணப் பட்டுடுத்தி
பட்டுடுத்தி பவுனுடுத்தி பருஞ்சி கப்பல் தேர்ப்பூட்டி
தேருக்குள்ள பூதாம தேர்முழி பொங்கல் வைக்காம
பொட்டுவெச்சு பூ முடிஞ்சு போறைறயே பிள்ளையாரே"[8]

இப்பாடல் பெண்கள் ஆற்றில் நீராடிவிட்டு பட்டுச்சேலை அணிந்து தேவேந்திரப் பிள்ளையாரை மழைவேண்டிக் கும்மியடித்துப் பாடுவதாகத் தெரிவிக்கின்றது. கும்மி முடிவில் பிள்ளையார் ஆற்று வெள்ளத்தில் போவதாக இப்பெண்கள் கற்பனை செய்கின்றனர். "கப்பல் தேர்ப்பூட்டி" என்ற வரியை நோக்க கடலில் நீரை உழுவது போன்று செல்வது கப்பல் ஆகும்.

அதே போன்று வயலில் நீர் நிறைய வேண்டும் எனும் உள்ளக் கிடக்கையை இம்மருதநில உழத்தியர்கள் வெளிப்படுத்துகின்றனர். இவ்வளமை வழிபாடு மழையின் மக்களாகிய தேவேந்திரர்களிடம் மட்டுமே இருப்பது மருதநில வேந்தன் வழிபாடே என்பதை உறுதிப்படுத்தும்.

## *நிலாப் பிள்ளை வழிபாடு*

சிலப்பதிகாரத்தில் 'இந்திரக் கோட்டம்' என்று இந்திரன் கோயில் குறிக்கப்படுவதைக் காண்கின்றோம். இன்றும் மதுரை மாவட்டத்தில் இம்மக்கள் வழிபடும் தெய்வங்களுக்குக் கிரீடத்தில் பிறை காணப்படுகிறது. பிறந்த குழந்தையைப் பௌர்ணமி அன்று வீதிக்குக் கொண்டு வருகிறார்கள். இரவில் நிலவு வரும் பொழுது கரங்குவித்து வணங்கி வரவேற்கும் பண்பும் தேவேந்திரர்களிடம் காணப்படுகின்றது. இவ்வழக்கங்கள் பிறை வழிபாட்டின் அடிப்படைகளாக அமைந்துள்ளன"[9] என்று வீ. ஐயனார் குறிப்பிடுவதிலிருந்தும் கொங்கு நாட்டில் இம்மக்களிடையே காணப்படும் 'நிலா' வழிபாட்டிற்கும் இம்மக்களுக்கும் நெருங்கிய தொடர்பிருப்பதை அறியலாம். இதனை தேவநேயப்பாவாணர் வருமாறு குறிப்பிடுவார்.

"சிற்றொளி வீசுதல் தவிர வேறொரு தன்மையுஞ் செய்யாவிடினும், வேனிற்கால வெப்பந்தாங்க முடியாது வருந்திய மாந்தர், தண்ணொளி வீசும் திங்களையும் போற்றினார். 'பிறை தொழுதென்றல்' என்னும் அகப்பொருட்டுறை, திங்கள் வணக்கம் தொன்று தொட்டு நிகழ்வது

வந்தமையைக் காட்டும். காவிரிப் பூம்பட்டினத்தில் திங்கட்கும் கோயிலிருந்தது. இளங்கோவடிகளும், "திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்" என்றும் மங்கல வாழ்த்துப் பாடினார்.

பண்டைக் தமிழக முப்புலங்களுள், தென்புலமென்னும் பாண்டிநாடு வெப்பமிக்கிருந்ததனால், பாண்டியன் திங்களைத் தன் குல முதலாகவும், குணபுலமென்னும் சோழ நாடு பனிமலை வரை தொடர்ந்து வெப்பங் குன்றியிருந்ததனால், சோழன் கீழ்த்திசையில் எழும் கதிரவனைத் தன் குலமுதலாகவும்; குடபுலமென்னும் சேரநாடு நாள்தோறும் பெருமழை பொழியும் குடமலைத் தொடரைக் கொண்டிருந்ததனால், சேரன் தீயைத்தன் குல முதலாகவும் கொண்டிருந்தனர். மூவேந்தர் குடிக்கிளைகளே, வடநாவலம் ஆரிய நாடாக மாறிய பின், "சந்திரவம்சம், சூரியவம்சம், அக்கினி வம்சம் எனப் பெற்றன"[10] என்பார். இக்கருத்திலிருந்து மூவேந்தர் மரபுடன் தொடர்புடைய வேந்தன் வழிபாட்டுடன் தொடர்புடைய வழிபாடே திங்கள் வழிபாடு அதாவது நிலா வழிபாடு எனலாம். இதனை மதுரை மாவட்ட மக்கள் வழிபடும் தெய்வங்களின் கீரிடங்களில் பிறை காணப்படுவதாகக் குறிப்பிடும் வீ. ஐயனார் கருத்தும் உறுதிப்படுத்தும்.

## *திங்கள் வழிபாடு வேளாண் வள வழிபாடே*

கொங்குநாட்டில் ஈரோடு மாவட்டத்தில் இவ்வழிபாடு நடைபெறு கின்றது. இந்நிலா வழிபாடு அறுவடை முடிந்ததும் தேவேந்திர குல பெண்களால் கொண்டாடப்படுகின்றது. ஒரு சிறுமியை நிலாப் பெண்ணாக ஒப்பனை செய்து பச்சைப் பந்தலின் கீழ் அமர்த்துகின்றனர். வளர்பிறை நாளில் தொடங்கி நிலாப் பிறைக்கு கும்மியடித்து வழிபாடு செய்கின்றனர். பௌர்ணமி அன்று சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. வாத்தியக் கருவிகள், கொட்டு மேளங்கள் முழங்க தாசர் சங்கு கேசண்டி இசைக்க இவ்வழிபாடு நடைபெறுகின்றது. இவ்வழிபாட்டில் தேவேந்திர குலப்பெண்கள் முளைப்பாலிகைகளை ஊர்வலமாக எடுத்து வருகின்றனர். விழா முடிவில் முளைப்பாலிகைகள் ஆற்றில் விடப்படுகின்றன. நிலாப்பெண்ணுக்கு புத்தாடை கொடுத்துச் சிறப்புச் செய்கின்றனர். மேலும் குயவர், கொல்லர் போன்றோருக்கும் புத்தாடை கொடுத்து மரியாதை செய்கின்றனர். இவ்வாறு மரியாதை செய்வது பல்வேறு வகைகளில் இவர்கள் வேளாண்மைக்கு உதவுவதால் ஆகும். இவ்விழாவில் பாடப்படும் ஒரு கும்மிப் பாடல் வருமாறு.

"புள்ளாயா புள்ளாயா தேவேந்திரப் புள்ளாயா
புள்ளையார் பொண்டாட்டி எப்பேரு பட்டவ
மாடு நெறஞ்சவ வயிரமணி பூத்தவ
கழுத்து நெறஞ்சவ தொளசிமணி போட்டவ"

என்றும்

"ஒரு கிண்ணம் சந்தனமா ஒன்னரைக்கிண்ணி குங்குமமா
அழகான பிள்ளையாருக்கு அள்ளி அள்ளி வீசிடுவோம்"

தேவேந்திரப் பிள்ளையாரையே நிலாப் பிள்ளை வழிபாட்டுப் பாடலிலும் பாடுகின்றனர். இப்பாடலின் கருத்தும் வழிபாட்டில் இடம் பெறும் சடங்குகளையும் நோக்க இவ்வழிபாடும் வேளாண் வளமையுடன் தொடர்புடைய சடங்காகவே காணப்படுகின்றது". மூத்த குடிமக்கள் ஞாயிறு போலத் திங்களுக்கும் ஆற்றல் இருப்பதாக நம்பினர். வேளாண்மைச் சமூகத்தில் திங்கள் வழிக் காலக்கணிப்பு நடைமுறைப் படுத்தப்பட்டது. வானத்தையும் நிலத்தையும் தம்பதிக் கடவுளராகக் கருதியது போலவே ஞாயிற்றையும் திங்களையும் தம்பதிக் கடவுளராக ஏற்றனர். இதனால் நிலத்திற்குரிய பண்புகளைத் திங்களுக்கும் ஏற்றினர். தொன்மக் கதைககளில் ஞாயிறும் திங்களும் தம்பதியர்களாக இடம் பெறுகின்றனர்[11].

திங்களைப் பெண்ணாக உருவகிப்பவர்கள் பிறை வளர்வதையும் தேய்வதையும் கருவுறுதலாகவும் கருவுயிர்த்தலாகவும் கொள்கின்றனர். மேலும் பிறப்பு, பருவமடைதல், இறத்தல் பேன்றவையாகவும் பிறையின் வளர்ச்சியைக் கருதுகின்றனர்[12].

சந்திரனுடைய திதிகள், கிரகணங்கள், விஷிக்கள், அயனங்கள் போன்றவை பருவகால மாறுதல்களுடன் சேர்ந்தவை. அந்தக் காலங்களில் இனத்தவர் அனைவரையும் ஒருங்குகூடச் செய்யும் ஆவணி அவிட்டம், தைப்பூசம் போன்ற விழாக்கள் நடை பெறுகின்றன. தைப்பூச நாள் பெரும்பாலும் நிறைமதி நாளாக இருக்கும். அந்நாளில் புண்ணிய நதியில் நீராடினால் மிகுந்த புண்ணியம் உண்டாகும் என்று நம்புகின்றனர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவிடை மருதூரில் தைப்பூச விழா மிகச் சிறப்பாக நடைபெறும். மேலும் இந்நாளை "தைப்பொங்கல்" என்று கூறி உழவர்கள் கொண்டாடி வருவதைக் காணலாம்[13]. இவ்வகையில் 'நிலா' பல்வேறு வகைகளில் வேளாண் வளமையுடனும் மனித வளனுடனும் தொடர்புபடுத்தப்படுவதைக் காண்கின்றோம். இந்நிலா வழிபாட்டில் நிலாப்பெண்ணை மணமுடித்துக் கொடுப்பது

மாதிரியான சடங்கு நிலத்தின் வளத்தைப் பெண்ணின் வளத்தோடு தொடர்புபடுத்திக் காண்பதாக அமைகின்றது. மேலும் தேவேந்திரப் பிள்ளையாருக்கு தேவேந்திர நிலாப்பெண்ணை (வயலை) மணமுடித்துக் கொடுப்பதாகவும் அமைகின்றது. இங்கு பெண் அதாவது நிலாப்பெண்ணை வயல் தேவேந்திரன் என்பதாகவும் மழை என்பதாகவும் பொருள் கொண்டு மழையின் அதிபதியாகிய வேந்தனுக்கு வயல் எனும்பெண்ணை மணமுடிப்பதாகவும் கருதலாம். மேலும் பாண்டிய குல மன்னர்களின் குல முதலாக அதாவது குறியீடாகக் கருதப்படுகின்ற 'சந்திர வம்ச' வழிபாட்டின் எச்சமாகவும் இதனைக் கருதலாம்.

இந்த நிலாப் பிள்ளை வழிபாட்டிலும், தேவேந்திர பிள்ளையார் வழிபாட்டிலும், மல்லாண்டை வழிபாட்டிலும் பெரிதும் பெண்களே கலந்து கொண்டு சடங்குகள் நிகழ்த்துகின்றனர். இவ்வாறு பெண்கள் வேளாண்மையோடு அதிகம் தொடர்புபடுத்துவதற்கான காரணங்களை நா. வானமாமலை வருமாறு விளக்குவார். "புராதன விவசாயக் காலத்தில் அவர்கள் புற உலக வாழ்க்கைக்குப் பூமியே முக்கியமானவை. செழிப்புத் தெய்வங்களும் மந்திரச் சடங்குகளும் பூமியின் செழிப்புத்திறனை மிகுதியாகக் கற்பனை செய்யப்பட்டு உருவாக்கப்பட்டன. செழிப்புத்திறன் பெண்களுக்கே உண்டு என்ற நம்பிக்கை தோன்றியது. பெண்கள் தாம் முதலில் வேட்டைத் தொழிலில் இருந்து பூமியில் விதையைச் செடியாக வளர்க்கும் திறனுக்கும் குழந்தை பெறும் தகுதிக்கும் தொடர்பு உண்டு என்று புராதன விவசாயத்தில் ஈடுபட்ட மக்கள் நம்பினர். எனவே விவசாய மந்திரச் சடங்குகளில் பெண்களே பங்கு கொண்டனர்"[(14)] என்று கூறுவதற்கேற்ப மருதநில உழத்தியர்கள் பண்டைக்காலம் தொட்டு பல்வேறு வகையான வேளாண் சடங்குகளையும் மந்திரச் சடங்குகளையும் விடாது செய்வது பின் வேளாண் தொடர்பான பல்வேறு உழத்திப் பாடல்களையும் பாடி வேளாண் வளமைக்கு இன்றும் வளம் சேர்த்து வருவதைக் காண முடிகின்றது.

## குறிப்புகள்

1 தேவநேயப் பாவாணர், ஞா., ஒப்பியன் மொழி நூல், ப. 201
2 மேலது, தமிழர் மதம், ப. 31
3 இந்திர விழா (கட்டுரை, வாழ்வியல் களஞ்சியம், தொகுதி 3, தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம், 1991, ப. 660)

4 மேலது
5 மேலது, ப. 662
6 மேலது, ப. 661
7 அருச்சுனன், ஒ.கே., பெரியார் மாவட்டத்தில் பண்ணைப் பாடல்கள், வெளிப்படாத பிஎச்.டி பட்ட ஆய்வேடு பின்னிணைப்புப் பாடல் எண் : 198.
8 மேலது, பா. எண் : 201.
9 ஐயனார் வீ., பள்ளர் குலச் சடங்குகள், வெளியிடப்படாத எம்ஃஃபில் பட்ட ஆய்வேடு, ப. 142.
10 தேவநேயப் பாவாணர், தமிழர் மதம், ப. 27.
11 ஞானசேகரன், தே., நாட்டார் சமயம் தோற்றமும் வளர்ச்சியும், பக். 29-32.
12 மேலது
13 மேலது
14 வானமாமலை, நா., பழங்கதைகளும் பழமொழிகளும் ப. 93.

OOO

(இக்கட்டுரை மதுரை காமராசர் பல்கலைக்கழகமும் தென்னிந்திய நாட்டுப்புறவியல் கழகமும் இணைந்து நடத்திய நாட்டுப்புறவியல் கருத்தரங்கில் மே 11, 12 - 1999 அன்று படித்தளிக்கப்பட்டது)

# 8. காசியூர் சுங்கத்து அய்யன் எனும் கருப்பராயன் கோயில் வழிபாட்டு மரபுகள்

ஈரோடு மாவட்டம் கோபி வட்டாரம் காசியூரில் வாழும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களின் ஆன்மீகம் மற்றும் வேளாண் பண்பாட்டின் அடையாளமாகக் கருதப்படுவது அருள்மிகு சுங்கத்து அய்யன் எனும் கருப்பராயன் கோயில் ஆகும். இக்கோயில் காசியூர் அருகே மேற்கிலிருந்து கிழக்கே ஓடும் பவானி நதிக்கரையில் அமைந்துள்ளது. மழையின் குறியீடாகவும் நெல் வளமையின் காவலனாகவும், தேவேந்திரர்களைக் காக்கும் கடவுளாகவும் இந்தச் சுங்கத்து அய்யன் விளங்கி வருகின்றார். இக்கோயில் தோன்றிய வரலாறு, இத்தெய்வ வழிபாட்டு முறைகள், பிற சமூகங்களுடன் தேவேந்திரர் சமூகம் கொண்டுள்ள சமூக இணக்கம், தற்போது இவ்வழிபாட்டில் ஏற்பட்டுள்ள பிற சமூக ஆதிக்கம் போன்றவற்றை இக்கட்டுரை வருமாறு விளக்க முற்படுகின்றது.

### *சுங்கத்து அய்யன் பெயர்க் காரணம்*

பவானி நதியின் கரையோரம் அதாவது தடப்பள்ளிக் கரையில் முற்காலத்தில் ஒரு தேவேந்திர இனப் பெரியவர் குடிசை அமைத்து வாழ்ந்து வந்தார். பவானியில் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடிய காலத்தில் மக்கள் கரை கடந்து ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கத்திற்கு செல்ல முடியாமல் தவித்தனர். இதனை நீக்க எண்ணிய இப்பெரியவர் பவானி நதியைக் கடக்க மரத்தால் ஆன பெரிய பாலம் ஒன்றை அமைத்து மக்களுக்கு உதவினார். இந்தப் பாலம் இப்பொழுது இல்லை. இந்தப் பாலத்தைக் கடந்து செல்வோர் தடப்பள்ளிக் கரையில் குடிசை அமைத்து வாழ்ந்த பெரியவருக்கு ஒரு காசு சுங்கம் (வரி) கொடுத்து பயன்படுத்தி வந்தனர். இவ்வாறு சுங்கம் வசூலித்து பாலத்தைப் பரிபாலனம் செய்த பெரியவர் அங்கேயே இறந்து போனார். இறந்த பின்னர் இவரது வம்சா வழியினர் அதாவது காசியூர் தேவேந்திரர்கள் இவரை அதே இடத்தில் புதைத்து சமாதி எழுப்பி சுங்கத்து அய்யன் என்று பெயரிட்டு வழிபட்டு வருகின்றனர் என்று ஒரு கதை சொல்லப்படு கின்றது.

இன்னொரு கதை பரிசல் மூலமாக அக்கரைக்கும் இக்கரைக்கும் மக்களைக் கொண்டு சென்று படகுச் சவாரி செய்து வாழ்ந்த ஒரு வீரரின்

நினைவாக வழிபடடப்படுவதே இக்கோயில் என்கின்றது. இக்கோயில் எழுப்பப்பட்டு சுமார் 200 ஆண்டுகள் இருக்கும் என்று இக்கோயிலில் அமைந்திருக்கும் இலுப்பை மரம் எனும் தல விருட்சத்தால் அறியலாம். மேலும் இதனைத் தங்களுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து காசியூர் தேவேந்திரர்கள் வழிபட்டு வருவதாகச் சொல்கின்றனர். வழிபாடு தொடங்கிய காலத்திலிருந்தே இக்கோயிலின் வழிபாட்டு உரிமைகளும் நிர்வாகமும் இவர்களுடையதாகவே இருந்து வருகின்றன. கோயிலின் கட்டிடங்கள், கோயில் சிலைகள் அமைப்பு என்ற அனைத்தையும் காசியூர் தேவேந்திரர்களே கட்டியுள்ளனர். இவ்வாறு 200-300 ஆண்டுகளாக இவர்களின் கடவுளாக, அறியப்பட்டு வழிபடப்பட்டு வரும் சுங்கத்து அய்யன் குறித்து பல கதைகளையும் அதிசயங்களையும் இத்தெய்வத் தோற்றம் குறித்து இம்மக்கள் சொல்கிறார்கள்.

ஆற்றையும் வயலையும் காக்கும் சுங்கத்து அய்யன் மிக சக்தி வாய்ந்தவன். ஒரு நாள் காசியூர் தேவேந்திரர்களின் வயல்களில் நெல் அடித்துக் குவித்து வைத்திருந்தனர். இதனைத் திருட வடக்குத் திசையிலிருந்து திருடர்கள் வந்தார்கள். நெல்லை மூட்டையாகக் கட்டிக் கொண்டு ஆத்துல இறங்க முயற்சிக்கும் போது அவர்களுக்குக் கண் தெரியாது போய்விடுகின்றது. பின்பு நெல் மூட்டையைக் களத்திலே கொண்டு வந்து போட்டுவிட்டு, அய்யனை வழிபட்ட பின்னர் கண்பார்வை திரும்ப வந்ததாம். இதே போன்று ஒரு நாள் இரவு கோயிலிலுள்ள தல விருட்சமான இலுப்பை மரத்தை யாரோ வெட்ட முயல, வயலெங்கிலும் பெட்ரோ மாக்ஸ் லைட் வெளிச்சம் காட்டி திருடர்களை ஓடஓட விரட்டினாராம் இந்த அய்யன். இப்படிப் பல அதிசயப் பழங்கதைகள் இத்தெய்வம் மீது இம்மக்களால் சொல்லப்படுகின்றன. இதிலிருந்து இத்தெய்வம் பவானி நதிக் கரையில் வாழ்ந்த ஒரு முன்னோரின் நினைவாக வழிபடப்படும் முன்னோர் வழிபாடென்று தெரிய முடியும்.

மேலும் ஆற்றைக் கடந்து செல்பவரிடம் சுங்கம் வசூலிப்பதால் இத்தெய்வம் சுங்கத்து அய்யன் என்று பெயர் பெறுகின்றது. அன்று முதல் இன்று வரை ஆற்றின் இக்கரையிலிருந்து அக்கரைக்குச் செல்வோரும் அக்கரையிலிருந்து இக்கரைக்கு வருவோரும் அக்கால வழக்கப்படி பணம் சுங்கமாகப் போட்டுச் செல்வது வழக்கமாக இருந்து வருகிறது. இந்தச் சுங்கத்து அய்யனோடு கருப்பராயன் வழிபாடு இணைக்கப்பட்டு சுங்கத்து அய்யன் எனும் கருப்பராயன் கோயில் என்றும் இக்கோயில்

பெயர் பெறுகின்றது. சுங்கத்து அய்யனை இம்மக்கள் ஈஸ்வரனின் அம்சமாகக் கருதுகின்றனர். சுங்கத்து அய்யனுடன் இரண்டு பெண் சிலைகளும் கோயிலுக்குள் இருக்கின்றன. இப்பெண் சிலைகள் கன்னிமாரின் அம்சமாகக் கருதப்படுகின்றன. காரணம் வயல் காக்கும் அய்யனுக்கு மழை கொடுக்கும் பெண்கள் (கன்னிமார்) துணையாக அமைக்கப்பட்டிருப்பதாகக் கருதலாம். கருப்பராயன் அருகே முனீஸ்வரன் சாமியும் அதன் அருகே பெரிய குதிரைச் சிலையும், இதனருகே தன்னாசி சிலையும் உள்ளன. இதல்லாமல் விநாயகர் கோயிலும் சாமிகளின் உடமைகளைப் பாதுகாக்கும் படைக்கல அறையும் உள்ளன.

## *கோயில் கட்டிட அமைப்பும் கோயில் நிலமும்*

200, 300 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பட்ட இவ்வழிபாடு சிறிய கட்டிடத்தில் மரங்கள் சூழ்ந்த நதிக்கரை வைப்பில் இயற்கை வளம் சார்ந்த அதாவது நதிக்கரையோர வழிபாடாக அமைந்தது. அதிலும் குறிப்பாகக் கொங்கு நாட்டை திப்பு சுல்தான் ஆண்ட காலத்தில் அதாவது 1768-1799ம் ஆண்டுகளில் கொங்கு நாட்டின் வளம் மிகுந்த பகுதிகளில் முஸ்லீம்கள் குடியேறினர். அந்தக் குடியேற்றக் காலத்தில் காசிம் எனும் முஸ்லீம் தலைமையில் ஓர் ஊர் இருந்திருக்கலாம். அதுவே பின்பு காசிம் ஊர் என்றும் காசியூர் என்றும் மாறியிருக்கலாம் என்று சொல்கின்றனர். காரணம் இக்கோயிலைச் சுற்றியுள்ள பெரும்பாலான நிலங்கள் 1800 வாக்கிலிருந்து முஸ்லீம்களுக்கு உரிமை உடையதாக இருந்து வந்திருக்கின்றது. மேலும் பல நிலங்கள் முற்காலத்தில் தேவேந்திரர் களுக்கு உரிமையுடையதாக இருந்திருக்கின்றது. சுங்கத்து அய்யன் கோயில் அருகிலுள்ள பள்ளபாளையமும் இதனைச் சுற்றியுள்ள 200 ஏக்கருக்கும் மேலான நிலங்களும் அண்மைக் காலம் வரை தேவேந்திரர்களிடமே இருந்திருக்கின்றது. இங்குள்ள பள்ளர் கட்டிய பாலம், பள்ளன் வயல், பள்ளன் காடு என்ற அடையாளங்களெல்லாம் பள்ளபாளையம் முழுமையும் நாயக்கர் ஆட்சிக்கும், திப்புவின் ஆட்சிக்கு முன்பும் தேவேந்திரர்களிடம்இருந்தன என்பதற்கான சான்றாகவே அமைகின்றன. நாயக்கர் ஆட்சியில்தான் பாளையம் எனும் அமைப்பு ஏற்படுகின்றது. இங்கே ஒரு அதிசயம், கோயிலுக்கு அருகில் பள்ளபாளையம் எனும் ஊர் இருக்கின்றது. அங்கே தேவேந்திரர்கள் ஒருவர் கூட இல்லை. நாடார்கள் இங்கே குடியமர்த்தப்பட்டுள்ளனர். மேலும் இக்கோயிலைச் சுற்றியுள்ள வயல்கள் பல தேவேந்திரர்களுக்கு

இன்னமும் சொந்தமாக இருப்பதை அறிய முடிகின்றது. இவர்களில் சிலர் வருமாறு. இவர்கள் காசியூரைச் சேர்ந்தவர்கள்.

| | | |
|---|---|---|
| ரெங்கசாமி | - | 1 ஏக்கர் |
| பழனிச்சாமி | - | 1 ஏக்கர் |
| அய்யாப்பண்ணாடி | - | 3 ஏக்கர் |
| அய்யாவுப் பண்ணாடி | - | 3 ஏக்கர் |
| செந்தில் | - | 2 ஏக்கர் |
| காளியண்ணன் | - | 1 ஏக்கர் |
| கருப்பசாமி | - | 1 ஏக்கர் |
| குப்புசாமி | - | 50 செண்ட் |
| பெரிய பொன்னான் | - | 50 செண்ட் |
| காளிப் பண்ணாடி | - | 60 செண்ட் |
| அவினாசிப் பண்ணாடி | | 1 ஏக்கர் |
| பழனிச்சாமிப் பண்ணாடி | | 50 செண்ட் |

என நீளும் இப்பட்டியல் இக்கோயிலைச் சுற்றியுள்ள வயல்களுக்கு தேவேந்திரர்கள் உரிமையாளர்களாய் இன்றும் இருந்து வருவதைக் காட்டும். கொங்கு நாட்டில் தேவேந்திரர்கள் பண்ணாடி (பண்ணைகளின் தலைவன், பண்ணைகளை ஆட்சி செய்பவன் மருதநிலத் தலைவன்) எனும் பட்டத்துடன் அழைக்கப்படுகின்றனர். தேவேந்திரர் என்பதுதான் இவர்களுக்கு இங்குள்ள சாதிப் பெயர் ஆகும். இந்தப் பின்புலத்தின்படி பார்த்தால் 1800 வாக்கில் திப்புச் சுல்தான் காலத்தில் பள்ளபாளையம் எனும் பகுதியில் தேவேந்திரர்கள் நிலம் முழுமையும் அதாவது இன்றைய கோயிலுள்ள பகுதி முழுமையும் முஸ்லீம்களுக்கு உரிமையாயின. இந்தக் காலத்தில் கோயில் இருந்த 1.5 ஏக்கர் நிலத்திற்கு முஸ்லீகளால் எந்தப் பாதிப்பும் ஏற்படவில்லை. ஆனால் முஸ்லீம்களிடம் குத்தகைக்கு நிலம் பார்த்த கவுண்டர் ஒருவர் 20 ஆண்டுகளுக்கு முன்பு கோயில் அருகிலுள்ள ஒரு நிலத்தை கிரயம் வாங்கியிருக்கின்றார். இதன் பின்பு கோயில் நிலம் 1.5 ஏக்கரை தமது சாகுபடியில் இருப்பதாக கிரயம் செய்ய முயன்றுள்ளார். மேலும் கோயிலையே பீமா (B-Memo) எனும் உரிமையால் தமது என்றும் உரிமை கொண்டாட முயன்றுள்ளார் என்றும் தெரிகின்றது.

கோயில் 1.5 ஏக்கர் பரப்பிலிருந்து 10 செண்ட் இடமாக ஆக்கிரமிப் பாளரால் சுருக்கப்பட்டுள்ளது. இதிலுள்ள சூழ்ச்சியை அறியாதிருந்த இந்தக் கோயிலின் உரிமையாளர்களான தேவேந்திரர்கள் தற்சமயம்

விழிப்படைந்து கோயிலின் நிலத்தை மீட்கப் போராடி வருகின்றனர். ஆனால் கோயிலின் 200 ஆண்டு கால வரலாற்றில் கோயிலின் அனைத்துக் கட்டிடங்களையும் சிலைகளையும் காசியூர் தேவேந்திரர்களே அமைந்துள்ளனர் என்பதற்கு இக்கட்டிடக் கல்வெட்டுக்களே சான்றுகளாக அமைகின்றன.

## *கோயிலின் கருவறை*

கோயிலின் தலைமைத் தெய்வமாக அமையும் சுங்கத்து அய்யன் சிலை அமைந்துள்ள கருவறையும் மேற்கூரையும் காசியூர் ஆறுமுகப் பண்ணாடியால் (தேவேந்திரர்) கட்டப்பட்டுள்ளது.

கருப்பராயன், முனீஸ்வரன், தன்னாசி, குதிரைச் சிலைகளைச் செய்து கொடுத்துள்ள வெங்கட்ராமப் பண்ணாடி சாமி சிலைகளில் பெயர் பொறிக்காது குதிரைச் சிலையில் தனது பெயரைப் பொறித்துள்ளார். இத்தகைய பெருமைமிக்க இவர் காசியூரைச் சேர்ந்தவர் என்பது குறிக்கத்தக்கது.

## *விநாயகர் கோயில்*

சுங்கத்து அய்யனார் கோயில் வளாகத்தில் உள்ள விநாயகர் கோயிலை காசியூர் பண்ணாடிமார்கள் 1996 வாக்கில் கட்டியுள்ளனர்.

விநாயகர் கோயில் சுவரில் காசியூர் பண்ணாடிகள் என்று பொறிக்கப்பட்டுள்ளது. இரும்புக் கதவில் உபயம் கே.எம். ராசேந்திரன் காசியூர் எனப் பொறிக்கப்பட்டுள்ளது. (முன்னின்று செய்தவர்)

## *கோயில் படிக்கட்டுக்கள்*

பவானி ஆற்றிலிருந்து கோயிலுக்கு வரும் 35 படிக்கட்டுகளும் காசியூர் பண்ணாடிமார்களாலேயே 1996 வாக்கில் கட்டப்பட்டுள்ளன.

கோயில் சாமிகளின் ஆடை, அணிகலன்கள், ஆயுதங்கள் (வாள், வேல், சூலாயுதம்) போன்ற படைக்கலங்களை வைப்பதற்காகப் படைக்கல அறை எனும் ஒரு அறை காசியூர் காலனிப் பண்ணாடிமார் களால் 1982-83 ஆண்டுகளில் கட்டிக் கொடுக்கப்பட்டுள்ளது.

## *தல விருட்சம்*

கோயிலின் முன்னால் அமைந்துள்ள தல விருட்சம் இலுப்பை மரமாகும். இது சுமார் 150 ஆண்டுகள் பழமை கொண்டது.

மேற்கண்ட சான்றுகளிலிருந்து 200 ஆண்டுகளுக்கு முன்பு இருந்தே இந்த வழிபாடு ஆற்றங்கரையில் முன்னோர் வழிபாடாக, தேவேந்திரர் ஒருவரின் நினைவைப் போற்றும் வழிபாடாகத் தொடங்கி அது ஈசுவர அம்சமாக்கப்பட்டு பின்பு கருப்பராயன் (கருப்புசாமி) வழிபாட்டுடன் இணைத்து வழிபடப்படும் வழிபாடாக இன்று மாறியிருப்பது தெரியமுடிகிறது.

கோயில் கட்டிட நிர்மாண அமைப்பில் காசியூர் தேவேந்திரர்களே அதாவது பண்ணாடிமார்களே எல்லா நிலையிலும் உபயமாகவும், பணமாகவும் செலவு செய்து கோயிலை உருவாக்கியிருக்கிறார்கள் என்பதை அறியமுடிகிறது. இதிலிருந்து கோயிலுக்கு உரிமையுடையவர் காசியூர் தேவேந்திரர்களே என்பதை உணரலாம்.

## *வழிபாட்டு முறைகளும் மரபுகளும்*

முற்காலத்தில் இக்கோயிலை காசியூர் தேவேந்திரர்கள் மட்டுமே வழிபட்டு வந்தனர். பின்பு இக்கோயில் பிரசித்தி பெற்று அக்கம் பக்கக் கிராமங்களிலுள்ள அனைத்து இன மக்களும் வழிபாடன்று கலந்து கொள்ளும் நிலை ஏற்பட்ட பின்னர் சமூக அடிப்படையில் நாடார்கள் (பள்ளர்பாளையம்), செட்டியார் (செட்டிபாளையம்) ஆகியோர் வழிபாட்டில் கலந்து கொள்ளும் மரபு ஏற்பட்டது. பண்டாரம் பூசாரியாக வழிவழியாக இருந்து வருகின்றார். இப்பூசாரிக்கு காசியூர், தேவேந்திரர்களே மாங்கல்ய வரியில் சம்பளம் தருகின்றனர். இதல்லாமல் கோயில் விழாவன்று வண்ணார் மாத்து விரித்தல், பந்தல் பிடித்தல் வேலைகளையும், நாவிதர், தலையாரி போன்றோர் பெட்ரோமாக்ஸ் லைட் சுமந்து வரும் பணியையும், உடையார் மண் குதிரைகள் செய்து தரும் பணியையும் செய்கின்றனர். தோட்டி இனத்தவர் இசைக் கருவிகள் இசைக்கும் பணி செய்கின்றனர்.

வேளாண் உழைக்கும் மக்களான தேவேந்திரர்கள் தங்களின் கோயிலுக்குத் தனியாக ஒரு பூசாரி அதாவது பண்டாரத்தை நியமித்து கோயிலைக் கவனிக்கச் செய்த காலம் முதல் இன்று வரை அர்த்தநாரிப் பண்டாரம், அவர் மகன் குருநாதப் பண்டாரம் ஆகியோர் சுமார் நூறாண்டு காலமாகப் பூசாரியாக இருந்து வருகின்றனர். இவர்கள் கோயிலில் சம்பளம் பெறும் வேலையாள் மட்டுமே. கோயில் உரிமையில் இவருக்குப் பங்கில்லை.

தச்சு வேலை செய்யும் செட்டியார் அதாவது செட்டிபாளையத்தைச் சேர்ந்தவர் அரண்மனைப் பொங்கல் வைத்தல் எனும் ஒரு சடங்கை

விழாவன்று செய்கின்றார். இது பிற்கால மன்னர் ஆட்சிக் காலத்தில் அப்பகுதியில் ஆண்ட, ஜமீன் அல்லது பாளையப்பட்டு சார்பாகப் பொங்கல் வைப்பதற்காகக் கலந்து கொண்டிருந்தது பின்பு அதுவே மரபாகிப் போயிருக்கலாம். இதல்லாமல் தேவேந்திரர்களுக்கு தச்சுத் தொழில் செய்தவர் என்ற முறையில் இவர் கோயிலில் பொங்கல் வைக்க அனுமதிக்கப்பட்டிருக்கலாம். பின்னாளில் நாடார் இனத்தவர் ஒருவர் கிடாய் வெட்டும் உரிமை பெற்றுள்ளார். இக்கோயில் பிரசித்தபெற்று பிற சமூகத்தவர்கள் அதிக அளவில் கிடாய் பலியிட முன் வந்தபோது இவ்வுரிமை தேவேந்திரர்களால் ஒரு நாடார் குடும்பத்திற்கு மட்டும் கொடுக்கப்பட்டு அது மரபாகி வந்திருக்கின்றது. இதற்குக் காரணம் சொல்லும் காசியூர் தேவேந்திரர்கள் நாடார்கள் பனை மரத் தொழில் செய்ய வைத்துள்ள அரிவாளை நினைத்து எமது முன்னோர்கள் அவர்களுக்கு இவ்வுரிமை கொடுத்திருப்பர் என்கின்றனர். ஆனால் தேவேந்திரர்கள் தம்மைச் சார்ந்து வாழும் பிற சமூகத்தவர்களை வழிபாட்டில் இணைத்து கொள்ளும் சமூக இணக்கமாக செட்டியார் ஒருவரை பொங்கல் வைக்கவும், நாடார் ஒருவரைக் கிடாய் வெட்டவும் அனுமதித்துள்ளனர் என்றே தோன்றுகின்றது. அதே வேளையில் கவுண்டர்கள் எந்த விதத்திலும் இக்கோயில் வழிபாட்டில் பங்குபெறவோ உரிமை பெறவோ இல்லை. காரணம் இது தேவேந்திரர்களின் கோயில் என்பதால் கவுண்டர்கள் இதில் கலந்து கொள்ள ஆர்வம் காட்டவில்லை. மேலும் தம்மை ஒடுக்க நினைக்கும் சமூகம் என்பதால் கவுண்டர்களுக்குத் தேவேந்திரர்கள் இடம் கொடுக்கவில்லை என்று தோன்றுகிறது.

## *முற்காலத்தில் இவ்விழா*

ஆடி மாதத்தில் அதாவது ஆடிப்பெருக்கு விழாவாக இக்கோயில் விழா நடைபெற்றது. இப்பொழுது சித்திரை மாதத்தில் நடத்தப் படுகின்றது. இதற்குக் காரணம் 1845 வாக்கில் கொடிவேரி பழனிப் பண்ணாடி அவர்களால் பவானி ஆற்றின் குறுக்கே கட்டப்பட்ட கொடிவேரி அணையிலிருந்து முன்பு தடப்பள்ளி வாய்க்காலில் ஒரு போக சாகுபடிக்கு மட்டுமே தண்ணீர் வந்தது. இப்பொழுது பாவானிசாகர் அணை வந்தபின் இரண்டு போகச் சாகுபடி வயல்களில் நடைபெறுவதால் சித்திரை மாதத்தில் மழை இல்லாத, விவசாய வேலைகள் இல்லாத காலங்களில் நடத்தப்படுகின்றது.

## *அறுவடைத் திருநாள்*

இந்த விழா சித்திரை மாதத்தில் தொடங்குகின்றது விழா தொடக்கம் பூச்சாட்டுதல் எனப்படுகின்றது. இவ்வாறு பூச்சாட்டிய பின்னர் 14-ஆம் நாள் திருவிழா தொடங்குகின்றது. முதல் நாள் விழா அம்மை அழைத்தல் எனப்படுகின்றது. அம்மை அழைத்தல் என்றால் காசியூர் தேவேந்திரர்களின் படைக்கல வீட்டில் (சாமிவீடு) உள்ள தெய்வத்திற்கான படைக்கலங்களையும் நகைகளையும் கோயிலுக்கு எடுத்து வருதல் ஆகும். கோயிலுக்கு எடுத்து வந்து நகைகளையும் படைக்கலப் பெட்டியையும் பவானி நதியில் நீராட்டி தெய்வங்களுக்கு அணிவிக்கின்றார்கள். இவ்வாறு கோயில் விழா பூச்சாட்டுதல், படைக்கலப் பொருட்களைக் கொண்டு வருதல் நதியில் நீராட்டுதல் முதலிய அனைத்தையும் தேவேந்திரப் பண்ணாடிமார்களே செய்கின்றனர்.

அம்மை அழைத்தலின் போதும், தெய்வங்களுக்குப் பூசை செய்யும் போதும் முதல் மரியாதையை காசியூர் பண்ணாடிமார்களே பெறுகின்றார்கள். அதாவது ஊர்ப்பண்ணாடி (ஊர்த்தலைவர்) முதலில் மரியாதை பெறுவது மரபாக இருக்கின்றது.

அம்மை அழைத்து முடிந்ததும் மறுநாள் காலையில் பொங்கல் வைத்தல் சடங்கு நடைபெறுகின்றது. இப்பொங்கல் வைத்தல் கோயிலுக்கு முன்னால் நடைபெறும். காசியூர் ஊர்ப்பண்ணாடி பண்ணாடிப் பொங்கல் என்றும் செட்டிபாளையம் செட்டியார் ஒருவர் அரண்மனைப் பொங்கல் என்றும் முதல் பொங்கலை வைக்கின்றனர். இதன் பின்னர் ஊர் மக்கள் அனைவரும் பொங்கல் வைக்கின்றனர். பொங்கல் வைத்தல் கோயிலைச் சுற்றியுள்ள வயல்களில் வைக்கப்படுகின்றது. பொங்கல் வைத்து இறைவனுக்குப் படையலிட்டு வழிபாடு செய்த பின்னர் கிடாய் வெட்டுதல் தொடங்குகின்றது. கிடாய் வெட்டும் உரிமையுடைய நாடார் தயாராக இருக்கிறார்.

முதல் கிடாய் வெட்ட கிடாய் துளுக்குவதற்கு கிடாய் மீது மஞ்சள் நீரைத் தெளித்த பின்னர் சிலிர்த்து துளுக்கி நிற்பதைப் பார்த்து ஊர்ப்பண்ணாடி வெட்டலாம் என்று உத்தரவு தர கிடாய் வெட்டப்படு கின்றது. குறைந்தது 1000 கிடாய் வெட்டப்படுமென்று சொல்கின்றனர். இவ்வாறு பொங்கல் வைத்தலும் கிடாய் வெட்டுதலும் வயலிலேயே நடத்தப்படுகின்றன. கோயிலைச் சுற்றியுள்ள வயல்களுக்கு உரிமையாளர்கள் எல்லாம் நல்ல விளைச்சல் வேண்டி, நோய் நொடி நீக்க

வேண்டி வேண்டுதல் செய்து கிடாயைப் பலி கொடுக்கின்றனர். இவ்வாறு பலி கொடுக்கப்படும் கிடாய் இரத்தம் வயல்களில் பெருகுவது வளமையின் குறியீடாகும். வயல்களில் உயிரினங்களைப் பலியிடுதல் பண்டுதொட்டு உலகெல்லாம் நடந்துவரும் வழிபாட்டு முறையாகும். பொங்கல் வைத்தல் என்பது அதிக விளைச்சலைக் கொடுத்த தெய்வத்திற்கு நன்றிக்கடனாக அந்த ஆண்டு விளைந்த நெல்லிருந்து அரிசி எடுத்து பொங்கல் வைத்து வழிபாடாற்றுவது ஆகும். இது தமிழரின் தொன்மையான வழிபாடாகும். இவ்வகையில் இவ்வழிபாடு ஒருவகையில் அறுவடைக்கு நன்றி தெரிவிக்கும் அறுவடை விழாவாகவும், வயலின் வளமை பேணும் வளமை வழிபாடாகவும் அமைவதைக் காணலாம். இதனூடே முன்னோர் வழிபாடு (சுங்கத்து அய்யன், கருப்பராயன்) ஆவி வழிபாடு (முனி) வளமை வழிபாடு (கன்னிமார்) இயற்கை வழிபாடு (நதி, இலுப்பை மரம்) ஆகியன இணைந்திருப்பதையும் காணமுடியும். காசியூர் தேவேந்திரர்களின் ஊர்ப்பொதுத் தெய்வவழிபாடாக இருந்த இவ்வழிபாடு பல வழிபாட்டுக் கூறுகளை ஏற்று பல இனத்து மக்களும் வழிபடும் பொதுத் தெய்வ வழிபாடாக வளர்ச்சி பெற்றிருப்பதைக் காணலாம்.

## *வழிபாட்டு மரபுகளும் உரிமைகளும்*

1. கோயிலின் நிர்வாகச் செலவை காசியூர் தேவேந்திரர்கள் ஊர்ப்பொது வரி என்றும் மாங்கல்ய வரி என்றும் வசூல் செய்தே செலவு செய்கின்றனர். வேறு எந்தச் சமூகத்தவரிடம் இவர்கள் விழாச் செலவு என்று வரி வசூலிப்பதில்லை.
2. அரண்மனைப் பொங்கலை செட்டியார் வரவில்லை என்றால் கோயில் பூசாரியோ அதாவது பண்டாரம் காசியூர் தேவேந்திரர்கள் கொடுத்த நெல்லசிரியில் பொங்கல் வைப்பது வழக்கம்.
3. முதல் பொங்கலை காசியூர் ஊர்ப்பண்ணாடியே பண்ணாடி பொங்கல் என்று வைக்கும் மரபு உள்ளது. பிற பொங்கல்களை பொங்கலுக்குரிய பெண்களே வைக்கின்றனர்.
4. கோயில் நிர்வாகம் முழுமையும் கட்டிடப் பராமரிப்பு, பூசாரி நியமித்தல், விழாக் கொண்டாடுதல் அனைத்தும் காசியூர் பண்ணாடிமார்களே வழிவழியாகச் செய்து வருகின்றனர்.
5. பொங்கல் வைத்தலும், கிடாய் வெட்டுதலும் சிறப்பான வழிபாடாகும்.
6. குழந்தைப் பேறு இல்லாதவர்கள் இங்குள்ள தல விருட்சத்தில் தொட்டில் கட்டி வைத்தால் குழந்தை பிறக்குமென்று

நம்புகின்றனர்.

7. நோய் வந்த உறுப்புகளை மண் பொம்மைகளாகச் செய்து வைத்தால் நோய் குணமாகும் என்று நம்புகின்றனர்.
8. கால்நடைகள் பெருக ஆடு, மாடு போன்ற பொம்மைகளை மண்ணால் செய்து காணிக்கை ஆக்குதல்.
9. நேர்த்திக்கடன் செலுத்தி வழிபடுவோர் கோயிலின் முன்னுள்ள மணியை ஒலி எழுப்பி வழிபாடு செய்வது வழிவழி மரபு.
10. மொட்டையடித்து வழிபாடு செய்வோர் பவானி நதியில் குளித்து விட்டு கோயிலுக்கு வரவேண்டும்.
11. ஆட்டுக்கிடாய் பலிகொடுக்க முடியாதவர்கள் கோழியையும் பலியிடலாம். பலியிடப்பட்ட ஆடு, கோழியை கோயிலிலேயே சமைத்து உண்ண வேண்டுமென்பது மரபு.

இவ்வாறு பல வழிபாட்டு மரபுகளைக் கொண்டுள்ள சுங்கத்து அய்யன் வழிபாட்டில் தேவேந்திரர்களுடன் பல சமூக மக்களும் ஊர்ப்பொதுத் தெய்வமாகக் கருதி வழிபாடாற்றும் முறை காணப்படுகின்றது. இப்பொழுது இவ்வழிபாட்டில் சில சமூகப் பிரச்சினைகள் தோன்றியுள்ளன. அது வருமாறு.

## *கோயில் ஆக்கிரமிப்பு*

200 ஆண்டுகளாகக் காசியூர் தேவேந்திரர்களின் வழிபாட்டு உரிமைபெற்று விளங்கிய சுங்கத்து அய்யன் கோயிலின் அருகிலுள்ள நிலத்தின் சொந்தக்காரர் அதாவது கொங்கு வேளாள கவுண்டர் இனத்தவர் பவானி நதிக்கரையையும் கோயிலைச் சுற்றியுள்ள கோயிலுக்கு உரிமையான 1, 2 ஏக்கர் நிலத்தையும் இம்மக்களுக்குத் தெரியாமல் பயிர்ச் சாகுபடி, பீமா என்று பல வழிகளில் கடந்த பத்து ஆண்டுகளில் ஆக்கிரமித்துள்ளார். இதோடு மட்டுமல்லாமல் கோயிலையே தனது சொந்தப் பட்டாவுக்குள் வருமாறு செய்து நீதிமன்றத்திலும் கோயில் எனக்குச் சொந்தம் என்று வழக்குத் தொடர்ந்துள்ளார். இதனையடுத்து இந்து அறநிலையத்துறை இந்தக் கோயிலின் உரிமைகளை ஆராய்ந்து சென்ற ஆண்டு அதாவது 2000ம் ஆண்டு காசியூர் தேவேந்திரர்களிடமே ஒப்படைத்துள்ளது. அதாவது காசியூர் தேவேந்திரர்கள் எழுவர் அடங்கிய அறங்காவலர்கள் குழுவிடம் கோயில் ஒப்படைக்கப் பட்டுள்ளது.

## *சுங்கத்து அய்யன் கோயில் அறங்காவலர்கள்*

1. அவினாசிப் பண்ணாடி - காசியூர்
2. அய்யாப் பண்ணாடி - காசியூர்

3, வீரப்பப்பண்ணாடி - காசியூர்
4. கருப்பசாமிப்பண்ணாடி - காசியூர்
5. கருப்பப்பண்ணாடி - காசியூர்
6. *காளியண்ணபண்ணாடி* - *காசியூர்*
7. பெரிய பொன்னன்பண்ணாடி - காசியூர்

மேற்கண்ட ஏழுபேரின் குடும்ப வகையறாக்களே பரம்பரை பரம்பரையாக இக்கோயிலை நிர்வகித்து வந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

## *தொகுப்புரை*

200 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பட்ட இவ்வழிபாட்டில் காசியூர் தேவேந்திரர்கள் மட்டுமே இருந்துள்ளனர். கோயிலின் அனைத்துக் கட்டிட மேம்பாடுகளும் காசியூர் தேவேந்திரர்களாலேயே செய்யப்பட்டுள்ளன. தங்களுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து இந்தக் கோயிலின் அனைத்து உரிமைகளும் தங்களுக்கானதாகவே இவ்வூர்ப் பண்ணாடிமார்கள் கருதி வாழ்ந்து வருகின்றனர். ஆனால் கோயிலையே தனியாள் ஒருவர் பட்டா போட்டுவிடும் சூழ்ச்சி தெரியாது போய் இப்பொழுது விழித்துக் கொண்டுள்ளனர். இந்தக் கோயிலின் வளர்ச்சியால் வரும் நிதி ஆதாரம் ஆதிக்கச் சாதி தனி ஆளை கோயிலே என்னுடையது என்று சொல்லுமளவிற்கு வைத்துள்ளது என்பதை அறிய முடிகின்றது.

OOO

## *குறிப்பு*

காசியூர் பொதுமக்கள் மற்றும் அறங்காவலர்கள் அளித்த தகவல்கள். இது அன்றி 03.05.2000 அன்று நடைபெற்ற மறுபூசை விழாவில் கலந்து கொண்டு சேகரித்த தகவல்களின் அடிப்படையில் இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

# 9. ஏர்மங்கலமும் உழத்திப்பாட்டும்

இன்று தமிழகத்தில் ஒன்றரைக் கோடிக்கு மேல் மக்கள் தொகையுடன் வாழும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களைத் தலைமக்களாகக் கொண்டு பாடப்பட்டுள்ள வேளாண் இலக்கியமான பள்ளுப் பாடல்களின் தோற்றுவாயில்கள் இம்மக்களிடம் பண்டு தொட்டு வழங்கி வந்த ஏர் மங்கலப் பாடல்களும், உழத்திப் பாடல்களுமே ஆகும். ஆனால் இன்று அவ்வாறு பாடப்பட்ட இலக்கிய வகையான உழத்திப்பாடல் நமக்குக் கிடைக்கவில்லை. இக்கட்டுரை மள்ளர் குல மக்களிடம் வழக்கிலிருந்த ஏர்மங்கலப் பாடலின் வளர்ச்சியே உழத்திப்பாட்டு என்பதைச் சுட்டிக்காட்ட முயல்கின்றது.

## *ஏர்மங்கலமும் உழத்திப்பாட்டும்*

இது ஏரின் சிறப்புரைத்து வாழ்த்துதல் ஆகும். இந்த ஏர்மங்கலம் தொல்காப்பியத்தில்

> ஏரோர் களவழியன்றிக் களவழித்
> தேரோர் தோற்றிய வென்றியும்
>
> (தொல் - புறம் - 24)

என்ற நூற்பா ஏர்க்கள, போர்க்கள இயைபினைச் சுட்டும். இங்கு ஏரின் உழவரே போர்க்கள மள்ளராக விளங்குவதால் இவ்வாறு ஏரையும் போரையும் இணைத்துக் காட்டி இலக்கணம் செய்துள்ளார் தொல்காப்பியர் என்றும் கருதலாம். இந்த ஏர்மங்கலத்தைப் புறப் பொருள் வெண்பா மாலை "செந்நெல் கதிரோடு அறுகையும் குவளையையும் கலந்து தொடுத்த மாலையை மேழியில் கட்டிப் பாரை இரண்டாகப் பிளப்பாரைப் போற்றுவார் தொழப் பொன்னேர் பூட்டி நின்றார் ஏரைப் பாடும் ஏர் மங்கலம் என்று துறை விளக்கம் தரும். இது குடைமங்கலம், வாள் மங்கலம், மண்ணுமங்கலம் போன்றதோர் புறத்துறையே ஆகும். மன்னனுக்குரிய துறைகளுக்கொப்ப உழவர்க்கும் உரைக்கும் மரபை வேளாண் வாகை, திணை நிலை என்னும் புறத்துறைகளாக அறியலாம். (பு. பொ.வெ. மா. நூ. 34)

தொல்காப்பியத்தின் படியும் சங்க இலக்கியத்தின் படியும் அங்கு குறிக்கப்படும் ஏர்க்கள மள்ளரும் போர்க்கள மள்ளரும் ஒருவரே ஆவர். இதனைத் திவாகர நிகண்டும், பிங்கல நிகண்டும் முறையே

அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தகைத்தாகும் மள்ளர் என்னும் பெயர்

என்றும்

செருமலை வீரரும் திண்ணியோரும்
மருதநில மக்களும் மள்ளர் என்ப

என்றும் குறிப்பிடும். இவ்வாறு ஏரையும் போரையும் ஒருங்கே கொண்டு வாழ்ந்த மள்ளர்களிடம் வழக்கிலிருந்து ஏர்மங்கலப் பாடல்கள் இன்றும் இவர்களிடம் வழக்கிலிருக்கின்றன. இப்பாடல்கள் குறித்து வையாபுரிப் பள்ளு நூலின் பதிப்பாசிரியர் அ.மா. பரிமணம் வருமாறு குறிப்பிடுவார்.

"குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் திணை அடிப்படையில் ஐந்திணை மக்கள் வாழ்வு போற்றும் இசைப் பாடல்கள் தோன்றலாயின. இந்த இலக்கிய வளர்ச்சியை சிலப்பதிகாரக் காவியத்தில் காணப்படும் குன்றக்குரவை, வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, கானல்வரி முதலான இசைப் பாடல்களில் காணலாம். கானல் வரியில் அமைந்துள்ள ஆற்றுவரிப் பாடல்கள் மருதநில வளத்தையும் அங்கு வாழும் மக்கள் சிறப்பையும் உணர்த்துகின்றன. உழவர் சிறப்பு பேசப்படுவது "ஏரோர் களவழி" என்று தொல்காப்பியத்தில் குறிக்கப்படுகிறது. உழவுத் தொழிலின் இன்றியாமையினால் அத்தொழில் புரியும் உழவர்களின் வாழ்வுச் சிறப்புகளைப் பேசும் பாடல்கள் ஏர்மங்கலம், உழவர்பாட்டு, உழத்தியர் பாட்டு என்று பலவாறாகச் சிறப்புற்றன. உழுதுண்டு வாழும் மக்கள் பள்ளர் என அழைக்கப்பட்ட பின்னர் அவர்கள் பற்றிய பாட்டு பள்ளுப்பாட்டு என்று அழைக்கப் பட்டிருக்கலாம்" என்பார் (பக். 4) இக்கருத்து ஏற்புடையதே ஆகும்.

மருதநில நெல் வேளாண்மையை உயிராகக் கொண்டு வாழும் மள்ளர்கள் நாயக்கர் ஆட்சிக் காலத்தில்தான் பள்ளர் என்று அழைக்கப் படுகின்றனர் என்பதைத் தமிழக வரலாற்றின் மூலம் அறியலாம். சங்க இலக்கியம் முதல் காப்பியக் காலம் வரை மள்ளர் என்று அழைக்கப்பட்ட இம்மக்கள் நாயக்கர் காலப் பள்ளு நூல்களில் தான் முதன் முதலில் பள்ளர் என்று அறியப்படுகின்றனர். இருப்பினும் இதே பள்ளு நூலில் இவர்கள் மள்ளர் என்று அழைக்கப்படுவதும் இங்கே நினைக்கத்தக்கது. இவ்வாறு மள்ளர் பள்ளர் என்று அழைக்கப்பட்ட பின்னர் இவர்களிடம் வழக்கிலிருந்த ஏர்மங்கலம், உழவர்பாட்டு, உழத்தியர் பாட்டு முதலியன பள்ளுப் பாடல்கள் எனப் பட்டன என்பதும் அறியத்தக்கது. ஆனால் இப்பள்ளுப் பாடல்களில் உழவு மற்றும் உழவரின் பெருமை

பேசுவதற்குப் பதில் உழவரை ஏசுதல் ஏன் என்ற கேள்வி எழும். இதற்கு விடை கண்டால் மள்ளர் பள்ளராக வீழ்த்தப்பட்ட விதம் நன்கு புலப்படும். இப்பள்ளுப் பாடல்களிலும் ஏர்மங்கலப் பாடல்கள் இடம் பெறுகின்றன. ஆனால் அதே நாளேர் பூட்டுதல் என்ற மட்டிலுமே சுருக்கிப் பேசப்படுகின்றது. ஆனால் இம்மக்களிடம் பொன்னேர் பூட்டுதல் என்பது இன்று ஒரு விழாவாகக் கொண்டாடப்படுகின்றது. இராஜபாளையம் வட்டாரத்தில் பொன் ஏர் பூட்டுதலை ஏர்த்திருவிழா என்ற பெயரில் இன்றும் ஆடி மாதத்தில் மள்ளர் குல மக்கள் கொண்டாடுகின்றனர். கொங்கு நாட்டில் பொன் ஏர் பூட்டுதலை நாளேர் பூட்டுதல் எனும் இந்திர விழா அதாவது நாற்று நடவுத் திருவிழா என்று சிவன் மள்ளராக மாறி உழவு செய்ததைக் கொண்டாடும் விழாவாகக் கொண்டாடுகின்றனர். தாராபுரம் வட்டாரத்தில் பென்னேர் எனும் நாளேர் கட்டுதல் விழா ஆண்டு தோறும் நடைபெறுகின்றது. இச்சமயம் பாடப்படும் பாடல்கள் சிறப்புமிகு ஏர்மங்கலப் பாடலாகவும் உழத்தியர் பாட்டாகவும் அமைகின்றன.

"பொன்னேர் பூட்ட கோளாறு சொன்ன
தேவேந்திரனாம் பேரு"

என்று தொடங்கும் இந்த ஏர்மங்கலப் பாட்டு மழையின் வருகை, உழவு செய்தல், விதை விதைத்தல், நடவு செய்தல், களையெடுத்தல், உரமிடுதல், அறுவடை செய்தல் என்றவாறு உழவுத் தொழில் அனைத்தையும் இலக்கியமாக்கும் ஒரு நீண்ட பாடலாக அமைகின்றது. அப்பாடலின் சில வரிகள் வருமாறு.

"மான மிருண்டு வரும் அல்லிலே லேலே
மலையிருட்டும் கூட வரும் தில்லாலேலே
மழையே பொழிய வேண்டும் அல்லிலேலேலே
மக்கள் பஞ்சம் தீரவேண்டும் தில்லாலேலேலே
... ... ... ...
மண்வெட்டி கையிலெடுத்து தேவேந்திரன் மகனே
மடை மாரி தண்ணி காட்டுவான் தேவேந்திரன் மகனே
சந்தனக் கலப்பை வெட்டி தேவேந்திரன் மகனே
அவன் சரிபார்த்து மேழி செய்வான் தேவேந்திரன் மகனே
குங்குமக் கலப்பை வெட்டி தேவேந்திரன் மகனே
கோளாறா மேழி செய்வான் தேவேந்திரன் மகனே"

என்று தொடர்ந்து உழவின் சிறப்பு நூறு வரிகளுக்கு மேல் பாடப்படுகின்றன. இதே உழத்திப் பாடல் கோவை பேரூரில் நடைபெறும் இந்திர விழா எனும் நாளேர் பூட்டுதல் மற்றும் நாற்று

நடவுத் திருவிழாவில் பாடப்படுகின்றது. அவை வருமாறு.

"சந்தனக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
இந்தச் சாதிலிங்க நாத்தெடுத்து பள்ளி நடுவாள்
குங்குமக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
குபேந்திரன் நாத்தெடுத்து பள்ளி நடுவாள்"

இதே பாடல் சில வேறுபாடுகளுடன் மாந்தைப் பள்ளில் உழத்தி பாடல் எனும் பெயரில் இடம் பெற்றுள்ளது.

"செஞ்சுடர்ப் படைவாள் கொண்டு பள்ளருவார் - பெண்கள்
சீரகச் சம்பா நெல் நாற்றைச் சேர நடுவார்
இன்னும் பல படை கொண்டு பள்ளருழுவார் - பெண்கள்
எத்தனையோ வித நெல் நாற்றெங்கும் நடுவார்"

என்றவாறு இடம் பெற்றுள்ளதிலிருந்து மள்ளர் குல மக்களிடம் ஏர்மங்கலப் பாடலாக வழக்கிலிருந்த பாடல்களே பள்ளு இலக்கியங்களிலும் காணப்படுகின்றன எனலாம். ஆனால் மள்ளர்கள் தங்களின் தொழில் வன்மைகளையும் சிறப்புக்களையும் தங்களது பெருமைகளையும் பாடுவதாக அமைந்த உழத்திப் பாடலைப் பள்ளு நூலின் புலவர்கள் புரவலர்களிடம் பரிசில் பெறும் நோக்கில் மள்ளர்களை ஏசும் இலக்கியமாக்கிவிட்டனர் எனலாம். இங்கே நாம் கருத்தில் கொள்ள வேண்டியது மறக் களவழிப் பாடல் பரணியாக போரை வர்ணிக்கும் ஓர் இலக்கிய வகையாக வளர்ந்தது போல் ஏர்மங்கலப் பாடல் உழவரின் சிறப்புப் பேசும் உழத்திப் பாடலாகவும் ஓர் தனித்த இலக்கியமாக வளர்ந்திருத்தனைப் பன்னிறு பாட்டியல் இலக்கண நூல் அறுபத்தி எட்டு வகைச் சிற்றிலக்கியங்களில் உழத்திப்பாட்டு ஒன்று என்று இலக்கணம் வகுத்திருப்பது மூலம் அறியலாம்.

"புரவலர் கூறி அவன் வாழிய என்று
அகல்வய தொழிலை ஒருமை உணர்ந்தனள்
எனவரும் ஈரைந்து உழத்திப்பாட்டே"

இவ்விலக்கணப்படி உழத்தியரின் தொழில் சிறப்பைப் பள்ளு நூல்கள் சுட்டவில்லை. உழத்தி பெருமை பேசாது ஒழுங்காக வேலை செய்யுமாறு கூறுவதையே பள்ளு நூல்கள் தனது நோக்கமாகக் கொண்டுள்ளன. இதிலிருந்து உழவைப் போற்றி எழுதப்பட்ட பாடல்கள் உழத்திப் பாட்டு எனும் தனி இலக்கிய வகையாக இருந்திருக்க வேண்டும், இந்நூல்கள் அன்றைய அரசியல் மாற்றத்தால் மறைக்கப்பட்டு அதற்கு நேர் மாறாக அவர்களைப் பண்ணை வேலையாட்களாகச் சித்திரிக்கும் பள்ளுப் பிரப்பந்தமாக்கி பிரபலப் படுத்தியிருப்பர் என்றும் கருதலாம். காரணம்

பிரதி எடுத்தாற்போல் நூற்றுக்கணக்கான நூல்கள் நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது எனும் அளவில் உற்பத்தி செய்யப்பட்டதைக் கூறலாம். இருப்பினும் இப்பள்ளு நூல்களின் தலைமக்கள் இன்றும் வேளாண்மைமையை உயிர் மூச்சாகக் கொண்டு வாழ்வதையும் உழவின் பெருமைகளையும் உழவுப் பாடல்களாகப் பாடி வருவதையும் காணலாம். இது குறித்து பள்ளு நூலின் தோற்றம் எனும் கட்டுரையில் நா. வானமாமலை குறிப்பிடுவது இங்கு கவனித்தக்கது.

"பள்ளுப் பாட்டு இன்று நமக்குக் கிடைக்கும் கதையமைப்போடும் செய்யுளமைப்போடும் 17ம் நூற்றாண்டுகளுக்கு முன்பு இருந்ததில்லை என்பது உண்மையே. ஆனால் 17ம் நூற்றாண்டில் திடீரென்று இது முளைத்து விட்டதென்று சொல்லமுடியாது. பல சிற்றோடைகளாக மலைச்சாரலில் ஓடிவரும் நீர்ப் பகுதிகள் சமவெளியில் கலந்து ஆறாகப் பெருகுவதைப் போல உழவர் வாழ்க்கையைப் பொருளாகக் கொண்டு பழங்காலம் முதல் தமிழ்க் கவிகள் பாடிய பாடல்களும் உழவர்கள் வாழ்க்கையில் உயிரோடு உலவி வந்த நாட்டுப் பாடல்களும் கூத்துமே பள்ளுப் பாட்டு உருவாகக் காரணமாக இருந்திருக்க வேண்டும். தமிழ்க் கதையான இராமாயணத்தில் கம்பன் கோசல நாட்டு உழவர்களைத் தமிழ் நாட்டுப் பள்ளர்களை மனதில் கொண்டே வர்ணித்தான். உழவுத் தொழிலையும், உழவையும் போற்றி ஏரெழுபது பாடினான். அவன் காலத்திலும் அதற்கு முன்பும் உழவரை மறந்து அரசரைத் துதித்து வாழ்ந்த புலவர்கள் இருந்தார்கள். சோழ மன்னர்களைப் புகழ்ந்து உலாக்களும், பரணிகளும் பாடினார்கள். ஆனால் கம்பன் போன்ற புலவர்கள் உண்மையான தமிழ்க்கவி மரபைப் காத்தார்கள். இலக்கணத்திலும் அரசரது வெற்றியைக் கூறும். வாள்மங்கலம், குடைமங்கலம் என்ற துறைகளோடு ஏர்மங்கலமும் இடம் பெற்றது" (பள்ளு நூலின் தோற்றம், சரசுவதி, நவம்பர், பக் 13-16) என்று கூறுவதிலிருந்து மன்னர்களின் உழவுப் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல் மரபிலும் இலக்கிய மரபிலும் போற்றப்பட்டதை அறிகிறோம். ஆனால் பள்ளுப் பாடல்களில் இவ்வுழவர்கள் ஏசப்படுவதற்குக் காரணம் பிற்காலப் பாண்டிய மரபினராக இருந்த இம்மள்ளர்களை வீழ்த்தியே நாயக்கர் ஆட்சி தமிழகத்தில் தோன்றியது என்பதால்தான் ஆகும். நாயக்கர் ஆட்சியில் ஏற்பட்ட பாளையப்பட்டு ஆட்சி முறை கூட மள்ளர்களை வீழ்த்துவதற்காகவே என்று குறிப்பிடும் வரலாற்றறிஞர் கே. ஆர். அனுமந்தனின் கருத்தும் இங்கு கருதத்தக்கது.

## தொகுப்புரை

மள்ளர்களிடம் இன்றும் வழங்கிவரும் ஏர்மங்கலப் பாடல்களும் உழத்திப் பாடல்களும் பன்னிரு பாட்டியல் குறிப்பிடும் உழத்திப்பாட்டின் இலக்கிய வகையை நினைவுபடுத்துவதாக உள்ளன. இவ்வுழத்திப் பாடலை உள்வாங்கிக் கொண்டு தோன்றிய பள்ளு நூல்கள் மள்ளர்களை ஏசுவதற்கு மட்டுமே பெரிதும் முக்கியத்துவம் கொடுக்கின்றன. இதிலிருந்து உழத்திப்பாட்டு வேறு பள்ளுப்பாட்டு வேறு என்ற முடிவை இக்கட்டுரை சுட்டுகின்றது.

OOO

(இக்கட்டுரை திருச்செந்தூர் தமிழாய்வு மன்றம் பிப்ரவரி 6,7, 1999ம் நடத்திய கருத்தரங்கில் படித்தளிக்கப்பட்டது ஆகும்.)

# 10. உழத்திப் பாட்டு

மருத நில மக்களான மள்ளர்கள் நெல்லின் மக்கள் என்றும் செந்நெல் முதுகுடியினர் என்றும் ஏருடன் பிறந்தவர்கள் என்றும் மழையின் மைந்தர்கள் (இந்திரனின் மக்கள்) நீராணிக்கர் என்றும், நீர்க்கட்டி என்றும், பண்டைக் காலம்தொட்டு இன்றுவரை புகழப்படுபவர் ஆவர். இம்மக்களின் முன்னோரே நெல்லினை முதன் முதலில் இப்பூவுலகில் பயிர் செய்தவர் ஆவர். இதனால் நெல் பயிரிட்ட மருதநிலத்தின் தலைவன் வேளிர் என்று அழைக்கப்பட்டான். இவனே பின்பு வேந்தனானான். "நல்வினை செய்தவர்களின் உயிர்கள் இறந்த பின் மேலுலகத்திற்குச் செல்லுமென்றும், உலகில் (மருதநிலத்தில்) அரசனாயிருந்தவன் மறுமையில் மேலுலகத்திலும் அரசனாவான் என்றும் மருதநில மாந்தர் கருதி, முதன் முதலில் இறந்த அரசனையே வேந்தன் என்று பெயரிட்டு வணங்கினார்கள். மழை மேலிலிருந்து பெய்வதால், மேலுலக வேந்தனாகிய தங்கள் தெய்வத்தினிடமிருந்தே வருவதாக் கருதி, மழை வளத்திற்காகவும் அவனை வழிபட்டார்கள்" (ஞா. தேவநேயப் பாவாணர், ஒப்பியின் மொழிநூல், ப, 201) எனும் கூற்றிற்கேற்ப மருதநில மள்ளர்கள் மழை வளம் வேண்டி இன்றும் தங்களின் குல முதல்வனான இந்திரனை வழிபடும் மழை வழிபாடு மழைப்பாட்டு எனும் இலக்கியமாக இம்மக்களிடத்தில் இன்றும் வழக்கியிருப்பதைக் காணமுடிகின்றது. இம்மக்கள் மேல் பாடப்படும் பள்ளுப்பாடலிலும் மழை வேண்டி மள்ளர்கள் வழிபடும் முறை சிறப்பித்துப் பேசப்படும். இவ்வாறு மழை வேண்டி வழிபடும் மள்ளர்களும், மள்ளத்தியர்களும் சேர்ந்து பாடும், மழைப்பாட்டு, ஏர்வலப் பாடல்கள், நாளேர் பாடல்கள், ஏர் மங்கலப் பாடல்கள், நெல் விதை விதைப்புப் பாடல்கள், நெல் அளவைப் பாடல்கள் முதலியன இம்மக்களின் வேளாண் வாழ்வினை விளக்கிக் காட்டும். இப்பாடல்கள் உழத்திப் பாட்டு எனும் பெயரில். பன்னிரு பாட்டியல் இலக்கண நூலில் குறிக்கப்படுகின்றது. இவ்விலக்கியம் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் இவ்விலக்கியம் குறிப்பிடும் இலக்கணமான

"புரவலர் கூறி அவன் வாழிய என்று
அகல்வய தொழிலை ஒருமை உணர்ந்தனள்
எனவரும் ஈரைந்து உழத்திப்பாட்டே"

அதாவது உழத்திப்பாட்டு மன்னர்களைப் போற்றியும் உழவர்களைப் பற்றியும் பாடப்படும் பத்துப்பாட்டுக்களைக் கொண்டது என்று இலக்கணம் கூறுகின்றது. இதன் படியான பாடல்கள் மள்ளர்களிடம் வழங்கும் உழத்திப் பாடல்களில் காணப்படுவதை இக்கட்டுரை விளக்க முயல்கின்றது.

## *மழைப்பாட்டு*

மதுரை மாவட்டம், சோழவந்தானில் மழை இல்லாக் காலங்களில் கிராமப் பெரியோர்கள் கூடி அனைத்துச் சமூகத்தாரும் நெல் மணிகளை வசூல் செய்து உரிய முறைப்படி தேவேந்திரர் தலைவர்களிடம் கொடுத்து ஊர் மக்கள் அனைவரும் மேளம், தாளம் முழங்கச் சென்று, ஊரின் வடக்கு எல்லையில் வீற்றிருக்கும் செல்லாயி அம்மனுக்குப் பொங்கலிட்டு மழை வேண்டுதல் இன்றும் நடைபெறுகிறது. இது போன்ற வழிபாட்டு முறை பாலமேடு, தேவாரம் போன்ற ஊர்களிலும் இருக்கின்றது. (இரா. முத்துமணி தேவேந்திரர், தமிழகக் கிராமங்களில் தேவேந்திர குல வேளாளர் தலை மக்களுக்குக் கிடைத்து வரும் கோயில் மரியாதைகள், தமிழர் பண்பாட்டு வரலாறு, ப. 173)

இதே போன்ற திருப்பரங்குன்றம் பகுதியில் விளாச்சேரியிலுள்ள அழகு நாச்சியம்மனுக்கு புரட்டாசி மாதத்தில் மழை வேண்டி நோன்பிருக்கும் மள்ளர் குல உழத்தியர்கள் யாருடைய நிலத்திற்கு வேலைக்குச் சென்றாலும் எங்கும் உண்பதில்லை. இந்த எட்டு நாட்களிலும் கோயில் வாசல், ஊர் எல்லை, அய்யனார் கோயில் பகுதிகளில் அழகுநாச்சியரை வேண்டி மழைப் பாட்டுப் பாடுகின்றனர். இவர்களுள் ஒரு முதிய பெண் பாட ஒவ்வொரு பாடல் முடிந்த உடன் பிறபெண்கள் குலவையிடுகின்றனர். இறுதி நாளில் எல்லாச் சாதியினரும் அழகுநாச்சிக்கு மாவிளக்கு எடுத்து வழிபாடு செய்கின்றனர். இசுலாமியர் கூட தங்களுக்கான காணிக்கைப் பொருட்களை இக்கோயிலுக்குக் கொடுத்தனுப்புகின்றனர். இவ்வாறு மழை வேண்டிப் பாடும் பெண்கள் எல்லாக் கிராமங்களிலும் மள்ளர் குல உழத்தியராகவே இருப்பதை நாம் இங்கே நினைய வேண்டும். மழை வேண்டி வழிபடும் வள வழிபாடு சிலப்பதிகாரம் காட்டும் இந்திர விழாவிலிருந்து நாம் ஓர் வழியாகப் பெறமுடியும். இது இன்றும் இம்மக்களிடம் இந்திரவிழா எனும் பெயரில்

வழிபடப்படுவதைக் கோவை பேரூர் பட்டீஸ்வரர் மள்ளர் திருக்கோயிலில் இன்றும் காணலாம். இதே வழிபாட்டு முறையை பல பள்ளு நூல்களை மனங் கொண்டு படிப்போர் உணர்வர்.

"மாரிப் பொருட்டால் வரங்குறித்து மள்ளரெல்லாம்
சேரிக் குரவையெழத் தெய்வ நிலை போற்றினரே"

(முக்கூடற்பள்ளு, பா. எண் 30)

எனும் பாடல் வரிகளின் மழை வேண்டி மள்ளர்கள் குலவை ஒலி எழுப்பி மழை வரம் வேண்டுதல் பாடப்படுவதைக் காண்கின்றோம்.

"காவுக் இறைவனாகும் இந்திரன்
ஏவற் பணி கொண்டெழுந்த கார்"

(முக்கூடற்பள்ளு, பா. எண் 37)

இதில் காவுக்கு இறைவன் அதாவது கற்பகப் பூங்காவின் தலைவனாகிய இந்திரனின் ஏவற் கட்டளை ஏற்று மழை பொழிந்தது என்று அறிகின்றோம். இங்கே மழைக் கடவுளாக இந்திரனே வர்ணிக்கப்படுகின்றார். இதனையே இன்றைய உழத்திபாடல் எனும் மழைப்பாட்டு

"சந்திரரே சூரியரே சாமிபகவானே
இந்திரரே இப்ப மழை பெய்ய வேண்டும்".

என்றும்

வடக்கே மழை கருக்கவே
வாய்மடை எல்லாம் சங்கு புரளவே
தண்டொதுங்கி தடியொதுங்கி
வருகுதாங்காவேரி
தாழை மடலொதுங்கி வருகுதாங்காரேி
கெண்டை மீன் வாய்திறந்து வருகுதாங்காவேரி
அத்துனை காவேரியை - நம்ம
தேவேந்திர ராசா தண்ட மாலையிலே
தடுத்தொதுக்கி வாராங்கோ
சேரக் குலவையிடுங்க
தேவேந்திரக் கன்னியெல்லாம்

(ரங்கசாமி, 76, தேவேந்திரகுல வேளாளர், புலியகுளம், கோவை)

என்றும்

"மானமிருண்டு வரும் அல்லிலே லே லே
மழையிருட்டும் கூட வரும் தில்லாலே லே லே
மழையே பொழிய வேண்டும் அல்லிலே லேலே - அங்கே

மக்கள் பஞ்சம் ஆறவேண்டும் தில்லாலே லேலே
ஆத்திலேயும் தண்ணி வர அல்லிலே லே லே - தன்னா
அலைபுரண்டு போக வேண்டும் தில்லாலே லே - அங்கே
மண்வெட்டி கையிலெடுத்து தேவேந்திரன் மகனே - அங்கே
மடை மாறி தண்ணி காட்டுவான் தேவேந்திரன் மகனே"

(ஐ. முத்தம்மாள் (60) தேவேந்திர குல வேளாளர்,
வீராச்சிமங்கலம், தாராபுரம்)

என்றும்

"பழனியில் குடியிருக்கும் முருகப் பெருமானே
பார்வதி பெத்தெடுத்த செந்தில் வடி வழகா
ஈசன் மகனல்லவா இருவாச்சி பூவல்லவா
பாலக்கா திண்ண மக்கா பாரோட்டி வாங்க மக்கா
ஏலக்கா திண்ண மக்கா ஏரோட்டி வாங்க மக்கா
பத்துத் துளி துளிக்கும் பத்து ஏரும் பூட்டி நிற்கும்
அந்தப் பத்தேரு மின்னால பார்வதி சாலுமிட்டா
எட்டுத் துளி துளிக்கும் எட்டு ஏர் பூட்டி நிற்கும் அந்த
எட்டு ஏர் மின்னால எட்டு ஏர் சாலுமிட்டா
நெல்லு விளைய வேணும் நித்தம் மழை பெய்யனும்
கொள்ளு விளைய வேணும் கொள்ள மழை பெய்யனும்
சோளம் விளைய வேணும் சொகுசு மழை பெய்யனும்
பாசி போல் மின்னல் மின்ன
பவளம் போல் கால் இறங்க
ஊசி போல் மின்னல் மின்ன
உதயம் போல் கால் இறங்க
இந்த மானகிரி ராசாவே
மழை பேஞ்சா ஆகாதோ - இந்தச்
சோனகிரி பெண்டுக எல்லாம்
சோத்துக்கு அழுகுறோமே
சோறு சோறு என்று சொல்லி
சோம்புதே மக்கள் எல்லாம்
கஞ்சி கஞ்சி என்று சொல்லி
கதறுதே மக்கள் எல்லாம்
கூழு கொதிய வேணும்
குழந்த பசி ஆற வேணும்
மாவு கொதிய வேணும்
மக்க பசி ஆற வேணும்

(இராசலட்சுமி (55) தேவேந்திர குல வேளாளர்,
சிங்காநல்லூர், கோவை)

இப்படியாக மழை வேண்டிப் பாடும் மள்ளர்த்தியர்களின் மழைப் பாடல்களில் உலகைப் புரக்கும் மழை வேண்டுதலை வரமாக வேண்டுவதைக் காண்கின்றோம். காரணம் மருத நிலத்து வாழ்க்கை உலகைப் புரக்கும் நெல்லை விளைவித்துக் கொடுக்கும் வேளாண் வாழ்க்கை ஆகும். நெல் விளைய மழை வேண்டும் அதனால் நெல் விளைவிக்கும் ஆற்றல் படைத்த மருதத் திணைக்குரிய உழத்தியர்கள் மழை வேண்டி இறைவனை வழிபடுதல் பல பாடல்களாக இவர்களிடம் வழக்கிலிருக்கின்றன. இங்கு புறநானூற்றுப் பாடல் குறிப்பிடும்.

"நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"

(புறநானூறு, பா. எண் 186)

என்பதற்கேற்ப நெல்லையும், நீரையும் உண்டாக்கி மன்னனின் கடமைக்குத் துணை செய்யும் மருதநில உழத்தியர்களைக் காண்கின்றோம். இவ்விடத்தில் உழத்திப்பாட்டின் இலக்கணத்தை நினைக்க. மன்னனின் கடமைக்குத் துணை செய்யும் மருதநில உழத்தியர்களைக் காண்கின்றோம். மன்னனை வாழ்த்தி வயல் வேலைகளின் வன்மைகளைத் தெரிந்த உழத்திப் பெண் பாடும் பாட்டு உழத்திப் பாட்டு என்பதை மேற்கண்ட பாடல்கள் உறுதிப்படுத்தும்.

## *மழை வேண்டும் வளமைச் சடங்கு*

மழை வேண்டிப் பாடும் உழத்திப் பாடலில் மழை வந்தவுடன் தேவேந்திரர்கள் கொழுவினைத் தயார் செய்து ஏரில் இணைத்து மாடுகளை உழவுக்குத் தயார் செய்து உழவு செய்தல் வரை படிப்படியாக வர்ணிக்கப்படுகின்றன. கொங்கு நாட்டில் வயலில் வேலை தொடங்கும் முன் மல்லாண்டை எனும் வளமை தரும் தெய்வத்திற்கு வழிபாடு செய்த பின்னரே உழவினைத் தொடங்குவர். இதே போன்று அறுவடையின் போதும் மல்லாண்டை வழிபாடு நடைபெறும். இந்த மல்லாண்டை சாமிக்கு வழிபாடு பள்ளு இலக்கியங்களிலும குறிக்கப்படுகின்றது. இதே வள வழிபாடு, "பரிபாடலில் மருதநில மக்களால் மழை வேண்டிச் செய்யும் சடங்காகக் காணப்படுகின்றது. சங்கு, நண்டு, இறவு, வாளை போன்றவற்றை வையையில் இட்டனர். விளைக! பொலிக! எனக் கட்டளை இட்டனர். இவ்வாறு சங்கை நதியிடல் தொத்து மந்திரமாக (Contagious Magic) மழை வேண்டிச் செய்யப்பட்டது. தொடர்பு கொண்டிருக்கும் இரு பொருள்களிடையே நிரந்தரத் தொடர்பு இருக்கும் என்பது தொத்து மந்திரமாகும். நீரோடு நெடுநாள் தொடர்பு கொண்டிருந்த சங்கு, சிப்பி போன்ற பொருள்களுக்கு நீரை

வரவழைக்கும் இயல்பு உண்டு என்ற நம்பிக்கையை இங்கு காணலாம். இவற்றை ஆற்றில் இட்டால் ஆற்றில் நீர் பெருகும்; ஆற்றில் நீரைப் பெருக்க மழை பெய்யும் என நம்பினர்... மீனினம் பெருக வேண்டும் என்பதற்காக ஒத்த மந்திரமாக (Imitative Magic) நண்டு, இறவு, வாளை போன்றவற்றை நதியிலிட்டுச் சடங்கு செய்தனர். ஏற்பட வேண்டிய விளைவும், செய்யப்படுகின்ற செயலும் ஒத்திருக்குமானால் ஒத்த மந்திரம்" என்பர். (கா. சுப்பிரமணியன், சங்காலச் சமுதாயம், பக் 18-19)

இதே மந்திரப் பாடலும், மந்திரச் செய்கையும் உழத்தியர் பாடும் இன்றைய பாடல்களிலும் காணப்படுகின்றன. பொன்னால் ஆன நண்டுகள், நத்தைகள், தவளைகள், மீன்கள் எல்லாம் கொண்டு வந்து நதியிலிட்டு வழிபாடு செய்வதை பாடல்கள் குறிப்பிடுகின்றன. இப்பாடல் வரிகள் வருவாறு

"இடி இடிக்க மழைபொழிய
இரு கரையும் தண்ணிவர
..........................................
பொன்னால் நண்டுகளைக்
கொண்டு வந்தாரு தேவேந்தரு
பொன்னால் மீனுகளைக்
கொண்டு வந்தாரு தேவேந்தரு
பொன்னால நத்தைகளை
பொன்னால தவக்களையைக்
பொன்னால மாடுகளைக்
கொண்டு வந்தார் தேவேந்திரரு
பொன்னால பச்சத்தாளை
பொன்னால பெரிய கிச்சடி
கொண்டு வந்தாரு தேவேந்திரரு
பொன்னால நெல்லுகளை
பொன்னால பெரிய கிச்சடி
கொண்டு வந்தாரு தேவேந்திரரு

(கருப்பாயம்மாள் (50) தேவேந்திர குல, வேளாளர்
இராமநாதபுரம், கோவை - 641 045)

இப்பாடலில் முதலில் இடம் பெறும் மழை வேண்டும் வருணனைகளை அடுத்து, நதியில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது. இதனைச் செய்தவன் தேவேந்திரன் (இந்திரன்) இவனே பின்பு நதியில் மீனையும், நண்டுகளையும், தவளைகளையும், நத்தைகளையும் கொண்டு வருகின்றான் என்கின்றது பாடல்வரிகள். மழை பெய்து வெள்ளம்

வந்தால் நண்டு, மீன் தவளைகள் அனைத்தும் பெருகிவிடுதல் ஓர் யதார்த்தம். இந்த யதார்த்தம் கட்டாயம் நடந்தாக வேண்டும் என்பதை நமது மந்திரப் பாடலால் கட்டளையிடுகின்றாள் மருதநில உழத்திப் பெண். இந்த மாதிரியான ஒரு மழை வேண்டும் பாடல் பேரூர் இந்திர விழா எனும் நாற்று நடவுச் சடங்கின் போதும் பாடப்படுகின்றது.

அப்பாடல் வருமாறு,

"சந்திரரே சூரியரே சாமி பகவானே
இந்திரனை நோக்கி எடுத்தேன் இள முடியை (நாற்று)

..............................................................................

இளமுடி வாடாம எங்குரலும் மங்காமே
தேவேந்திரமார்கள் சேர குலவையிடுங்கள்
தேவேந்திர ராஜனுக்கு

..............................................................................

இந்திரனை நோக்கி எடுத்தேன் இளமுடியை
இளமுடி வாடாமே எங்குரலும் மங்காமே
சிறுமணலாம் காரிமா கற்பூரம் நம்ம
நல்லதொரு மாரிக்கு என்னென்ன
வெகுமானம் வெத்தலை பொட்டி எடுத்து
வீதியிலே வைத்து வேணுமின்ன பொங்கலுக்கு
தாழமிட்டு வாராங்க சமயம் கலையாமே
மாமலையெல்லாம் தண்ணி வர தண்டொதுங்கி
தடியொதுங்கி வருகுதாம் காவேரி
கெண்டை மீன் வாய் திறக்க வருகுதாம் காவேரி
ஆறால் மீன் வாய்திறக்க
வருகுதாம் காவேரி
யாருக்குன்னு வாய்திறக்க
பட்டுக் கொடை பிடித்த
பாண்டிய ராசனுக்கு வாய் திறக்க
முத்துக் கொடை பிடிக்க முதலைக்கு வாய்திறக்க
என் ஜன்னலுக்கு நீர் போக்கி
என் தேவ தேவந்திரனுக்கு வாய்திறப்பேன்
ஊரி போல் மின்னல் மின்னி
உடயம் போல் கால் இறங்கி
பாசி போல் மின்னல் மின்னி
பத்து துளிதுளித்து வருகுதாம் காவேரி"

(மாரியாயி (95) தேவேந்திர குல வேளாளர்,
சொக்கம்புதூர், கோவை)

இப்பாடலில் மழை வருவதும் காவேரியில் வெள்ளம் பெருக்கெடுத்து ஒடுவதும் தங்களது குல முதல்வனான இந்திரனின் ஆணையால்தான் என்கின்றாள் இம்மருதநில உழத்தி. காவேரியில் மீன்களும் முதலைகளும் வாய் திறந்து புது வெள்ளத்தைக் குடிக்கின்றது. இவ்வாறான கற்பனை மழை கட்டாயம் வந்துவிடுமென்ற நம்பிக்கையில் செய்யப்பட்டதாகும். நெல் நாற்றை கையிலெடுத்துக் கொண்டு குரவையொலி எழுப்பி மழைவேண்டி தனது குல முதல்வனான இந்திரனை வேண்டும் மள்ளத்தியரை இப்பாடலில் நாம் பார்க்கின்றோம். மள்ளர்களும், மள்ளத்தியர்களும் வயலில் இறங்கி மழை வேண்டி இந்திரனை வேண்டினால் மழை கட்டாயம் வருமென்பது நம்பிக்கை. இதே நம்பிக்கையைப் பள்ளு நூல்களிலிலும் பேரூர்ப் புராணத்திலும் காண முடியும். இவ்வாறாக மழை வேண்டிப் பாடும் பாடல்கள் இம்மக்கள் பாடும் உழத்திப் பாடல்களில் நிறையவே காணக்கிடக் கின்றன.

## *ஏர் மங்கலப் பாடல்கள்*

உழவர் தமது உழவுத் தொழிலைத் தொடங்கும் முன்னர் ஏர்மங்கலம் பாடினர். மேலும் தொல்காப்பியம் வாகைத் திணையின் துறைகளுள் ஒன்றாக ஏர்மங்கலத்தைக் குறிப்பிட்டு, உழவர்களின் வாழ்க்கை, பாடல் பொருளாக அமைவதற்கும் ஏற்கனவே வழி வகுத்துள்ளது. இந்த ஏர் மங்கலப் பாட்டின் வளர்ச்சி நிலையே உழத்திபாட்டும், கம்பர் பாடியதாகச் சொல்லப்படும் ஏரெழுபது முதலியன ஆகும். பள்ளு நூல்களில் ஏர்வகைகளையும் நெல்வித்து வகைகளையும் மாட்டு வகைகளையும் சொல்லிய பின்னர் பொன்ஏர் பூட்டுவதற்கு நல்லநாள் பார்த்து உழவு செய்தனைக் காண்கின்றோம். இந்த இலக்கியப் பாடல்கள் அனைத்தும் மள்ளர்களிடம் வழக்கிலிருந்தே ஏர் மங்கலப் பாடல்களிலிருந்தே பள்ளு நூல் புலவர்களால் எடுத்தாளப்பட்டுள்ளது என்பதை இங்கே நினைய வேண்டும். இம்மள்ளர்கள் பாடும் ஏர் மங்கலப் பாடல்கள் வருமாறு.

"சந்தனக் கலப்பை வெட்டி தேவேந்திரன் மகனே-அவன்
சரிபார்த்து மேழி செய்வான் தேவேந்திரன் மகனே-அவன்
குங்குமக் கலப்பை வெட்டி தேவேந்திரன் மகனே-அவன்
கோளாறா மேழி செய்வான் தேவேந்திரன் மகனே
ஏரிக்கரையோரத்திலே தேவேந்திரன் மகனே-அவன்
ஏர்க்கலப்பை பூட்டையிலே தேவேந்திரன் மகனே
கூடைப் பெட்டி தானெடுப்பாள் தேவேந்திரன் மகளே-அவள்

கூட நின்று விதை விதைப்பான் தேவேந்திரன் மகனே
கச்சை வரிந்து கட்டி தேவேந்திரன் மகனே-அவனே
கலப்பையைக் கையில் பிடிப்பான் தேவேந்திரன் மகனே
கலப்பை கையில் பிடிப்பான் தேவேந்திரன் மகனே-அவன்
பக்குவமா நிலத்தை உழுதிடுவான் தேவேந்திரன் மகனே
(ஐ. முத்தம்மாள், தேவேந்திர குல வேளாளர்,
வீராச்சிமங்கலம் தாராபுரம்)

என்றும்,

"பொன்னால கொழுவுகளை
எடுத்து வந்தார் தேவேந்திரரு
பொன்னால ஏரும் மேழிகளைக்
கொண்டு வந்தாரு தேவேந்திரரு
பொன்னால கருவத்தடி
எடுத்துவந்தார் தேவேந்திரரு"
(கருப்பாயம்மாள், முதற்காட்டியபடி)

என்றும்

"சந்தனக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
இந்தச் சாதிலிங்க நாத்தெடுத்து பள்ளி நடுவாள்
குங்குமக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
குபேந்திரன் நாத்தெடுத்து பள்ளி நடுவாள்"
(மாரியாயி, முதற்காட்டியபடி)

இவ்வாறாக மருதநில வேளாண் மக்களிடம் வழக்கிலிருக்கும் ஏர்மங்கலப் பாடல்கள் தமிழகம் முழுவதும் பாடப்படுவதாகும். இது கருதியே இவர்களை ஏருடன் பிறந்தவர்கள் என்று இவர்கள் குறித்த தொன்மங்களும் வரலாறுகளும் தெரிவிக்கின்றன. இன்றும் ஒவ்வொரு மள்ளர் வீட்டிலும் ஆறு, ஏழு என்ற எண்ணிக்கையில் கலப்பைகள் இருப்பதைக் காணமுடியும். ஏரின் எண்ணிக்கையைப் பொருத்தே மள்ளரின் செல்வச் செழிப்பு கணக்கிடப்படும். குறைந்தது ஓர் ஏராவது இருப்பவரே மள்ளர் என்று பெயர்பெறுவார் என்ற நிலையும் கிராமங்களில் இருந்து வருகின்றது. இது கருதியே "ஏரும் போரும் எங்கள் வாழ்வு" என்ற பொது வழக்காறும் இவர்களிடம் வழக்கிருக்கின்றது என்றும் கூறலாம். இதனை உறுதி செய்வதாக பூச்சியம்மன் வில்லுப்பாடலில் வரும் இம்மக்கள் குறித்த வர்ணனை அமைகின்றது.

"இஷ்டமுடன் வாழ்ந்து வந்தார்
இந்திர குலப் பண்ணையர்கள் (பண்ணையார்)

ஒயிலான் உமையாள் என்று
உண்மையுடன் வாழ்ந்து வாரார்
தேவேந்திர குல மதிலே
வாசமுள்ள ஊரதிலே
வாழ்ந்து வரும் நாளையிலே
ஆளேர் விவசாயங்கள்
அழகுடனே தானடக்கும்
ஏழேர் விவசாயங்கள்
இன்பமுடன் நடக்குதய்யா"

(ஆ. சிவசுப்பிரமணியன், பூச்சியம்மன்
வில்லுப்பாட்டு ப. 48)

சொந்தமாக 7 ஏர் வைத்து உழுவது செல்வச் செழிப்பின் குறியீடாக கூறப்படுகிறது. ஒரு ஏர் 8 மரக்கால் (64 செண்ட்) நிலப்பரப்பை உழும். 7 ஏர் 64 X 47 = 448 செண்ட் நிலப்பரப்பை அதாவது 4 ஏக்கர் 48 செண்ட் உழும்.

## *விதை விதைப்புப் பாடல்*

தேவந்திர குல முதல்வன் தேவலோகத்திலிருந்து நெல்வித்து வகைகளையும் பிற நஞ்சைப் பயிர்களையும் பூமிக்கு கொண்டு வந்ததாக இம்மக்கள் குறித்த பல தொன்மக் கதைககளும் கல்வெட்டுச் சான்றுகளும் பள்ளு நூல்களும் தெரிவிக்கின்றன. இம்மக்களின் திருமணத்தில் பாடப்படும் மங்கல வாழ்த்துப் பாடலில் இவர்களின் தோற்றம் குறித்த வர்ணனை "தேவேந்திரர் வர்ணிப்பு" எனும் பெயரில் பாடப்படுகின்றது. இப்பாடல் இம்மக்களின் வேளாண் வாழ்க்கையை ஒரே மூச்சில் சொல்லி முடிக்கும் மிக உன்னதமான ஒரு தொன்மப் பாடலாக (பழம்பாடல்) விளங்குவதைக் காண முடியும். அப்பாடல் வருமாறு

"தேவாதி தேவர்களான
தேவேந்திரச் சாதியார்
விருதுகளாவது
வைகையில் உதித்து
வருணன் பொழிந்து
ஈஸ்வரி தேடி இருளில் நடந்து
கூவிய சத்தம் குமரனை நோக்கி
வாரி எடுத்து வள்ளலை அணைத்தவரான
சேத்துக்கால் செல்வரான
செந்நெல் முடிக் காவலரான

கொத்துக்கு முத்து கொட்டி அளந்தவரான
முத்தளக்கும் கையாதி பரனே
மூன்று கை குடையாதி பரனே
பள்ளனும் பள்ளியும்
காலினால் உழப்பிய செந்நெல்லை
தேவர்கள் பாலால் அமிர்தம் பொழிவராம்
கொட்டுடன் கோல மேழி கலப்பை
நெட்டுடன் பரம்பு சங்கிலி
நேரான கால் கயிறுடன்
மொட்டை வெள்ளானை ஏறி
தெய்வ குலத்தில் தேவரிடத்தில் (மேலுலகம்)
இஞ்சி எலுமிச்சை இனிய பலாவும்
வெள்ளரிக் கொடியும் வேனாமாமரமும்
சந்தனமும் கமுகம் சாதிலிங்கமும்
தென்னை பொன் உலக் கோலும்
பூத்தாமரையும் 4448 நெல் விதையும்
யானைவால் மயிரினால்
மூக்கணாங் கயிர் கொண்டு
கோர்த்து நூலேணி வழியாக
பூலோகம் இறங்கி
ஓடையை குறுக்காட்டி
ஏரிகள் போட்டு
வாகனப் பூமியை வயல்களாகச்
சேர்த்து உழுது விதைத்து
வேளாண்மை செய்து
அன்னதானம், சொர்னதானம்
வஸ்திரதானம், கோதானம்
பூதானம், என்று சொல்லப்பட்ட
32 தானதர்மம் செய்யப்பட்ட வருமான
நம் தேவர்களுக்கெல்லாம்
இரண்டு பொண்டாட்டி என்றும்
தேவேந்திரரிடத்தில்
நடனமாடும் பெண்களை
நாத்துநட அழைத்து
சேத்தை அள்ளி மேல் போட்டு
தேவர்களுக்கு ஆகாது என்று
இனி மண்வெட்டி கொண்ட
மலை தகர்த்தும் கண்ட ரானாலும்

மகா வெற்றியினாலும்
மலை கலங்கினாலும்
மனங் கலங்காதாவராயினும்
வள்ளக் கொடியில் ஈஸ்வரன்
வேர்வைத் துளியில் துள்ளிப் பிறந்தவரான
இனி வெள்ளானை வெள்ளைக் குடை விசிறி
வெஞ்சாமரை கொண்ட வருமான
இனி மங்கலம் பாடுவதற்கு
வரம் தரும் தேவர்களே
கல்யாண சிறப்பை
கவனமுடன் கேட்பீர்கள்

..........................................................

(சா. பார்த்திபன் (30), தேவேந்திர குல வேளாளர்,
தளவாய்பட்டணம், தாராபுரம் வட்டம், தொகுத்தவர்
கணபதி குடும்பனார்)

இப்பாடலில் தேவேந்திர குல மக்களின் வேளாண் வாழ்க்கை வர்ணிக்கப்படுகின்றது. காடு கண்டு கழனியாக்கி குளம் வெட்டி, விதை கண்டு வேளாண் செய்த விதம் தங்களின் குலப் பெருமையாகப் பேசப்படுகின்றது. இதே வர்ணனையும் குலச் சிறப்பும் போடி பகுதியை நாயக்கர் ஆட்சிக்கு முன்பு ஆண்ட வீரப்பகிழான் குடும்பனாரின் கதைப்பாடலிலும் இடம் பெறுவதைக் காண முடியும்.

"மஞ்சி கொஞ்சும் மேற்கு மலை
மலையாள மேற்றிசை சாரலுமே
கொட்ட குடி மலைதனில் முகில்மோதி
குதித்துத் திரண்டு வரும் வெள்ளம்
அணையும் குளம் நிரப்பி
அடங்கா வாய்க்கால் எழுப்பி
மழவரும் உழவருமே
உழுது சம்பா நெல் விதைச்சு
தங்கமணி குன்று மணி
தாளடிச்ச சம்பா நெல்லு
சீமைக்குப் போகும் சீரகச் சம்பா
அரியரியாய் நட்டு வச்சு
ஆயிரமாயிரம் மாடு பூட்டி
அம்பாரமாய் நெல் அடிச்சு
ஆயிரம் வேலி நஞ்ச புஞ்ச கட்டி
அனுதினமும் அன்னதானம்

ஆக்கிப் படைச்ச காலாடியார்
பார் புகழும் பாண்டியராம் எங்குலம்

(செ. தமிழ்ச்செல்வன், நாயக்கர் ஆட்சியினால் வீழ்த்தப்பட்ட தேவேந்திரர்களின் வீர வரலாற்றுக் கதைப் பாடல்கள், தமிழர் பண்பாட்டு வரலாறு பக் 251 : 259)

இப்பாடலிலும் அணை, குளம், நெல் வேளாண்மை கண்ட குலம் தேவேந்திர குலமென்று திரும்பத் திரும்பச் சொல்லப்படுவதைக் காண்கின்றோம். நெல் விதைக்கும் போது மள்ளத்தியர்கள் பாடும் பாடல் வருமாறு,

"பள்ளிமக பள்ளி தெய்வேந்திரப் பள்ளி
மம்பட்டி தோளிலிட்டி மட தொறக்கப் போனாள்
தான் போய் வெள்ளம் தனியே புறப்படவே
அரசச் சம்பா பேர்பாதி நீர்ச்சம்பா பேர் பாதி
பள்ள மகன் பள்ளன் தெய்வேந்திரப் பள்ளன்
சம்பா விதையெடுத்து சரியான நேரம் பார்த்து
வீசி எறிஞ்சான் வீச்சுக்கு ஏழுவிதை
அவன் தெய்வேந்திரப் பள்ளன்"

(இருளாயி, 90, தேவேந்திர குல வேளாளர், போலி பட்டி, உசிலம்பட்டி வட்டாரம், மதுரை மாவட்டம்)

என்றும்

ஆத்தூறு சிக்கடிச் சம்பா அல்லிலே லே லோ
அழகான நெல்லெடுத்து தில்லாலே லே லோ
அளவுடனே விதை விதைப்பான் தேவேந்திரன் மகனே
கருங்குருவை நெல்லெடுத்து தேவேந்திரன் மகனே-அவன்
கணக்கா விதை விதைப்பான் தேவேந்திரன் மகனே
நெல்லூருச் சம்பா நெல்லெடுத்து தேவேந்திரன் மகனே- அவன்
நேர்த்தியான விதையெடுத்து தேவேந்திரன் மகனே
பட்டம் பார்த்து நெல் விதைப்பான் தேவேந்திரன்-மகனே
பக்குவமாய் நாற்று எடுப்பான் தேவேந்திரன் மகனே

(ஐ. முத்தம்மாள், முறக்காட்டியபடி)

இவ்வாறு கழனியில் நெல் விதைக்கும் திறன் உழத்தியர்களின் உழத்திப்பாடல்களில் பெரிதும் பேசப்படுவதைக் காண முடியும். இவ்வாறாக நாற்று நடுதல், களையெடுத்தல், கதிரறுத்தல், நெல் அளத்தல் முதலிய வேளாண் தொழில் திறன்களும் பாடல்களாக இம்மக்களால் பாடப்படுகின்றன.

களையெடுத்தலும், கதிர் அறுத்தலும், உரம் போடுதலும் வருமாறு பாடப்படுகின்றன.

களையெடுத்துப் பயிர் வளர்ப்பாள் குடும்பனார் பொண்ணு -
அவள்
கண்டிப்பாக உரமும் போடுவாள் தேவேந்திரன் மகளே
நெல்லும் விளைந்திடுமாம் அல்லிலே
நேர்த்தியாக கதிராகுமாம் தில்லாலே
கருக்கறுவாள் கையிலெடுத்துத் தேவேந்திரப்பெண்-அவள்
கால் கொலுசு சலசலங்க தேவேந்திரப் பெண்ணே
கதிரு அறுத்து குவித்திடுவாள் தேவேந்திரப் பெண்-அவள்
கட்டுக்கட்ட வந்திடுவான் தேவேந்திர மகனே"

(ஐ. முத்தம்மாள்)

என்றும்

"நெல்லுக் கதிரறுத்து
நேரம் பார்த்து கட்டுக்கட்டி
தூக்கிவிடு அந்த புள்ள
தூரம் தொல போற கட்டு"

என்றும், நெல் அறுத்துக்கட்டுக் கட்டி களத்திற்குக் கொண்டு போய் சேர்ப்பது வரை பாடப்படும்.

நெல்லடித்தலும் நெல் அளத்தலும் நெல்லைக் களத்தில் அடித்துத் தூற்றி அளந்து மூட்டை போட்டு வண்டிகளில் ஏற்றி விடும் வரை அச் செயல்களை வர்ணித்துப் பாட்டுப் பாடும் மரபு காணப்படுகின்றது. இவ்வாறு நெல்களத்தில் பாட்டுப் பாடும் போது நெல் வேளாண்மையின் தொடக்கம் முதல் முடிவுவரை பாடுவது மரபு. அவ்வகையான ஒரு எளிமையான பாடலை வருமாறு காணலாம்.

"ஏரு உழுதது யாரு - ஏரை
நைசா உழுதது யாரு
வரப்பு வெட்டுனது யாரு - வரப்பை
நைசா வெட்டுனுது யாரு
வாய்க்கா வெட்டுனது யாரு - வாய்க்கால்
நைசா வெட்டுனது யாரு
பரம்பு அடிச்சது யாரு - பரம்பை
நைசா அடிச்சதுயாரு
நாத்து அரிச்சதுயாரு - நாத்தை
நைசா அரிச்சது யாரு
நாத்து நட்டது யாரு - நாத்தை

- நைசா நட்டது யாரு
தண்ணி கட்டுனது யாரு - தண்ணியை
நைசா கட்டுனது யாரு
களை எடுத்தது யாரு - களையை
நைசா எடுத்தது யாரு
கதிரு அறுத்தது யாரு - கதிரை
நைசா அறுத்தது யாரு
கதிரு செமந்தது யாரு - கதிரை
நைசா கட்டுனது யாரு
கதிரு அடிச்சது யாரு - கதிரை
நைசா அடிச்சது யாரு
நெல்லு தூத்தினது யாரு - நெல்லை
நைசா அளந்தது யாரு
சாக்கு பிடிச்சது யாரு - சாக்கை
நைசா பிடிச்சது யாரு
சாக்கை மூட்டுனது யாரு - சாக்கை
நைசா மூட்டுனது யாரு
சாக்கை கொப்பரை வாயில் மூட்டி - மூட்டையை
மாட்டு வண்டியில் ஏத்தி

(பேச்சியம்மாள் (45) தேவேந்திர குல வேளாளர்,
போலிபட்டி, உசிலம்பட்டி, மதுரை மாவட்டம்)

இப்பாடல் நெல் வேளாண்மையின் தொடக்கமான ஏர் உழுதல் தொடங்கி, வரப்பு வெட்டுதல், வாய்க்கால் செய்தல், பரம்பு அடித்தல், நாற்றுப் பறித்தல், நாற்றைச் சுமத்தல், தண்ணீர் பாய்ச்சுதல், களையெடுத்தல், கதிரு அறுத்தல், கதிரைக் கட்டாகக் கட்டிச் சுமத்தல், கதிரை அடித்தல், நெல்லைத் தூற்றுதல், நெல்லைச் சாக்கில் மூட்டுதல், நெல் மூட்டைகளை வண்டியில் ஏற்றுதல் வரை மிக எளிமையாக வர்ணிப்பதைக் காண்கின்றோம். இந்த இலக்கிய உத்தி கைதேர்ந்த ஒரு உழத்திப் பெண்ணால்தான் முடியும். அதிலும் கற்பனை வளமிக்க ஒரு பெண்ணால்தான் முடியும் என்பதை நாம் இங்கே நினைய வேண்டும். இம்மக்களிடம் வழக்கிலுள்ள ஏர்மங்கலப் பாடல்கள், உழத்தி பாடல்களின் தாக்கம் தமிழ் இலக்கியப் பரப்பு முழுவதிலும் நீக்கமற நிறைந்திருப்பதைக் காண முடியும். இவ்வுழத்திப்பாடல்களை உள்வாங்கிக் கொண்டே பள்ளு இலக்கியங்கள் தோன்றின. ஆனால் இப்பாடல்கள் குறிப்பிடும் உழவின் பெருமை பேசாது உழவர்களை ஏசும் ஏசல் இலக்கியமாகிப் போனதை தமிழ் இலக்கிய வரலாறு நமக்குக்

காட்டத் தவறவில்லை. நாட்டுப்புறப் பாடல்களில் காணப்படும். மிகை யுணர்வுகள் அப்பாடல்கள் வழக்கிலிருக்கும் இனத்தின் பண்பாட்டைப் பிரதிபலிக்கின்றன என்றும் ஒவ்வொரு பண்பாட்டிற்கும் ஓர் உள்ளொருமையும் (Inner harmonies) வெளியீட்டு முறையும் (Excpression Style) உண்டு என்றும் கூறும் மானுடவியல் கோட்பாட்டின்படி, மள்ளர்களிடம் வழக்கிலுள்ள உழத்தியர் பாடல்கள் இம்மக்களின் வேளாண் பண்பாட்டினைப் பிரதிபலிக்கின்றன என்பதை இக்கட்டுரை உறுதி செய்கின்றது.

OOO

(இக்கட்டுரை இந்தியப் பல்கலைக்கழகம் தமிழாசிரியர் மன்றம் சார்பில் நடந்த 30ம் கருத்தரங்கில் மே 26, 27 1999ம் ஆண்டு படித்தளிக்கப்பட்டது ஆகும்.)

# 11. நெல் சார்ந்த கைவினைக் கலைப் பொருட்கள்

நாட்டுப்புறக் கைவினைக் கலைகள் என்பவை பண்பாடு மற்றும் மரபு சார்ந்தவை ஆகும். நெல் இன்றைய நவீன உலகில் பல்வேறு கலைப் பொருட்களில் இடம் பெற்றாலும் இக்கட்டுரை நெல் வேளாண்மையை உயிர்மூச்சாகக் கொண்டு வாழும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களிடம் வழக்கிலுள்ள நெல் சார்ந்த கலைப் பொருட்கள் இம்மக்களின் சடங்கியல் வாழ்க்கையிலும் வழிபாடுகளிலும் எவ்வாறு இடம் பெறுகின்றன என்பதை சுருக்கமாக அறிமுகம் செய்ய முயல்கின்றது. இக்கட்டுரை கோவை, திண்டுக்கல், மதுரை மாவட்டங்களைக் களமாகக் கொண்டு விளங்குகின்றது.

### *நெல்லின் மக்கள்*

மருதநில மக்களான மள்ளர்கள் நெல்லின் மக்கள் என்றும் செந்நெல் முதுகுடியினர் என்றும் ஏருடன் பிறந்தவர்கள் என்றும் மழையின் மைந்தர்கள் (இந்திரனின் மக்கள்) நீராணிக்கர் என்றும் பண்டைக்காலந் தொட்டு இன்று வரை புகழப்படுபவர் ஆவர். இம்மக்களின் முன்னோரே நெல்லினை முதன் முதலில் இப்பூவுலகில் பயிர் செய்தவர் ஆவர். இதனால் நெல் பயிரிட்ட மருத நிலத்தின் உழவர் தலைவன் **வேளிர்** என்று அழைக்கப்பட்டான். இவனே மருதநிலத்தில் முதன் முதலில் அரசைத் தோற்றுவித்து **வேந்தன்** என்று பெயர் பெறுகின்றான், இந்த வேந்தன் பின்னாளில் தேவேந்திரன் ஆனான், இத்தேவேந்திரனின் வழிவந்த மள்ளர் (உழவர்)களே இன்று தேவேந்திர குல வேளாளர் என்று பெயர் பெறுபவர் ஆவர். இம்மக்களின் முன்னோரே நெல்லைக் கண்டு பிடித்தனர் என்பதற்கு பல புராணக் கதைகளும், நாட்டுப்புற வழக்காறுகளும், கல்வெட்டுச் சான்றுகளும் இலக்கியச் சான்றுகளும் சான்று பகர்கின்றன. நெல் வேளாண்மையைச் சிறப்பிக்கும் பொருட்டு எழுந்த உழத்திப் பாட்டு, பள்ளுப் பாட்டு முதலியன அதற்குச் சான்றாகும். செங்கோட்டுப் பள்ளு நூலில் தேவேந்திர குல முதல்வன் மூவேந்தரின் வேண்டுகோளின்படி தேவலோகம் சென்று நெல் பயிரைக் கொண்டு வந்து பூமியில் பயிர் செய்ததாகக் கூறுகின்றது. (பாடல் 203-208) பழனிச் செப்புப் பட்டயமும் அதனையே உறுதி செய்கின்றது. இடைக்காலத்தைச் சேர்ந்த கரிவலம்வந்தநல்லூர்க் கல்வெட்டில்

இம்மரபினர் பாண்டியன் உக்கிரப்பெருவழுதியால் தேவலோகத்தி லிருந்து சென்நெல், கன்னெல், கதலி முதலிய விதைகளுடனும் காளையுடனும் பூமிக்கு அழைத்து வரப்பட்டதாகவும் அவர்கள் ஒரே நாளில் பன்னீராயிரம் கிணறுகளைத் தோண்டி வேளாண்மை கண்டு நாட்டைச் செழிப்பித்ததாகக் கூறுகின்றன. (1. வரலாற்றறிஞர் கே.ஆர். **அனுமந்தன்** ஈராயிரம் ஆண்டுகளுக்கு மேலாக விவசாயத்தை விடாமல் செய்து வரும் ஒரே சமூகம் உண்டென்றால் அது பள்ளர்கள் தான் என்று கூறுவார். 2. கோவை பேரூரிலுள்ள பட்டீஸ்வரர் மள்ளராக மாறி நெல் நடவு செய்ததைக் கூறும் பேரூர் புராணத்தில் இடம் பெறும் பள்ளுப் படலம் இங்கு நினைக்கத்தக்கது. 3. **"நெல்லுவகையை எண்ணினாலும் பள்ளுவகையை எண்ண முடியாது"** என்ற பழமொழியும் **"பள்ளன் வீட்டிலே நெல்லு கிடந்தது மாதிரி"** என்னும் பழமொழியும் இம்மக்களிடம் வழக்கிலுள்ள உழவுத் தொடர்பான பாடல்களும், நெல் அளவைப்பாடல்கள், ஏர்மங்கலப் பாடல்கள் முதலியனவும் இம்மக்களே நெல் வேளாண்மைக்கு உரியவர்கள் என்பதற்குச் சான்றாகத் திகழ்கின்றன.

## *சடங்கியல் வாழ்வில் நெல் பெறும் இடம்*

இம்மக்களின் முதன்மை வேளாண் தானியமான நெல் இவர்களின் பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு சடங்குகளில் இடம் பெறுகின்றது. முற்காலத்தில் குழந்தைகளுக்கு காது குத்துவதே நெல்மணியால்தான் இம்மக்கள் செய்வராம். பெண் பூப்புக்கு வந்தால் அவளிருக்கும் குடிசைக்குள் நிறை நாழி நெல் வைக்கும் வழக்கம் இன்றும் காணப்படுகின்றது. பூப்புக்கு வந்த பெண்ணை நெல் நிரப்பிய கூடையில் அமரச் செய்து அவளைத் தாய்மாமன் கூடையுடன் மூன்றுமுறை தூக்கி தலையில் வைப்பது இன்றும் உள்ளது. இதே போன்று அரசாணிப் பானையில் நெல் நிரப்பி அதனுள் நீருற்றி வைப்பதும் உண்டு. இறப்புச் சடங்கில் இறந்தவரின் பிணத்தருகே நிறை மரக்கால் நெல் வைப்பதும், இறந்து பட்டவரின் மைத்துனர் உறவுடையவர்கள் கோடித்துணியும் நிரை மரக்கால் நெல்லும் கொண்டு வருவதும் இன்றும் உள்ளது. இந்த நெல்லையே கருமாதிக்கு ஆக்கிக் போடப் பயன்படுத்துவதும் காணப்படுகின்றது. மேலும், இறந்தவரின் குழிமேட்டில் பாலூற்றும் சடங்கில் நெல்லையே விதைக்கின்றனர். இவ்வாறு இம்மக்களின் வாழ்வியல் சடங்குகள் அனைத்திலும் நெல் வேளாண் பண்பாடு சார்ந்து வருவதைக் காண முடியும்.

## *வழிபாட்டுச் சடங்குகளில் நெல் சார்ந்த கலைப் பொருட்கள்*

நெல் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்ட இம்மக்கள் நெல் அறுவடைக்கு முன்பு 'நாட்கதிரறுத்தல்' எனும் பெயரில் நல்ல கதிர்களை அறுத்து இறைவனுக்குப் படைத்து வழிபாடு செய்கின்றனர். இச்சடங்கை பள்ளு நூல்களும் குறிப்பிடுகின்றன. நாட்கதிர் என்றால் நல்ல நாளிலே முதன்முதலில் அறுத்த கதிர் என்பதாகும். இதனை வையாபுரிப்பள்ளு,

"நெல் விளைந்தவுடன் பள்ளரெல்லாம்
முழங்கிக் களிப்பேறி
விளைந்து மல்லாண்டப்பனுக்கு
இளந்தையாடு வெட்டி
பொங்கலிட்டு நாட்கதிருங்கொய்துமே
அலகுகதிர்க் கோட்டை வைத்து"

என்று குறிப்பிடும். இங்கு குறிக்கப்படும் அலகு கதிர் என்பது நெற்கதிர் என்பதாகும். கோட்டை என்பது நாட்கதிராகக் கொய்யப்பட்ட அலகுக் கதிர்களை இறைவனுக்குக் காணிக்கையாக்குதல் ஆகும். இதனடிப்படையில் அழகர் கோயில், பழனிமுருகன் கோயில், வீரபாண்டி மாரியம்மன் கோயில் என்றவாறு பல இடங்களில் வேளாண் தானியங்களை இறைவனுக்குக் காணிக்கையாக்குவதைப் பார்க்கமுடியும்.

இவ்வாறு பள்ளு நூல்களில் குறிக்கப்படும் நாட்கதிர் கொய்து இறைவனுக்குப் படைக்கும் வழிபாடு இன்றும் இம்மக்களிடையே வழக்கிலிருக்கின்றது. இறைவனுக்குப் படைக்கும் நாட்கதிர்களை பலவகையான கலைப் பொருட்களாகச் செய்து படைக்கின்ற பழக்கம் இருக்கின்றது. இக்கலைப் பொருட்கள் குறித்து வருமாறு காண்போம்.

### *அலகு கதிர்*

வயலில் நெல் விளைந்தவுடன் அறுவடைக்கு முன்பு கொத்துக்காரர் ஒரு நல்ல நாளில் வயலில் நாட்கதிர் கொய்து அதனைப் பல கலை வடிவங்களில் செய்து கோயில்களில் காணிக்கையாக்குவதை அலகு கதிர் என்கின்றனர். இதனையே கண்ணாடிக் கதிர், கோமாளிக் கதிரென்ற பெயரிலும் அழைக்கின்றனர். இதனைக் கோயில்களில் கட்டி விடுவதை ஒரு விழாவாகவும் பழனி வட்டாரங்களில் நடத்துகின்றனர். அலகு கதிரைப் பெரும்பாலும் கொத்துக்காரர்களே செய்கின்றார்கள். கொத்துக்காரர் என்றால் நெல் வேளாண்மைக்குரிய ஆட்களைத் திரட்டி

வயல்களில் வேலை வாங்குபவர் என்று பெயர். ஒவ்வொரு வயல் அறுவடையின் போதும் இறைவனுக்கென்று ஒரு அலகு கதிர் கட்டப்படும். இதனைக் கட்டுவதற்கான கூலியை வயல் உரிமை யாளரிடமிருந்தே கொத்துக்காரர் பெறுகின்றார். குறைந்த அளவு 4 வல்லம் நெல் கூலியாகக் கிடைக்குமென்கின்றனர். பணமும் பெறுவதுண்டு. அலகு கதிர் செய்தல் என்பது நெல் மணிகளுடன் இருக்கும் கதிரின் தாளினை சடைப் பின்னுவது போன்றோ கயிறு திரிப்பது போன்றோ திரித்து, மணிமகுடம் போன்றோ, பெண்கள் அணியும் காதணி போன்றோ, தேர் போன்றோ, வேல் போன்றோ கட்டிவிடுவது ஆகும். ஈரோடு மாவட்டம், கொடுமுடி என்ற ஊரில் எழுந்தருளியுள்ள அருள்மிகு மகுடேஸ்வரர் சுவாமி சன்னதிக்கு ஒவ்வொரு ஆண்டும் அவ்வூரினைச் சுற்றியுள்ள கிராமத்திலுள்ள விவசாயிகளால் நெல் மணி மகுடம் கட்டப்பட்டு வருகிறது என்பதை அப்பகுதியினைச் சேர்ந்த கொ.செ.ஐயப்பன் என்ற தகவலாளர் தெரிவித்தார்.

அலகு கதிர்களைக் கோவில்களில் கட்டிவிடுவது மட்டுமல்லாமல் இம்மக்கள் தங்களின் வீடுகளிலும் தங்களின் பண்பாட்டுக் குறியீடாகக் கட்டித் தொங்கவிட்டுள்ளனர். பேரூர் பட்டீஸ்வரர் கோயிலில் ஈஸ்வரனுக்கு நெற்கதிரால் ஆன கீரீடம் நெல் அறுவடைக் காலங்களில் இம்மக்களால் செய்து காணிக்கையாக்கப்படுகின்றது. இக்கீரிடத்தைக் காண்கையில் மருத நிலத் தலைவன் தனது நிலத்தில் விளைந்த நெல்லை வேளாண் கள வெற்றியாகக் கருதி தனது தலையில் சூடிய நெற்கதிரால் ஆன மகுடமே பின்பு நிலங்களைப் போரில் வெற்றி பெறுகையில் சூடும் மணிமகுடமாக மாறியதோ என்று கருதத் தோன்றுகிறது.

இவ்வாறு மகுட வடிவில் செய்யப்படும் அலகு கதிரில் ஒரு மூட்டை நெல் வரும் அளவில் கூட கதிர்களைக் கட்டுகின்றனர். இதல்லாமல் வட்ட வடிவிலும் நீள வடிவிலும் பல அலகு கதிர்கள் செய்யப்படுகின்றன. அறுவடை முடிந்த பின்னர் பல்வேறு வயல்களிலிருந்து செய்யப்பட்ட அலகு கதிர்களை ஒரு மூங்கிலில் தோரணமாகக் கட்டி மேள, தாளத்துடன் எடுத்து வந்து கோயில்களில் வைக்கின்றனர். நாட்கதிரிலிருந்து எடுக்கப்பட்ட அரிசியிலிருந்து பொங்கல் வைத்து ஆடு வெட்டி வழிபாடு செய்கின்றனர். இவ்வழக்கம் பழனி மற்றும் பொள்ளாச்சிப் பகுதிகளில் இன்னும் கடைபிடிக்கப்படுகின்றது. இதல்லாமல் பழனி கோயில்களில் நெல்லையே காணிக்கையாக்குவதையும் காணமுடியும்.

மேற்கண்டவாறு விதவிதமான கலை வடிவங்களில் செய்யப் பட்டுள்ள அலகுகதிர்களின் கலை நுட்பங்கள் காண்போரை வியக்க வைக்கும் அழகுடையது. பல அலகு கதிர்கள் பெண்கள் அணியும் நெற்றியணி, காதணி, லோலாக்கு, கழுத்தில் அணியும் முத்து மாலைகள் போன்றும் காணப்படுகின்றன. சீவக சிந்தாமணி கேமஞ்சரியார் கலம்பகத்தில் மருத நில வருணனையாகத் தாமரை மலர் மீது செந்நெல் கதிர் முற்றி கிடந்தது அரங்கிலே ஆடும் ஆடல் மகளிரின் நெற்றியில் சூட்டியுள்ள தலைக்கோலம் எனும் அணிகலன் போன்று இருந்தது என்று குறிக்கப்படுவதை நினைக்க (பாடல் 1442) இன்று பெண்கள் அணிந்துள்ள பல அணிகலன்களின் வடிவம் நெல்கதிர்களை ஒன்று சேர்ப்பதால் உண்டாகும் வடிவழகை ஒத்திருக்கக காணலாம்.

அலகு கதிரை ஊரின் முற்றத்திலுள்ள மரங்களில் வரிசையாகக் கட்டித் தொங்கவிட்டிருப்பதையும் காணமுடியும். இவ்வாறு செய்வதால் ஊர் மந்தையில் கூடி இருப்போர் கண்டு களிப்பதற்கும் குருவிகள், புறாக்கள் போன்ற பறவைகள் இரை உண்ணவும் அலகு கதிர் பயன்படுவதாகச் சொல்கின்றனர்,

மதுரை மாவட்டத்தில் பச்சைக் குச்சியில் குடை போன்று செய்து அதன் மீது நெற்கதிர்களைச் சுற்றி முத்துக்குடை எனும் பெயரில் கோயில்களுக்குக் காணிக்கையாக்கின்றனர். விழாக்காலங்களில் இந்நெல்லை பொங்கல் வைப்பதற்கும் மாவிளக்கு எடுப்பதற்கும் பயன்படுத்துகின்றனர். நெல் ராஜ வெள்ளாமை என்பதாலும் தானியங் களுக்கெல்லாம் ராஜா நெல் என்பதாலும் கோயில்களில் நெல்லைக் காணிக்கையாக்குதல் சிறப்பானதாகக் கருதப்படுகின்றது. மேலும் இந்த முத்துக்குடை எனும் கலைப் பொருளை முத்துத் தோரணம் எனும் வகையில் கோயில் விழாவின்போது தெருக்களில் கட்டுவதும் உண்டு. தெருக்களில் நெல் உதிர்ந்து சீரழிந்து கிடப்பது போன்று நெல் வேளாண்மையும் மிகுதியாகும் என்பது நம்பிக்கை மதுரை மாவட்டங்களில் இவ் அலகு கதிர்களைக் கட்டுபவர் மடையன் ஆவார். இவர் நெல் வேளாண்மைக்குத் தண்ணீர் பாய்ச்சும் பணியினைச் செய்பவர் ஆவார்.

## *நெற்கரகம்*

பழனிப் பகுதியில் வாழும் இம்மக்கள் பழனி முருகனுக்கு நெற்கரகம் எடுத்து வழிபடுகின்றனர். நீர் நிரம்பிய குடத்தின் மேல் நெற்கதிர்களை அழகாகச் சுற்றி வைத்து அதன் மேல் வண்ண நூலால் கட்டுகின்றனர்.

இதன் பின்னர் நெற்கரகமும் நெல்லும் மேள தாளங்களுடன் ஊர்வலமாக எடுத்து வரப்பட்டு முருகன் கோயிலில் காணிக்கையாக்கப்படுகின்றது.

## *முத்து ஆரத்தி*

புதிய திருமணத் தம்பதியரை ஆரத்தி எடுத்து வரவேற்பது தமிழர் வழக்கம். அவ்வகையில் இம்மக்களிடம் உள்ள ஓர் ஆரத்தி வகை முத்து ஆரத்தி ஆகும். இது பித்தளைக் குடத்தின் மீது மாவிளக்கைத் தடவி அதன்மீது நெல்லையும் குண்டு மணியையும் வரிசையாக பதித்து வைப்பது ஆகும். இவ்வாறு தயார் செய்யப்படும் ஆரத்தி முத்து ஆரத்தி எனப்படும். இந்த ஆரத்தி எடுக்கும் பெண்ணுக்கு மணமகன் குறைந்தது ரூ.10 ஆவது கொடுத்தாக வேண்டுமாம். இந்த வகை ஆரத்தி இம்மக்களின் வேளாண் பண்பாட்டைக் குறியீடாக்கிக் காட்டுவதால் இதனை எடுப்பதும் இதனை எதிர் கொள்வதும் சிறந்ததாகக் கருதப் படுகின்றது.

## *அலகு கதிர் காணிக்கை நோக்கம்*

கோயில்களில் 'அலகு கதிர்' செய்து காணிக்கையாக்குவதால் அடுத்த ஆண்டும் இதே போன்று வேளாண் சிறக்குமென்று நம்புகின்றார்கள். மேலும் வேளாண் விளைச்சல் இறைவனின் அருளால் உண்டாவது என்று நம்புவதால் இறைவனுக்கு வேளாண்மையின் முதற் தானியத்தைக் காணிக்கையாக்குகின்றனர். இறைவனுக்கு அலகு கதிர் காணிக்கை செய்யாவிடில் விளைச்சல் பெருகாது என்றும் நம்புகின்றனர். இந் நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்படும் இவ் அலகு கதிர் வழிபாடு நெல் வேளாண் சமூகப் பண்பாட்டுடன் தொடர்புடைய வழிபாட்டுச் சடங்காக அமைவதும் இங்கு கருதத்தக்கது.

## *தொகுப்புரை*

நெல் சார்ந்த பண்பாட்டையுடைய மள்ளரின மக்களிடம் உள்ள 'அலகு கதிர்' எனும் கலைப் பொருட்களின் செய்முறை நுணுக்கங்களில் வடிவங்களில் பல்வேறு கலை நுட்பங்களும் திறன்களும் காணப்படு கின்றன. இந்நெல் சார்ந்த கலைப் பொருட்கள் குறித்த ஒரு பெரிய ஆய்வுக்கு இக்கட்டுரை ஒரு கோடிட்டுள்ளது அவ்வளவே.

## *குறிப்புகள்*

1. தேவ ஆசிர்வாதம், மூவேந்தர் யார்?, ப.11
2. கே.ஆர். அனுமந்தன் தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப்பட்டதே நாயக்கர் ஆட்சியின் பாளையப்பட்டு முறை, தமிழில் பெ. தங்கராஜ், பாட்டாளி முழக்கம். சூன், ப.1993.
3. கச்சியப்பமுனிவர், பேரூர்ப் புராணம், பள்ளுப்படலம்.

○○○

( இக்கட்டுரை மதுரை காமராசர் பல்கலைக்கழகம், நாட்டுப்புறவியல் துறை நடத்திய "கை வினைக் கலைப் பொருட்கள்" எனும் கருத்தரங்கில் டிசம்பர், 16, 17 - 1998 அன்று படித்தளிக்கப்பட்டது. )

# 12. நாட்டுப் புறவியலும் வேளாண்மை அறிவியலும்

வேளாண்மைத் தொழில் மனித சமுதாயத்தின் தொன்மையான தொழில் ஆகும். பண்டைக் காலம் முதல் நேற்றுவரை வேளாண் துறையில் உழவர்கள் பெற்ற நிலைத்த தொழில் நுட்ப அனுபவங்களே இன்றைய வேளாண் அறிவியல் துறைக்கு அடிப்படை ஆகும். இந்த வேளாண் துறையில் ஆறு துறைகள் முதன்மை பெற்று விளங்குகின்றன. அவை 1. உழவியல், 2. மண்ணியல், 3. பயிரியல், 4. விதை நுண்ணியல், 5. நோய் பூச்சியியல், 6. நீர் நுட்பவியல் ஆகும். இத்துறையின் மூலம் வேளாண் மக்களுக்கு செயல் முறைகளாக (Agricultural Practices) உழுதல் (Ploughing) உரமிடுதல் (Fertilisation) களை நீக்குதல் (Weeding) நீர்பாய்ச்சுதல் (Irrigation) பயிர்ப் பாதுகாப்பு (Crop Protection) போன்றவற்றில் கடைப்பிடிக்க வேண்டிய தொழில் நுட்பங்கள் கண்டறிந்து சொல்லப்படுகின்றன.

பண்டைய மக்கள் இயற்கையில் கிடைத்த காய், கனி, கிழங்குகளை உண்டு வாழ்ந்தனர். இயற்கை வளம் குறைந்தபோது அவற்றை உண்டாக்கும் முயற்சியில்ஈடுபட்டனர். தாங்கள் வாழ்ந்த பகுதியில் இயற்கைச் சூழலுக்கு ஏற்பத் தங்கட்குத் தெரிந்த அளவில் பயிரிட்டு வந்தனர். கால்நடைகளைப் பழக்கிப் பயிர்த் தொழிலுக்குப் பயன்படுத்தினர். புதிய கருவிகளை உருவாக்கிப் பயன்படுத்தினர். மழை பெய்யும் பருவங்கள் அறிந்து பயன்படுத்தினர். பருவமழை இல்லாத காலங்களில் நீர் நிலைகளில் உள்ள நீரைப் பயன்படுத்தினர். அவற்றிலும் நீர் குறைந்தபோது குறைந்த நீர்த் தேவையுள்ள பயிர்களைப் பயன்படுத்தினர். ஆறும் குளமும் ஏரியும் வற்றிய போது கிணறுகள் தோண்டி நீர்வளம் தேடினர்!

இத்தகு கடின முயற்சிகள் மேற்கொண்ட போது விதைத்த பயிரோடு வளரும் களையைக் களைய முற்பட்டனர். பயிர் வளர்ந்து அறுவடைக்கு வரும்வரை அவற்றைப் பாதுகாத்தனர். பலமுறைப் பயிரிட்டு நிலம் வளம் குன்றிய போது எருவிட்டுப் பயிர் செய்தனர். பயிர்களை மாற்றி மாற்றிப் பயிர் செய்தனர். இவ்வாறு காலங்காலமாக வேளாண்மைத் தொழில் போற்றப்பட்டு வந்தது. அவற்றுள் நின்று நிலைத்த அனுபங்களே பிற்கால மக்களால் மரபுகள் என்று போற்றப் பெற்றன[2].

இந்த வேளாண் மரபுகள் உழைக்கும் மக்களிடம் வழங்கும் நாட்டுப் புற வழக்காறுகளில் "அனுபவக் கருவூலமாகப்" பதிவு செய்யப் பட்டிருப்பதைக் காணமுடிகின்றது. அதிலும் குறிப்பாக வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழும் மக்களிடம் வழங்கும் வழக்காறுகளில் பெரிதும் வேளாண் பண்பாடும், வேளாண்மை குறித்த பல செய்திகளுமே இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. இக்கட்டுரை தொன்மைக் காலம் முதல் இன்று வரை வேளாண் தொழிலை விடாது செய்து வரும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களிடம் வழக்கிலுள்ள பண்ணைப் பாடல்கள் எனும் உழத்திப் பாடல்களையும், இம்மக்களிடம் வேளாண் தொடர்பாக வழங்கும் நம்பிக்கைகள், சடங்குகள், பழமொழிகள், ஆகியவற்றையும் முதன்மைச் சான்றாக்கி அவற்றில் காணப்படும் வேளாண் தொழில் நுட்பக் கருத்துக்களில் ஒன்றிரண்டை விளக்க முற்படுகின்றது.

## *மழை குறித்த அறிவியல் நம்பிக்கை*

இன்று செயற்கைக் கோள்களும் வானிலை ஆய்வு மையங்களும் மழை வருகையை கணித்துச் சொல்கின்றன. ஆனால் பண்டைய மக்கள் மழை எப்பொழுது பெய்யும் அதற்கான அறிகுறிகள் என்ன என்பதை அனுபவங்கள் வாயிலாகவும், இயற்கையை உற்று நோக்கியதன் வாயிலாகவும் கண்டறிந்துள்ளனர். செம்மறி ஆடுகள் ஒன்றுடன் ஒன்று உரசி மறுகிக் கூட்டமாக அங்கும் இங்கும் ஓடினால் மழை வருமென்பது நம்பிக்கை. இதனை விரித்துச் சொல்லும் விவசாயி மழை வருகைக்கு முன்பு ஈரமான காற்று அடிக்கும் மண்ணில் ஒருவித மணம் வரும் இதனால் ஆடுகள் அங்கும் இங்கும் ஓடும் என்கின்றனர். இந்த மண்ணின் மணத்தை மனிதரும் உணரமுடியும் என்கின்றனர். இப்படி மூக்கால் உணரும் ஆற்றல் இயற்கை சார்ந்த அறிவியல் நுணுக்கமாகும். வோளண் மக்களான மள்ளர்கள் மழை வேண்டி இந்திரனை வழிபடும் முறை பள்ளுப் பாடல்களில் விரித்துப் பேசப்படும். இப்பள்ளு நூல்களில் இடம்பெறும் மழை, குறித்த நம்பிக்கைகள் நாட்டுப்புற வழக்கிலும் வழங்கி வருவதைக் காணமுடிகின்றது. அவற்றில் ஒரு சில

"தட்டான் தாழப் பறந்தால் மழைவரும்"
"தவளை கத்துதல்"
"நட்சத்திரங்கள் அடுத்தடுத்து மின்னுதல்"
"கொம்பு சுற்றிக் காற்றடித்தல்"
"சேற்று நண்டு வளையை அடைத்தல்"

"சூகை எறும்பு குழிவாயில் கரைகட்டுதல்"
"தோகை மயில் மோகமுடன் ஆடல்"
"சிற்றெறும்பு வாயில் இறை கொண்டு போதல்"
"மஞ்சள் வெயில் அடித்தல்"

இது போன்ற நூற்றுக்கு மேற்பட்ட மழை தொடர்பான இயற்கை அறிவியல் சார்ந்த நம்பிக்கைகள் இம்மக்களிடம் வழக்கிலிருக்கின்றன. மழையின் அளவிற்கேற்ப பயிரிடும் முறை குறித்து ஒரு நாட்டுப்புறப் பாடல் வருமாறு குறிப்பிடும்.

"நித்தம் மழை பேஞ்சா
நம்ம நெல்லு பயிரேறும்
சோனை மழை பேஞ்சா
நம்ம சோளம் பயிரேறும்
கம்பி மழை பேஞ்சா
அங்கே கம்பு பயிரேறும்"

என்றவாறு அதிக மழையில் நெல்லும், குறைவான மழையில் சோளமும், சாரல் மழையில் கம்பும் குறைவின்றி விளைவதைப் பாடல் குறிப்பிடுகின்றது. இதனையே இன்னொரு பாடல்.

"நெல்லு விளைய வேணும் நித்தம் மழை பெய்யனும்
சோளம் விளையவேணும் சொகுசு மழை பெய்யனும்
. . . . . . . . . . . . . .
பாசிபோல் மின்னல் மின்ன
பவளம் போல கால் இறங்க
ஊசிபோல மின்னல் மின்ன
உதயம் போல கால் இறங்க
. . . . . . . . . . . . . .
இருட்டாதோ மானம்
இருட்டாதோ வானம் அந்த
பிரட்டாசி மாசம்
பிரட்டாசி மாசம் அங்கே
பேயாதோ மானம்
. . . . . . . . . . . . . ."

என்றவாறு மழையின் வருகையை வர்ணிக்கும் உழத்தியர்கள் புரட்டாசி மாதத்தில் பேய் மழை, ஐப்பசி மாதத்தில் அடை மழை என்றும் தெரிந்து வைத்திருப்பதைக் காணமுடியும். இவ்வாறு இயற்கையின் செயல்பாடுகளைக் கொண்டு மழையின் ஆற்றலையும், வருகையையும் அறிவதன் மூலம் அதற்கேற்ப வேளாண் தொழில் முறைக்கு இவர்கள் தயாராக முடிகின்றது எனலாம்.

## *உழுதலும் உரமிடுதலும்*

நிலத்தின் வளம் அறிந்து பயிரிடும் முறையை நாட்டுப்புற மக்கள் அறிந்திருந்தனர். மண்ணை உழவன் பருவம் தவறாது உழுதும் உரமிட்டும் உருவாக்க வேண்டும். இதனைப் பின்வரும் பழமொழி உணர்த்தும்.

"பொண்ணு பொறக்கலாம் மண்ணு பொறக்காது" என்றும்
"காலப் புழுதி இல்லாதவன் கைமுதல் இழப்பான்' என்றும்
"ஏழுழவு உழுதால் எருப்போட வேண்டா"
"உழவில் பகை எருவிலும் தீராது"
"எரு செய்வதை இனம் செய்யாது"
" உரம் உதவுவது ஊரார் உதவார்"
"குப்பை இல்லாத வேளாண்மை சப்பை"
"குப்பையிலே கோடிப் பணம்"
"ஈரம் போகாமல் எரு வை"
"ஆற்று மண்ணுக்கு வேற்று மண் உரம்"
"ஆடு மிதியாக் கொல்லையும்
ஆளனில்லாப் பெண்ணும் வீண்"
"ஆட்டு உரம் ஓராண்டு
மாட்டு உரம் ஈறாண்டு"
"ஆடு ஊடாக்காடு விளையாது"
"ஆடி வெயில் ஆட்டுக் கிடைக்குச் சமம்"
"ஆடிப் புழுதி ஆவணிச் சேறு"
"எருது குழை இன்றி ஏர்ப் புடிக்காதே"
"அழிஞ்ச பண்ணையத்தை
கொழிஞ்சி வந்து காப்பாத்தும்"

என்றவாறான பழமொழிகள் உழவும், உரமிடுதலும் வேளாண்மையின் இரண்டு கண்கள் என்று உணர்த்துவதைப் பார்க்கின்றோம். இதையேதான் இன்று உழவியல் எனும் வேளாண்மைதுறையும் சொல்கின்றது.

உழுவதில் "அகல உழுவதை விட ஆழ உழுவதே மேல்" எனும் பழமொழி உணர்த்தும் ஆழ உழவால் களைகள் அதிகம் வளராது. ஈரம் தாங்கும், பயிர்கள் வேர்விட்டுப் படரும். கீழ்மண் மேலும் மேல் மண் கீழும் படரும். இந்த உழவே உழவர்களால் இன்றும் போற்றப்படும் உழவாகும். இது கருதியே இம்மக்களிடம் "அழுதிட்டு இருந்தாலும் உழுதிட்டு இரு" எனும் பழமொழியும் இருக்கிறது. பருவ மழையை எதிர்பார்த்து முன்னரே பல முறை உழுவது மரபு. இவ்வாறு செய்வதால் அத்தகைய வயல்கள் ஈரம் தாங்கும். இதனைக் "காலப் புழுதி கடக்க

நிற்கும்" எனும் பழமொழி உணர்த்தும். இந்தக் கால உழவு என்பது ஆடி மாதத்தில் மழை வரும் முன்பு உழுவதாகும். இதனை இம்மக்கள் பொன் ஏர் பூட்டுதல் என்பர். மழை பெய்தாலும் பெய்யாவிட்டாலும் தரிசரித்தல் எனும் பெயரில் இம்மாதம் உழவு செய்யப்படும். இவ்வாறு ஏர் உழுவது இம்மக்களால் ஏர் மங்கலம் எனும் பாடலாக இன்றும் பாடப்பட்டு வருகின்றது.

"சந்தன் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
சாதிலிங்க நாத்தெடுத்துப் பள்ளி நடுவாள்
குங்குமக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
குபேரன் நாத்தெடுத்துப் பள்ளி நடுவாள்"

என்றும்

"பாரக் கலப்பையடா செல்லனுக்குப்
பார மெத்தத் தோணுதடா
வரப்போ தலகாணி - செல்லனுக்கு
வைக்கோலே பஞ்சு மெத்தை"

என்றவாறு கலப்பையின் மேல் கல்லைக் கட்டி ஆழ உழுவதற்காகச் செய்யும் பாரக்கலப்பை உழவு முறையும் பாடப்படுகின்றது. நெல்லு வகையைச் சொல்வது போலவே இம்மக்களிடம் நிலத்திற்கேற்ற ஏர் வகையும் சொல்லப்படும்

"கூழை குடியக்கெடுக்கும்
குட்டைக் கலப்பைக் காட்டைக் கெடுக்கும்"

என்றவாறு குட்டைக் கலப்பை காடு உழ ஆகாது என்று வைத்துள்ளனர். நல்ல மாடு இல்லாமல் உழவு சிறக்காது என்பதை,

"சப்பை மாட்டைத் தள்ளித் தள்ளி
சால் உழுதான் உங்க மாமன்
மொண்டி மாட்டைத் தள்ளித் தள்ளி
மொதல் இழந்தான் உங்க மாமன்"

என்பதான பாடல் வேளாளனுக்கு எருது முக்கியம் என்பதை உணர்த்தும். உழவு வேலை விடிகாலையில் தொடங்கினால் எருதும், உழவனும் களைப்பின்றி வேலை செய்ய முடியமென்பதை

"வெள்ளிக் கலப்பை கொண்டு - சொக்கர்
விடிகாலம் ஏர்பூட்டி
தங்கக் கலப்பை கொண்டு - சொக்கர்
தரிசுழுகப் போனாராம்"

என்றவாறான பாடல் காட்டும்.

கிராமத்து வேளாண் மக்கள் கால்நடைகளின் கழிவாகிய தொழு உரமும் இலை தழைகளாகிய தழையுரமும் பயன்படுத்துவதை மரபாகக் கொண்டிருந்தனர்.

"சம்பா பயிர் விதைக்கக் கழனியிலே
தலையெருப் போட்டு வச்சேண்டி
கட்டழகு ராசிக்காரி - நல்ல
கெட்டி முத்துப் பேச்சுக்காரி"

என்றும்

ஆட்டான் தொழுத் திறந்து
ஆட்டெருவைக் கொண்டு வந்து
மாட்டான் தொழுத் திறந்து
மாட்டெருவைக் கொண்டு வந்து
காட்டுக்கு உரம் போட்டோம்
கழனிக்கு பதம் சேர்த்தோம்
தோட்டம்தொர வெல்லாம்
தொழுவுரம் நிதம் சேர்த்தோம்.
கொழுஞ்சிக் குழை புடுங்கி
கொழுத்த வண்டிப் பாரமேத்தி
கொழுஞ்சிக் குழை வாடினாலும்
கொழுந்தி முகம் வாடலியே"

என்றவாறு தொழுவுரம், தழை உரம் போன்றன வேளாண்மைக்குச் சிறந்த இயற்கை உரம் என்பதைப் பாடல்கள் வலியுறுத்துகின்றன. இங்கே பாடலில் குறிக்கப்பட்ட கொழுஞ்சியின் வேர் முடிச்சுகளில் அதிகமாக நுண்ணூட்டச் சத்து இருப்பதை இன்றைய வேளாண் அறிவியலும் ஏற்பதைப் பார்க்க முடியும். மேலும் இன்றும் கிராமங்களில் வேளாண் நிலங்களில் கிடை அமர்த்தல் எனும் முறை இருப்பதைத் காணமுடிகிறது. இதனை ஆடு மிதியாக கொள்ளை ஆகாது எனும் பழமொழி உணர்த்தும். இந்த மரபு சார்ந்த வழக்கத்தை இன்றைய வேளாண் அறிவியல் மரபு வழி உரமிடு முறைகளில் 'ஆட்டுக்கிடை' என்னும் முறை சிறப்பானது என்கிறது. பகல் முழுமையும் உணவுண்ட ஆடுகள் இரவு சாணத்துடன் சிறுநீரையும் கழிப்பதால் நிலம் வளமுள்ளதாக மாறுகிறது. ஆடுகளின் சிறுநீரும் சாணமும் எதிர்விளைவில்லாத பயனுள்ள இயற்கை உரமாகும்"[3] என்று கூறுவதிலிருந்து சிறந்த இயற்கை வேளாண் அறிவியல் முறை ஆட்டுக்கிடை வைத்தல் என்பதை அறிகிறோம். செயற்கை வேளாண்மையைக் கையாண்டு அதிக விளைச்சலையும் அதே சமயத்தில் அதிக அளவில் கெடுதல்களையும்

மனித இனம் பெற்று விடுகின்ற சூழ்நிலையில் இயற்கை வேளாண்மையை நாட வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப் பட்டுள்ளனர்[4]. செயற்கை முறை ரசாயன உரங்கள் மண்ணின் வளத்தை மிக விரைவில் கெடுத்துவிடுமென்று சொல்லப்படுகின்றது.

"அமெரிக்காவில் இரசாயண உரங்கள் இடாத, குறிப்பாக, இயற்கை உரங்களிட்டுப் பயிரிடப்பட்ட காய்கறிகளுக்கு விலை அதிகம் என்பதும் கருதத்தக்கது[5] எனலாம். காட்டாக முற்காலத்தில் பயிரிடப்பட்ட சம்பா நெல்லரிசியை நாம் இன்று பார்க்க முடியவில்லை. அதிகச் சத்துள்ள வரகு, சாமை, தினை என்பதெல்லாம் மருந்துப் பொருளாகிப் போனதை நாம் அறிவோம். ஆக வேளாண் மக்கள் ஆழ உழவும், இயற்கை உரமும் மண்ணின் வளத்தைப் பாதுகாக்கும் விளைச்சலைப் பெருக்கும் என்று அறிந்திருந்ததை அவர்களின் வழக்காறுகளின் வழி அறிய முடிகின்றது.

மண்வளம் எனும் வகையில்

ஆரை பற்றிய நஞ்சையும்
அருகு பற்றிய புஞ்சையும்

அதாவது அரைக் கீரையும், அருகம்புல்லும் வளரும் பூமி சிறப்புடையது என்றும்,

*"நன்னில் கரந்தை*
நடுநிலம் கொழுஞ்சி"

என்றும்

அருகு பற்றிய செவ்வல்
கோரை பற்றிய கரிசல்

என்றும் நிலங்களின் வளத்தை அறிந்திருந்ததை மேற்கண்ட பழமொழிகள் காட்டும்.

## *விதை விதைப்பும் நடுகையும்*

நெல் மற்றும் தானியக் கதிர்களில் முதலில் விளையும் பெரிய கதிர்களை அறுவடைக்கு முன்பே நாட்கதிர் கொய்தல் எனும் பெயரில் பொங்கலிட்டு வழிபாடு செய்து, கொய்து அதனை அலகு கதிர்களாகச் செய்து இறைவனுக்குப் படைத்து வழிபாடு செய்து அதனை அப்படியே கதிரோடு வைத்திருந்து விதைக்கும் போது மணிகளைப் பிரித்தெடுத்து விதைப்பது நமது முன்னோர் வழக்கம். பள்ளு நூல்களில் இத்தகைய விதை நுட்பம் குறித்த செய்திகள் காணப்படுவதைப் பார்க்க முடிகின்றது. இந்த விதை நேர்த்தியை இன்றைய வேளாண் அறிவியல் "முதலாகக்

கதிர் விடும் மணிகளையே விதைக்காகத் தேர்வு செய்யும் வழக்கத்திலிருந்து அறியப்படும் அறிவியல் நுட்பம் யாதெனில் சத்துப் பொருட்கள் அதிகமாக உள்ளடங்கியிருப்பதாலேயே அக்குறிப்பிட்ட பயிர்த் தாவரம் முதலில் மணிகளை ஈனுகிறது. அம்முதல் விதையிலேயே சத்துப் பொருட்களும் அதிகமாக இருப்பதால் அம்மணிகளே விதைக்காகத் தேர்வு செய்யப்படுகின்றன. இத்தகைய வீரியம் மிக்க விதைகளே நல்ல மகசூலைத் தரும் பயிர்களை உற்பத்தி செய்யும் என்பதனை நம் முன்னோர்கள் அனுபவத்தால் கண்டிருந்திருந்தனர்" [6] என்று கூறுவதிலிருந்து நாட்கதிர் கொய்தல் எனும் நாட்டுப்புறச் சடங்கியல் ஒரு நேர்த்தியான விதைத் தேர்வுத் தொழில் நுட்பம் என்றால் மிகையாகாது. இன்றும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளரின் நீர் நிர்வாகம் செய்யும் மடைகாரர் அல்லது நீராணிக்கர் அல்லது பருவக்காரர் அல்லது நீர்மூப்பர் நெல் அறுவடைக்கு முன்பு இந்த நாட்கதிர் கொய்தலை ஒரு சடங்காகவே செய்து வருவது இங்கு கருதத்தக்கது. இவர் நீர் பாய்ச்சும் தொழிலை மேற்கொள்வதால் முதலில் ஈனும் கதிரை நன்கு அறிந்தவராவார் என்பதும் கருதத்தக்கது.

இவ்வாறு சேமித்து வைக்கிற விதைகளை பருவம் பார்த்து விதைத்தலை கண்ணும் கருத்துமாகக் கொண்டிருந்தனர் என்பதை

"ஆடிப்பட்டம் தேடி விதை"
"பாழில் போட்டாலும் பட்டத்தில் போடு"
"பட்டம் தப்பினால் நட்டம்"
"ஆடி விதைப்பு ஆவணி நடவு"
"கை விதைப்பை விட கலந்த நடுகையே மேல்"
"நெருக்க நட்டு நெல்லைப் பார்"
"கலக்க நட்டுக் கதிரைப் பார்"

என்றவாறான பழமொழிகள் விதைத்தலையும் நடுகையையும் எவ்வாறு காலமறிந்து செய்ய வேண்டுமென்பதை வழியுறுத்தும். நெல் நெடுகை நெருக்கமாகவும் பிற தானியப் பயிர்கள் கலந்த நடவாகவும் அமைய வேண்டுமென்று பழமொழிகள் வலியுறுத்துகின்றன. நெல்லின் சாகுபடிக்கு நடவின் திறமே பெரிதும் வேண்டப்படுகிறது. நெல் நடவின் அளவு நண்டு நுழையுபடி அமைய வேண்டுமென்பதை.

"தென்னைக்குத் தேரோட
வாழைக்கு வண்டியோட
நெல்லுக்கு நண்டோட"

எனும் பழமொழி வலியுறுத்தும். இந்த அளவினையே இன்றைய வேளாண் துறையும் பரிந்துரை செய்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது. நெல் நாற்றுப் பரவுவது ஆடியின் தொடக்கமும் நடுவது ஆவணியின் முதலிலும் அமைந்தால் நெல் நடுகை சிறப்பாக அமையும். காரணம் ஆவணியை அடுத்த புரட்டாசி, ஐப்பசி அடைமழைக் காலம் ஆகும். இந்தக் காலங்களில் நடவு சரியாக வேர் பிடிக்காது என்றும், உரம் வயலில் தங்காது என்றும் சொல்லப்படுகின்றது. காரணம் அதிக மழையால் தண்ணீர் வயலில் தேங்கி நின்றும், ஓடியும் பயிருக்குத் தீங்கு செய்யுமென்பதை நமது முன்னோர் அறிந்திருந்தனர்.

நெல் நடவு குறித்த பல வழக்காறுகள் காணப்படுகின்றன. காட்டாக

"ஒரு சாணுக்கு ஒரு நாத்தா
ஓடி ஓடி நட்டோமையா
முழங்கால் வலி எடுக்க
மூன்று குழி முடித்தோமைய்யா"

என்றும்

சம்பா விதைபோட்டு - சரியான நாத்துவிட்டுப்
பம்பாய் சேலைக்காரி பக்குவமாய் நட்டுவாரா
உழுது தொழிக்கலக்கி - ஒன்னுரெண்டாய் நாத்தெடுத்துப்
பழுது படாமலிருக்கப் பக்குவமாய் நாட்டுவாங்க

என்றும்

"நாலு மூலை வயலுக்குள்ளே
நாத்து நடும் குட்டப் பெண்ணே
நானும் கொஞ்சம் ஏழையடி
நடவக் கொஞ்சம் செறித்துப் போடு"

என்றும் நெல்நடுகை நெருக்கமாக அமைவதை உழத்திப் பாடல்கள் குறிப்பிடும். நெல் நடுகை குனிந்து கொண்டே ஒருகையில் நாற்றுக்கற்றை வைத்துக் கொண்டு இன்னொரு கையில் நடும் பணியாகும். இதனை இன்றும் சிறப்பாகச் செய்பவர்கள் மள்ளர் குலப் பெண்களே ஆவர். இந்தத் தொழில் குறித்து வேளாண்மை அறிஞர் டாக்டர் அருணா இராஜகோபால் வருமாறு குறிப்பிடுவார்.

"நன்செய் நிலத்தில் நாற்று நடுதல் ஒரு பெரும்பணி. நாற்றை ஏற்ற ஆழத்தில் நடுவதற்கு இதுவரை நடவுக் கருவிகள் முழு நிறைவாக இல்லை. புதிய நெல் விதைப்புக் கருவிகள் பிறந்திருக்கின்றன. அவற்றின் பங்கையும் பயனையும் எதிர்காலமே முடிவு செய்ய வேண்டும். நெற் கழனிகளில் நாற்று நடுவது நமது நாட்டில்

பெரும்பாலும் பெண்களே, அல்லது சமுதாயத்தில் தாழ் நிலைக்குத் தள்ளப்பட்ட உழைக்கும் குடிகளே. நெல் நடவு முதுகெலும்பை உடைக்கிற சுமையான பணி அதாவது translanting in back - breaking job என்பார்"[7]. இந்தக் கடுமையிலிருந்து தங்களை விடுவிக்கவே நெல் கழனியில் இம்மக்கள் உழவு தொடர்பான பல பாடல்களைப் பாடி மகிழ்கின்றனர். கழனியில் ஒரு பெண் பாட பிற பெண்கள் பின்பாட்டுப் பாடுவர். இதனைப்

"பண்ணைப் பாட்டுப் பாடினாலும்
பின்னப் பாட்டு வேணுமுங்க"

என்ற பழமொழி உணர்த்தும். இங்கு பெண்கள் பாடி மகிழ்ந்து வேலை செய்தல் பயிர்களுக்கு உரமிடுதல் போன்று இசையூட்டுவதாகவும் அமைகிறது. இன்றைய அறிவியல் பயிர்களின் வளர்ச்சிக்கு இசையையும் பயன்படுத்தலாம் என்று கூறுவதை, வெகு காலத்திற்கு முன்பே உழைக்கும் மக்கள் அறிந்திருந்தனர் எனலாம். மேலும் நாற்று நடவு தொடங்கும் போது குலவை ஒலியெழுப்பித் தொடங்கும் முறையும் இங்கு இசையோடு இணைத்து நினைக்கத்தக்கது.

நெற் பயிர்களின் பெயர்கள் கூட அதன் வடிவம் மற்றும் விளைகின்ற நிலம் சார்ந்த பெயராகவே உழைக்கும் மக்களால் சூட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

"வெள்ளத்தில் விளைவது வெள்ளைச் சாம்பா
கடுக்கன் போன்றது கடுக்கண் சம்பா
காடையின் கழுத்துப் போன்றது காடைக்கழுத்தன்
ஊசி போன்றது வாலான்
சீரகம் போன்றது சீரகச் சம்பா
மூக்கு நீண்டது நெல் மூக்கன்
வாழைக் குலை போன்றது குலை வாழை"

என்றவாறு 100-க்கும் மேற்பட்ட நெல்லின் பெயர்களை அடுக்கிச் சொல்லும் நுண்ணறிவு மிக்க உழவர்களைக் களப் பகுதியில் காண முடிகின்றது. இது போன்றே ஏர் வகை, மாட்டுவகை எல்லாம் நுணுக்கமாக அறிந்து வைத்திருக்கின்றனர். இந்தப் மரபை பள்ளு நூல்களிலும் காண முடிகிறது.

## *களையெடுத்தலும் நீர் நிர்வாகமும்*

பயிர்களுக்குத் தீங்கு செய்யும் தாவரங்களைக் களைவது களையெடுத்தல் ஆகும். இக்களைகள் பயிர்களுக்குரிய நீரையும்

உரத்தையும் எடுத்துக் கொள்வதால் பயிர் வளர்ச்சி தடைபட்டு மகசூல் குன்றிவிடுகிறது. இக்காலத்தில் களைக்கொல்லி மருந்துகளைப் பயன்படுத்துகின்றனர். இவை சில சமயங்களில் பயிர்களையும் தாக்கு கின்றன. நிலமும் பாதிக்கப்படுகிறது. ஆனால் மரபு வழிக் களையெடுப்பு முறையில் குறிப்பாக நெல் மற்றும் சிறிய பயிர்களுக்குப் பெண்களே களையெடுக்கும் பணி செய்கின்றனர். காரணம் பெண்கள் பொறுமையுடன் பயிர்களை வெட்டிவிடாது களைகளை வெட்டுவர் என்று முன்னோர் அறிந்திருந்தனர். வாழை, கரும்பு, தென்னை போன்ற இடைவெளிவிட்டு வளரும் தாவரங்களுக்கு ஆண்கள் மண்வெட்டியால் களைவெட்டுவர், பெண்கள் நெல்லிற்குக் கையாலும் பயிர்களுக்குச் சிறிய கொத்துக் கருவியாலும் களை பறிப்பர். இக்களையெடுத்தல் குறித்த பல வழக்காறுகள் நாட்டுப்புறங்களில் காணப்படுகின்றன. அவை வருமாறு

"கிளைக்கிற போதே களையைக்கிள்ளு"
"களை பிடுங்காப் பயிர் கால் பயிர்"
"வெட்டிக் களை எடுத்தால் கட்டுக் கலம் காணும்"

என்றும்

"கத்தரிக்காத் தோட்டத்திலே
களை வெட்ட நேரமில்லை
வெள்ளிரிக்கா தோட்டத்திலே
வெளையாட நேரமில்லை"

என்றும்

களையெடுத்துப் பயிர் வளப்பாள்
குடும்பனார் பொண்ணு
கண்டிப்பாக உரமும் போடுவாள்
தேவேந்திரன் மகளே

என்றும்

களை எடுக்கறது யாரு
களையை நைசா எடுக்கிறது யாரு

என்றும் களையெடுத்தல் மிக மென்மையாகச் செய்யக் கூடிய தொழில், களை யெடுத்ததும் உரமிட வேண்டும் என்பதையும் பாடல்கள் சுட்டு கின்றன.

பயிர்களுக்கு களையெடுத்த பின்பு நீர் பாய்ச்சுதல் மிக அவசியமானது. அதிலும் நன்செய் விவசாயமான நெல் வேளாண்மை முழுவதும் நீரை மையமிட்டே அமைவது. இதனை "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே" எனும் புறநானூற்றுப் பாடல் விளக்கும்.

இந்த நெல் வேளாண்மையில் வாய்க்கால் பாசனங்களிலும் குளத்துப் பாசனங்களிலும் நீர் நிர்வாகம் செய்ய நீராணிக்கர், மடையர், நீர் முப்பர், நீர் மணியம், நீர்க்கட்டிகள் எனும் பெயரில் மள்ளர் குலத்தோர் தொழில் நுட்ப வல்லுநர்களாகப் பணி செய்கின்றனர். 100 ஏக்கர் நிலப் பரப்பில் நீரைப் பகிர்ந்தளிப்பார்கள். இவர்களுக்குக் கீழுள்ள நீர்க்கட்டிகள் 25 ஏக்கர் பரப்பளவில் தண்ணீரைப் பகிர்ந்தளிப்பார்கள். இவர்கள் தான் கண்மாய், குளம் போன்றவற்றைக் காவல் காக்கும் உரிமையுடையோர் ஆவர். தென் மாவட்டங்களில் குளத்துப் பள்ளர் எனும் ஒரு கூட்டப் பிரிவினரே இருப்பது இங்கு நினைக்கத்தக்கது. இவர்கள் ஒரு கோலால் நீரை அளந்து வாய்க்காலில் விடுவர். வயலில் பாயும் நீரையும் பருவம் அறிந்து அளந்தே பாய்ச்சுவர். இவர்கள் குறித்து ஒரு பாடல் கொங்கு நாட்டில் வழங்குவதைப் பார்க்க முடிகிறது.

"ஓர வாரத்தடி எடுத்து – மாமா நீங்க
உட்டு உட்டு பாப்பீங்க
நீர் வருந் தாரையிலே – மாமா
நிறுத்தி நீங்க பாப்பீங்க
கையாலே தடி எடுத்து – மாமா
கழனி ஆழம் பாப்பீங்க
நீராழம் கண்ட மாமா
நெனப்பெடுத்த சின்ன மாமா
ஓராளப் பாரு மாமா
ஒருத்தி நா இருக்கையிலே
வேறாளப் பாக்காதீங்க"8.

இப்பாடல் நீர் நிர்வாகம் செய்யும் நீராணிக்கரை அவர் செய்யும் தொழிலோடு தன் எண்ணத்தையும் இணைத்துக் காதலாக்கிப் பாடும் பாடலாக அமைவதைக் காண்கின்றோம். இங்கு குறிக்கப்படும் நீராணிக்கரைப் 'பருவகாரர்' என்றும் பழனிப் பகுதியில் அழைப்பர் பயிர்களின் பருவம் கண்டு தண்ணீர் பாய்ச்சுவர் என்பது பொருள். இவ்வகையில் நீர் மேலாண்மை குறித்த ஒரு முறைசாரா நிர்வாக அமைப்பு கிராமங்களில் இருப்பதையும் நாட்டுப்புறப் பாடல்கள் சுட்டத் தவறவில்லை எனலாம்.

### *பயிர்ப் பாதுகாப்பும் அறுவடையும்*

பண்டை நாளில் விலங்குகள் பறவைகள் முதலான உயிர்களிடமிருந்து பயிர்களைக் காக்கக் கையால் இயக்கும் கருவிகளைப் பயன்படுத்தினர். இன்று தானியங்கும் கருவிகளைப் (Automatic Bird Scare)

பயன்படுத்துகின்றனர். அடிப்படை நுட்பம் ஒன்றே என்பது குறிப்பிடத்தக்கது[9].

இன்றும் கிராமங்களில் தானியங்களைக் காக்கப் பரண் அமைத்து அதிலமர்ந்து ஒலி எழுப்பியும், கவண் கல்லெறிந்தும் பறவைகளையும் விலங்குகளையும் விரட்டுவதைக் காணமுடியும். நாட்டுப்புறப் பாடல்களில் வள்ளி பரணிலிருந்து கிளி விரட்டுவதாகப் பாடப்படும் பாடல்கள் அனைத்தும் இந்தத் தொழில் நுட்பத்தைச் சுட்டவே ஆகும். இது தவிர்த்து மள்ளர் உழத்திப் பாடலில் வருமாறு பயிர்ப் பாதுகாப்புப் பற்றிப் பாடப்படுகின்றது.

"குருவிகளும் சிறுவிட்டியும்
கதிரு மேலே கண்ணு வைக்கும்
காட்டெலியும் வீட்டெலியும்
கதிரைப் பொந்தில் கொண்டு சேர்க்கும்
பச்சைக் கிளியும் வெட்டுக் கிளியும்
பச்சை நெல்லைப் பதமாத் தின்னும்"[10].

என்பதான பாடல் சான்று மூலம் பயிர்களுக்கு ஊறு செய்யும் பறவைகள், விலங்குகளை உழவர்கள் அறிந்து அதிலிருந்து பயிர்களைப் பாதுகாத்தலைச் செய்தனர் என்று அறியலாம்.

பறவை, விலங்குகளிடமிருந்து பயிர்களைக் காத்தது போன்றே நோய்களிலிருந்தும் பயிர்களைக் காத்து வருகின்றனர். இன்று நோய்களைக் கட்டுப்படுத்த பல பூச்சி மருந்துகள் வந்துவிட்டாலும் அவை முழுவதுமாகக் கட்டுப்படுத்துவதாக இல்லை. இருப்பினும் மரபு வழியான சில தொழில் நுட்பங்களை அவ்வப்போது பயன்படுத்து வதையும் காணலாம். வேப்பிலை பல்வேறு நிலைகளில் உரமாகப் பயன்படுத்துவது இவர்களிடமிருக்கிற ஒரு உயரிய தொழில் நுட்பம் என்று இன்றைய வேளாண் அறிவியல் கூறுகின்றது. இதே போன்று காய்கறிகளின் பயிர்களில் விழும் பச்சாலைப் பூச்சிகளை ஒழிக்க விளை நிலத்தில் பச்சாலைப் பொங்கல் எனும் பெயரில் பொங்கலிட்டு, செடிகளுக்குச் சாம்புராணிப் புகையூட்டுகின்றனர். இந்த வழக்கத்தால் அதாவது புகை ஏற்படலால் பச்சாலைப் பூச்சிகள் நீங்கி விடுமென்று நம்புகின்றனர். இங்கு நெருப்பால் கவரப்பட்டு பூச்சிகள் சாகுமென்பது அறிவியல் குறிப்பிடும் உண்மை. கார்த்திகை மாதங்களில் சொக்கப்பனை மற்றும் சுளுந்து சுற்றுதலை விளை நிலங்களில் செய்வதைக் காண்கின்றோம். இந்தச் சடங்கினால் பயிர்களில் விழும் பூச்சிகள்

நெருப்பால் கவரப்பட்டு செத்து மடியுமென்று இன்றைய அறிவியல் கூறும் உண்மை. இவ்வாறு பல்வேறு மரபு சார்ந்த தொழில் நுட்பங்கள் நாட்டுப்புற மக்களிடம் இன்றும் வழக்கிலிருப்பதைப் பார்க்க முடியும்.

நெல் வயலில் நெல் விளைந்து அறுவடைக்குத் தயார் ஆவதை நெல் பயிரின் கீழ்ப்பகுதி கருப்பாகி வைக்கோல் தரையில் சாய்தல் சரியான பருவமாகக் கருதுவதனை

"கருப்புத் தந்து பொன்னாகிக்
கதிர் வாங்கிக் கிடக்குதடி
களத்தோரம் வயற்கதிரை
அறுப்பறுக்க ஆளில்லை"

என்று பாடுவதிலிருந்து அறிகிறோம். அறுவடை செய்த கதிர்களைக் கட்டாக்கி, அடித்துத் தூத்தும் முறைகள்.

"தூசி தும்பு நீக்கிப் போட்டு
தூரிலே கோட்டை கட்டி
பூச்சி பொட்டு அரிக்காம
புதுநெல்லுக் கோட்டை கட்டி
மாசி மாச அறுவடையில்
மாணிக்கத்தைச் சேர்த்து வைத்தோம்"

என்றும்

"காத்தடிக்க நெல் தூத்தி
கை மொறத்திலே நாவீசி
நேத்தறுத்த நெல்லெல்லாம்
நேரம் பாத்து அம்பாரம் போட்டு"

என்றும்,

தூத்தத் தூத்தக் கருக்காய்
தூத்திய நெல்லும் கருக்காய்

என்றும்,

நெல்லை எவ்வளவு தான் தூற்றினாலும் கருக்காய் மாறாது என்பதை தூத்தத் தூத்தக் கருக்காய் என்று பாடுவதிலிருந்து அறியமுடியும். அறுவடை செய்த நெல்லை உடனே மூட்டை போடாது ஒருநாள் களத்திலே நன்றாகக் காயச் செய்து உலர்த்திச் சேமிப்பதை "அம்பாரம் போட்டு" "கோட்டைகட்டி" என்று பாடுவதிலிருந்து தெரியமுடியும். இன்று நெல்லைச் சணல் சாக்கில் சேமிப்பது போன்று அக்காலத்தில் "நெற்கதிர்" எனும் பெயரில் வைக்கோல் பிரியால் பின்னப்பட்ட குதிரில் நெல்லைச் சேமித்து வைத்துள்ளனர். இக்குதிர் காற்றும் வெப்பமும்

சரியாகக் கிடைக்கும்படி அமைக்கப்பட்டிருப்பதால் நெல் சேமிப்பின் சரியான தொழில் நுட்பமாக அமைந்திருந்தது எனலாம். இன்றும் கூட விதை நெல்லை இந்த நெற்குதிரில் மள்ளர்கள் சேமித்து வைத்திருப்பதைக் கிராமங்களில் காண முடியும்.

## *தொகுப்புரை*

பண்டு தொட்டு இன்றுவரை வேளாண்மையை உயிர் மூச்சாகக் கொண்டு வாழ்ந்து வரும் பெருந்திறல் உழவரான மள்ளர்களின் நாட்டுப் புற வழக்காறுகளில் மரபு வழி சார்ந்த பல வேளாண் தொழில் நுட்பங்கள் குறித்த செய்திகள் காணக்கிடப்பதை இக்கட்டுரை கோடிட்டுக் காட்டப் முயன்றிருக்கின்றது.

## *குறிப்புகள்*

1. கந்தசாமி, இல.செ. தமிழர் வேளாண்மை மரபுகள், ப. 9.
2. மேலது
3. சுந்தரம், இராம, வேளாண் அறிவியல் வளர்ச்சி, ப. 330
4. மேலது, ப. 263
5. மேலது, ப. 125
6. சுந்தரம், இராம, இலக்கியமும் வேளாண்மையும், ப. 17.
7. அருணா இராசகோபால், நன்செய் நில உற்பத்தி உறவுகள், மள்ளர் மலர், நவம்பர், 1999, பக். 14-16.
8. அருச்சுனன், ஓ.கே., பெரியார் மாவட்டத்தில் பண்ணைப் பாடல்கள், வெளியிடப்படாத முனைவர் பட்ட ஆய்வேடு.
9. கந்தசாமி, இல.செ., மு.கா.ப. ப. 127
10. அருச்சுனன், ஓ.கே., மு.கா.ப.

OOO

(தஞ்சாவூர் தமிழ் பல்கலைக் கழக நாட்டுப்புறவியல் துறைக் கருத்தரங்கில் 23.03.2000 அன்று வாசித்து அளிக்கப்பட்ட கட்டுரை)



## ஆசிரியரின் நூல்கள்

1. மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள் - 1986
2. நாட்டுப்புறச்சமயம் தோற்றமும் வளர்ச்சியும் - 1992
3. நாயக்கர் காலம் - நாட்டுப்புறத் தெய்வக் கதைகள் - 1993
4. தலித் சிந்தனை விவாதம் - 1998
5. தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார் - 2000
6. மள்ளரியமும் இலக்கியமும் - 2000
7. இந்திரா விழா எனும் நாற்று நடவுத் திருவிழா - 2000
8. மந்திரம் சடங்குகள் சமயம் - 2000

## பதிப்பாசிரியர்

9. சிற்பியின் படைப்புக் கலை - 1995
10. சிற்பி மரபும் புதுமையும் - 1998

## இணைப்பதிப்பாசிரியர்

11. தமிழர் பண்பாட்டு வரலாறு (தொகுதி 1) - 1996
12. தமிழர் பண்பாட்டு வரலாறு (தொகுதி 2) - 1998
13. நாட்டுப்புற மருத்துவம் - 1999
14. தமிழர் பண்பாட்டு வரலாறு (தொகுதி 3) - 2000
15. நட்பு (மள்ளரியச் சிறுகதைகள்) - 2000